# தமிழ் நாளிதழ்களின் மொழிநடை

முனைவர் ப.மங்கையற்கரசி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

தினமலர் இராம சுப்பையர் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியது : தினமலர்)

வரிசை எண் : 6 நாள்: 05.10.2013

## நூல் விவரக்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | தமிழ் நாளிதழ்களின் மொழிநடை |
| ஆசிரியர் | : | முனைவர் ப. மங்கையற்கரசி<br>உதவிப் பேராசிரியர்<br>மொழியியல் துறை<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்<br>தஞ்சாவூர் |
| பொதுப்பதிப்பாசிரியர் | : | முனைவர் கு. சிதம்பரம்<br>உதவிப் பேராசிரியர்<br>அயல்நாட்டுத் தமிழர் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>தரமணி, சென்னை-600 113<br>தொலைபேசி எண். 044 - 22542992 |
| வெளியீட்டு எண் | : | 757 |
| தரக்குறியீட்டு எண் (ISBN) | : | 978-81-925359-4-4 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2013 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டிஎன்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 அளவு |
| பக்க எண்ணிக்கை | : | x+142 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 70/- (ரூபாய் எழுபது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீ சரவணா அச்சகம்<br>144, தம்பு செட்டித் தெரு<br>சென்னை-6 00 001<br>தொ.பேசி. 044-25356166 |
| பொருண்மை | : | மொழியியல் |

முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

## அணிந்துரை

இந்தியா எனும் வல்லரசைத் தாங்கி நிற்கும் தூண்களில் இதழியல் துறையும் ஒன்றாக உள்ளது. தமிழ் மொழி வளர்ச்சிக்கும் தமிழர் அரசியல் பண்பாட்டு பரவலாகத்திற்கும் பெரிதும் துணைப் புரிந்து வருகின்ற நாளிதழ்களில்-'தினமலர்', 'தினமணி', 'தினத்தந்தி' ஆகிய நாளிதழ்கள் மிக முக்கிய பங்காற்றி வருகின்றன. டி.வி. இராம. சுப்பையர் அவர்களால் 1951ஆம் ஆண்டு தொடங்கப்பட்டு அன்று முதல் இன்று வரை தமிழ் மொழி வளர்ச்சிக்கு வரலாறு போற்றத்தக்க வகையில் அரும்பணியாற்றி வருகின்ற இதழ்களில் ஒன்றாக திகழ்வது 'தினமலர்' நாளிதழ். அனைத்து தரப்பு மக்களும் புரிந்துகொள்ளும் வகையில் அன்றாட அரசியல் செய்திகளையும் நாட்டு நடப்புகளையும் எளிய மொழிநடையில் கொடுத்து மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டி வரும் இதழாகவும் இது இருந்து வருகின்றது. மேலும், உலகத் தமிழர்களை ஒன்றிணைக்கும் வகையில், இணையத்தின் வழியாகவும் 'தினமலர்' நாளிதழ் மிகச் சிறப்பாக வெளியிடப்பட்டு வருகின்றது. இதன்மூலம் இணையத் தமிழையும் வளர்த்து வருவது 'தினமலர்' நாளிதழ் என்றால் மிகையாகாது.

1934ஆம் ஆண்டு செப்டம்பர் 11ஆம் நாள் பாரதி நினைவு நாளில் தொடங்கப்பட்டு- 'தினமணி' நாளிதழ். 'தினமணி' நாளிதழ் தனக்கென சிறப்பானதொரு எழுத்து வழக்கு நடையைப் பின்பற்றி, நன்கு படித்த மேல்தட்டு மக்களைக் கவரக்கூடிய வகையில் தரமான செய்திகளை வழங்கி வருகின்றது. நாட்டைப் பாதிக்கும் எத்தகைய சிக்கலைக் குறித்தும் தனது கருத்தைக் கூறவேண்டும். அச்சிக்களைக் குறித்து விரிவாக விளக்கி மக்களுக்கு புரிய வைக்க வேண்டும் என்ற இலக்கோடு அரசியல் சார்பற்று இயங்கி வரும் இதழ்- 'தினமணி' நாளிதழ் எனலாம்.

சி.பா. ஆதித்தனார் அவர்களால் சுதந்திரப் போராட்ட காலகட்டத்தில் 1942இல் தொடங்கப்பட்ட 'தினத்தந்தி' நாளிதழ் தமிழ் மொழி வளர்ச்சிக்கு சிறப்பானதொரு பங்கை ஆற்றி வருகின்றது. பேச்சு வழக்கு கலந்த எளிய மொழிநடையில் சமூகம் சார்ந்த செய்திகளைச் சுடசுட பாமர மக்களுக்கு தந்து, சமூக அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்தி வரும் இதழாகவும் இருந்து வருவது 'தினத்தந்தி' நாளிதழ் எனலாம்.

நாளிதழ்களில் பயன்படுத்தப்படும் மொழிநடை, மொழிப் பயன்பாடு, மொழியமைப்பு, ஒலியன்கள் உருபன்கள், சொற்கள், தொடர்கள், பிறமொழிக்கூறுகள், உருபொலியன் மாற்றங்கள் ஆகியவற்றை எடுத்துக்கூறி 'தினமலர்', 'தினமணி', 'தினத்தந்தி' ஆகிய நாளிதழ்களின் மொழிநடை மற்றும் மொழிப்பயன்பாடு ஆகியவற்றை ஒப்பு நோக்கி ''தமிழ் மொழி வளர்ச்சிக்கு நாளிதழ்களின் பங்களிப்பு'' எனும் தலைப்பில் இப்பொழிவு அமைகிறது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில், 'தினமலர்' இராம சுப்பையர் அவர்களின் பெயரில் அமைந்துள்ள இவ்வறக்கட்டளையின் ஆறாவது பொழிவாக அமைவது பொருத்தமான ஒன்றாகும். இப்பொழிவு நூல் மொழிநடை குறித்து நடைபெறுகின்ற ஆய்வுகளுக்கு உறுதுணையாக அமையும் என்பது கூடுதல் சிறப்பாக உள்ளது. நூலாசிரியருக்கு எனது பாராட்டுகள்.

இப்பொழிவிற்கு உறுதுணையாக இருந்து, நூல் வெறிவருவதற்கு துணைபுரிந்த இவ்வறக்கட்டளையின் பொறுப்பாளரான இந்நிறுவன உதவிப் பேராசிரியர் முனைவர் கு. சிதம்பரம் அவர்களுக்கும் எனது பாராட்டுகள்.

தமிழ் வளர்ச்சிக்கும். இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **மாண்புமிகு தொழிற்கல்வி உள்ளிட்ட உயர்கல்வி, மின்னணுவியல், அறிவியல், தொழில் நுட்பவியல், தொல்லியல், தமிழ் ஆட்சி மொழி மற்றும் தமிழ்ப்பண்பாடு, உயர்கல்வி துறை, பள்ளிக் கல்வி துறை, இளைஞர் நலன் (ம) விளையாட்டு மேம்பாட்டுத்துறை அமைச்சர் பி.பழனியப்பன்** அவர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ்நாடு அரசின் **தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறைச் செயலாளர் முனைவர் மூ.இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எமது மனமுவந்த நன்றி.

இந்நூல் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் முனைவர் ஆ.தசரதன் அவர்களுக்கும், இவ்வறக்கட்டளை அமைப்புக்கு உரிய அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், இளநிலை உதவியாளர் மற்றும் தட்டச்சர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும் எம் பாராட்டுகள். இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த இலட்சுமி முகவாண்மை அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# முகவுரை

உலகில் அனைத்து உயிரினங்களுக்கும் கருத்துப் பரிமாற்றம் அவசியமான ஒன்றாகிறது. விலங்குகள், பறவைகள் ஒருவித ஓசை எழுப்புவதன் வாயிலாக தனது கருத்தினை வெளிப்படுத்துகின்றன. அவ்வோசையைப் புரிந்து அதனை வெளிப்படுத்த மனிதன் முற்பட்டு அம்முயற்சியில் வெற்றியும் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

அந்தவகையில், மனித இனத்தின் கருத்துப் பரிமாற்றமும் ஓசை வழி புலப்படுத்தப்படுகிறது. ஓர் இனத்திற்குப் புரியக் கூடிய வகையில் ஒரு கருத்தினை ஒலிவழிப் புலப்படுத்த மொழியப்படும் உத்தியே மொழி என்பர். இது ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் இருக்க வேண்டியது அவசியம். கருத்துப் புலப்பாட்டை எடுத்துச் சொல்ல எளிமையான நடையுடன் கூடிய எளிமையான போக்கு அதன் விரிவான விளக்கத்தைப் பெற்றிருத்தல் வேண்டும். உரை வெளிப்பாட்டினை; உணர்ச்சி வெளிப்பாட்டினை; கருத்துப் புலப்பாட்டினை முறையாக வெளிப்படுத்த வரையறுக்கப்பட்ட குறிக்கோளுடன் அமைவது மொழி.

தமிழ் பேசும் மக்கள் பல நாடுகளிலும் விரிந்து வாழ்கின்றனர். இருப்பினும் ஆங்கிலேயக் காலனி ஆதிக்கத்தின்கீழ் இருந்த நாடுகளில் ஆங்கில மொழித் தாக்கம் பெரும்பாலும் தவிர்க்க முடியாததாகிவிட்டது. மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நிற்பது அதைப் பெருமளவில் பயன்படுத்தும் கருவிகளேயாகும். அவ்வகையில் நாளிதழ்கள் மொழிப் பயன்பாட்டின் முன்மாதிரியாக விளங்கும் நிலையில் அவற்றில் பயன்படுத்தப்படும் மொழி அமைப்பையும் மொழிநடையையும் மொழி ஆய்விற்கு உட்படுத்திப் பார்ப்பது அவசியம். அதன் வாயிலாக மொழி வளர்ச்சியை அளவிடலாம்.

பண்டைய காலத்தில் கருத்தை சமுதாயத்திற்குத் தெரிவிக்க தெருக்கூத்து, கிராமிய நடனம், பொம்மலாட்டம், கதை சொல்லுதல், முரசு அறைதல் போன்ற முறைகளைப் பயன்படுத்தினர். பின் அதை ஓலைச் சுவடி, துணி இவற்றில் பதிந்தனர். அறிக்கையை எழுதி செய்தியைப் பரப்பவும் முற்பட்டனர். நாகரிக வளர்ச்சியின் பயனாக காகிதம் வரத்தொடங்கிய பின்னர் அச்சுக் கலை முகிழ்த்தது. இன்று இக்கலை படிப்படியாக குறிப்பிடத்தக்க சாதனை படைத்து மேலும் வளர்ந்து வருகிறது. இன்று அச்சுருவாக்கம், பதிப்பித்தல் பணி துரிதமாக நடைபெறுகிறது. இதற்கு ஈடுகொடுக்கும் வகையில் இன்றைய நாளிதழ்கள் செயல்பட்டு வருகின்றன.

ஒரு நூலில் கையாளப்பட்டுள்ள மொழிப் பயன்பாடும் அதன் நடையும் மாற வாய்ப்பில்லை. நாளிதழில் அன்றாடம் கையாளப்படும் மொழிப் பயன்பாடு, மொழி நடை அதனைப் பயன்படுத்துபவர் திறனுக்கேற்ப, சமுதாய மேன்மைக்கேற்ப மாறுபடலாம். எனவே, மொழியை அதன் பன்முகநோக்கில் பார்ப்பதன் வாயிலாகத் தமிழ் மொழி எவ்வாறெல்லாம் அதன் தனித்தன்மையில் வளர்ந்து வருகிறது என்பதைக் காணமுடியும்.

நாளிதழ்களின் மொழிப் பயன்பாடு, அன்றாடம் மொழிக்கு ஆக்கமும் ஊக்கமுமளித்து வளர்ச்சிப் பாதைக்கு வித்திடுவதாக அமைகிறது. மொழியின் வளர்ச்சியைக் கணக்கிட நாளிதழ்கள் முக்கியக் கருவியாக விளங்குகின்றன. நாளிதழ்களில் மொழி தன் செல்வாக்கை நாளும் உயர்த்துகிறது என்றால் அது மிகையாகாது.

இன்றைய சமுதாய வளர்ச்சியில் நாளும் பலப்பல புதுச் சொற்பயன்பாடு தோன்றுவது இயல்பே. மேலும், அதனை அளவிட வேண்டியதும் அவசியமாகிறது.

இதனை மேம்போக்காகப் பார்க்காமல் இன்றைய பாரம்பரியமிக்க தமிழ் நாளிதழ்களின் மூலம் மொழி நடையை விரிவாக ஒப்புநோக்கி விளக்குவதன் வாயிலாக செய்திகளை வெளிப்படுத்துவதில் நாளிதழ்கள் கையாளும் உத்திகள் மற்றும் அதன் மொழிப்பயன்பாட்டின் அடிப்படையில் நாளிதழை நாளும் வளர்ச்சிப் பாதைக்கு எவ்வாறு எடுத்துச் செல்கிறது என்பதைச் சுட்டிக் காட்ட முடியும்.

*"அறிஞர் தம் இதய ஓடை*
*ஆடிநீர் தன்னைக் கொண்டு*
*செறிதரும் மக்கள் எண்ணம்*
*செழித்திட ஊற்றி ஊற்றிக்*
*குறுகிய செயல்கள் தீர்த்துக்*
*குவலயம் ஓங்கச் செய்வாய்!*
*நறுமண இதழ்ப் பெண்ணே உன்*
*நலம் காணோர் ஞாலம் காணார்"*

என்றார் பாரதிதாசன்.

தமிழ் நாளிதழ்கள் தொடக்கக் காலத்தில் பின்பற்றிய மொழி நடையிலிருந்து தற்போதைய மொழிநடை பெரிதும் மாற்றமடைந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அறிவியலில் நாளும் பன்முக வளர்ச்சி பெற்றுவரும் இந்நூற்றாண்டில் மொழி வளர்ச்சிக்கு அடிப்படையாகத் திகழ்வது நாளிதழ்கள். அந்தவகையில், தமிழ் நாளிதழில் மொழிநடை எவ்வாறு மாற்றம் பெற்றுள்ளது என்பதைக் கணக்கிட காலம் கருதி இன்றைய பயன்பாட்டிலுள்ள பாரம்பரியமிக்க

தினமலர், தினமணி, தினத்தந்தி ஆகிய நாளிதழ்களின் மொழிநடை உத்தியை அளவிடுதல் சாலச் சிறந்தது என்ற நோக்கில் இந்நூலில் விரிவாக விளக்க முற்பட்டுள்ளேன். தமிழ்கூறும் நல்லுலகம் இதனைப் பெற்றுப் பயன்பெற வேண்டுமென விழைகிறேன்.

நாட்டின் வளர்ச்சியோடு மொழியின் வளர்ச்சி என்றும் பின்னிப் பிணைந்துள்ளது. அந்தவகையில் மொழிக்கு, குறிப்பாகத் தமிழ் மொழிக்கும் பயனுள்ள நல்ல தமிழ் சமுதாயத்திற்கும் இந்தப் பணி பெரிதும் வளம்சேர்க்க வேண்டும் என்ற நோக்கில் முனைப்புடன் செயற்பட்டதன் விளைவே இன்று நூலாக்கம் பெற்றுள்ளது. இப்படைப்பில் குறையேதுமிருப்பின் வெளிப்படையாகத் தெரிவித்தால் அதனை மகிழ்வோடு ஏற்று என்னைத் திருத்திக் கொள்ள நான் எப்பொழுதும் கடமைப்பட்டுள்ளேன்.

என்னையும் ஒரு பொருட்டாகக் கருதி எனக்கு இந்த அரிய வாய்ப்பை நல்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கும், அதனைத் திறம்பட வழி நடத்தும் நற்பண்பாளர் முனைவர் கோ.விசயராகவன், இயக்குநர் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூல் வெளிவரக் காரணமாக அமைந்த தினமலர் இராமசுப்பையர் அறக்கட்டளைக்கும் அதன் பொறுப்பாளர் முனைவர் கு. சிதம்பரம், உதவிப்பேராசிரியர், அயல்நாட்டுத் தமிழர் புலம் அவர்களுக்கும், கல்விப் பணியில் சிறந்து செயலாற்ற ஆக்கமும் ஊக்கமும் எனக்கு அளித்து நாளும் என்னை வளர்த்துவரும் தமிழ்ப் பல்கலைக்கழகத்துக்கும் அதன் செயற்பாட்டினை மேலோங்கச் செய்வதில் முனைப்புடன் செயலாற்றிவரும் பெருமகனார் முனைவர் ம. திருமலை, தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் அவர்களுக்கும் துறைபோகிய சான்றோர் பெருமக்கள் அனைவருக்கும் இந்த இனிய வேளையில் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவிக்கக் கடமைபட்டுள்ளேன்.

வெல்க தமிழ்!

ப.மங்கையற்கரசி

## ஆசிரியர் குறிப்பு



முனைவர் ப. மங்கையற்கரசி அவர்கள் பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி பழனியில் இளங்கலைப் பட்டமும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் முதுகலைப் பட்டமும், ஆய்வியல் நிறைஞர் பட்டமும் பெற்றவர். இந்திய மொழிகளின் நடுவண் நிறுவன ஆய்வு உதவித்தொகை (Fellowship) உதவியுடன் முனைவர் பட்டததை பாரதியார் பல்கலைக்கழகம் கோயம்புத்தூரில் முடித்தவர். முடித்தவுடன் மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியல் துறையில் கௌரவ விரிவுரையாளராகவும் (Guest Lecturer) மைசூரில் உள்ள இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம் இந்திய மொழிகளுக்கான பன்னோக்கு மதிப்பீட்டு மையம் (MILES - Multi Purpose Indian Language Evaluation System) எனும் ஆய்வுத் திட்டத்தில் இளநிலை ஆய்வுத் தகைமையாளராக இந்திய தேசிய நூள்தேர்வு மையம் (NTS-National Testing Service India) எனும் ஆய்வுத் திட்டத்தில் இளநிலை ஆய்வு தகைமையாளராகப் பணியாற்றியுள்ளார். அக்டோபர் 2007 முதல் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக மொழியியல் துறையில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். ஆறு ஆண்டுகள் கற்பித்தல் அனுபவமும் பத்து ஆண்டுகள் ஆராய்ச்சி அனுபவமும் பெற்றவர். பல்கலைக்கழக மானியக்குழு நிதி நல்கையின் உதவியுடன் தமிழ்நாட்டு நகர்ப்புற மற்றும் கிராமப்புற பள்ளி மாணவர்களின் மொழிச்சமூகமாக்கம் என்ற தலைப்பில் ஆய்வுத் திட்டத்தை முடித்துள்ளார். மேலும் 2010இல் அகில இந்திய வானொலி நிலையம் திருச்சிராப்பள்ளியில் கேள்விச் செல்வம்-மொழியும் மொழியியலும் நேர்முகம் என்ற நிகழ்ச்சியில் பங்கேற்று உரையாடி யுள்ளார். அவருடைய வழிகாட்டுதலின் கீழ் பதினைந்து ஆய்வியல் நிறைஞர் மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டத்தைப் பெற்றுள்ளனர். அவர் வழிகாட்டுதலின் கீழ் நான்கு முனைவர்பட்ட மாணவர்கள் ஆய்வை மேற்கொண்டு வருகின்றார். மொழியியல் மற்றும் பயன்பாட்டு மொழியியல் என்ற ஆய்வுப் பரப்பில் பதினைந்திற்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை நூல்களில் வெளியிட்டுள்ளார்

# உள்ளடக்கம்

பக்கம்

# தமிழ்நாளிதழ்கள் ஒரு கண்ணோட்டம்

ஒரு செய்தி அல்லது நிகழ்வு ஒரு சிலருக்குப் பயனுள்ள தகவலாகவும் ஒரு சிலருக்குச் செய்தியாகவும், வேறு சிலருக்குத் தேவையற்ற ஒன்றாகவும், புதிய புதிராகவும் அதை ஏற்றுக் கொள்பவர் மனநிலைக்கேற்பப் பல்வேறு நிலைகளில் அமையலாம். அன்றாடம் மக்களை வழிநடத்தி வாழ்க்கைக்கு வளம் சேர்க்கும் மக்கள் தகவல் தொடர்புச் சாதனங்களுள் மிகவும் முக்கியப் பங்கு வகிப்பதோடு பரவல் செய்தித் தொடர்பிலும் முதன்மையான இடத்தை நாளிதழ்கள் பெற்றுள்ளன. மக்களின் கருத்தைப் பிரதிபலித்து, நல்லனவற்றைப் பாராட்டி, தவறைச் சுட்டிக்காட்டவும் தயங்காது, நாட்டு நடப்புச் செய்தியை எடுத்துரைக்கும் சிறந்த ஊடகமாகவும் இதழ்கள் விளங்குகின்றன.

'ஜெர்னலிசம்' (Journalism) என்ற ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம் 'இதழியல்'. இந்தச் சொல்

> டயர்னல் (Diurnal) என்ற பழைய இலத்தின் மொழிச் சொல்லில் இருந்து பிறந்தது. 'சர்னல்' 'டையர்னல்' என்றால் 'அன்று' (அன்றாடம்) என்று பொருள். 'சர்னல் என்றால் அன்றாடம் நடந்ததை எழுதிவைக்கும் ஏடு' என்று பொருள்படும். வாசுகோடகாமாவின் பயணநூல் 'எ சர்னல் ஆப் தி பஸ்டு வாயேஜ் ஆப் வாசுகோடாகாமா' என்று பெயர்பெற்றது. ஆனால் இப்பொழுது 'சர்னல்' என்பது 'இதழ்'களையே குறிக்கிறது" (சாமி,அ.மா.1987:83).



மக்களின் சிந்தனை உணர்வைத் தூண்டிச் சமுதாய விழிப்புணர்வை ஏற்படுத்தி, வாழ்வில் வளம் சேர்க்க உறுதுணையாக அமையும் செய்தியைத் தாங்கி வருவது இதழ்கள். குறிப்பாக, நாய் மனிதரைக் கடித்தது செய்தியாகாது. ஆனால், மனிதன் நாயைக் கடித்தான் என்பது வியப்பளிக்கக்கூடிய செய்தியாகும். மேலும், மாடு மனிதனை முட்டியது என்பது செய்தியாகாது, மாறாக மனிதன் மாட்டை முட்டினான் என்பது வியப்பளிக்கக்கூடிய செய்தியாக அமையும். அதாவது மக்களின் ஆர்வத்திற்குத் தீனியாக அமையக்கூடிய முதலில் தரப்படுகின்ற எத்தகைய முக்கியத் தகவலும் செய்தியாகிறது (கலைவாணி, சோ. 1988:197).

நடந்த நிகழ்ச்சியை உடனுக்குடன் காலந்தாழ்த்தாமல் அறிந்து கொள்ளவே எல்லோரும் விரும்புவர். தன்னருகில் என்ன நடக்கிறது என்பதை அறிந்துகொள்ள விரும்புவது மனித இயல்பே. வெகு தொலைவில் நடப்பதைக் காட்டிலும் அருகில் நடக்கும் நிகழ்வுகள்தாம் ஒரு மனிதனை அதிகம் பாதிக்கும். புதுமையான, அசாதாரணமான, வழக்கத்திற்கு மாறான பெரும் விளைவை ஏற்படுத்தும் எந்தவொரு நிகழ்ச்சியும் செய்தியாகும். உலகிலேயே மிக நீளமான கடிதம், மிகப் பெரிய கிறித்துமஸ் கேக், இரயில் என்ஜினைப் பல்லால் இழுக்கும் நவீன பீமன், நீண்ட நேரம் நீரில் மிதந்து சாதனை புரிவது, இரண்டு தலை ஆட்டுக்குட்டி இவையெல்லாம் செய்திகளாக வெளிவருவதற்கு அவற்றில் உள்ள புதுமைகள்தாம் காரணம்.

இவைபோன்ற செய்திகளையும் பயனுள்ள தகவல்களையும் அன்றாடம் குறிப்பிட்ட நேரத்தில் விரைந்து நாள்தோறும் தருவது நாளிதழ்களாகும். பல்துறைப் பரிணாம அறிவியல் வளர்ச்சிக்கேற்பப் பல்வேறு பரிமாணங்களை மொழி பெற்றுவருகின்றது. தமிழ் மொழிப்பயன்பாடு பல்துறையிலும் பல்கிப்பெருகியுள்ள இன்றைய நிலையில், தமிழ் மொழியைப் பல்துறைப் பயன்பாட்டிற்கேற்ப ஆக்கிக் கொள்வதற்குப் பல்வேறு திட்டங்களும் வழிமுறைகளும் பின்பற்றப்பட்டு அவற்றைச் செயல்படுத்த நடவடிக்கைகள் பல மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

"ஏற்றமுறச் செய்வதும், மாற்றமுறச்
செய்வதும் ஏடேயாகும்" – பாரதிதாசன்

அறிவியல் வளர வளர நாளுக்கு நாள் உலகம் பல்துறையிலும் வளர்ச்சி பெற்று வருகிறது. உலகத்தில் பலநாட்டு மக்களும் தங்களுக்குள் ஓர் உறவை ஏற்படுத்திக் கொண்டு நெருக்கமான பிணைப்பால் வாழும் இன்றைய சூழ்நிலையில் அன்றாடம் நடக்கும் நிகழ்வுகளை அறிந்துகொள்ளத் துடிப்பது இயல்பு. இதனை நிறைவேற்றுவதில் இதழ்களின் பங்கு முக்கியவிடத்தை வகிக்கிறது.

மக்களாட்சியில், மக்கள் உரிமையைக் காக்கும் அரசியல் அமைப்பின்படி நான்காவது அமைப்பாக (fourth estate) இதழ்கள் உள்ளன. நாட்டில் அன்றாடம் நிகழும் குறை நிறைகளைக் கவனித்து மோப்பமிட்டுக் கண்டறிந்து அவற்றை எடுத்துரைக்கவும், தடுக்கவும்வல்ல தகுதிபடைத்த கண்காணிக்கும் ஊடகம் (watch dog of the democracy) என்றும் இதழ்களைச் செல்லமாக அழைப்பர்.

## தமிழ் நாளிதழ்

ஐரோப்பிய மற்றும் அமெரிக்க நாட்டில் உள்ள முதல்தர அச்சு இயந்திரம், நூலகம், அருஞ்சுவடிக் காப்பகம் (archieves), பெயர் வரிசையைக் காட்டும் துறைகள் (index department) முதலான வசதிகளும் சாதனங்களும் அனைத்துத் தமிழ்ச் செய்தித்தாள் நிறுவனங்களும் பெற்றிருக்க வாய்ப்பில்லை. செய்தியாளர்களை வெளிநாட்டிற்கு அனுப்பிச் செய்தி சேகரிப்பதில் அதிகச் சிரமமிருந்ததால், செய்தி நிறுவனங்களையும் மொழிபெயர்ப்பையும் நம்பியே தமிழ் நாளிதழ்கள் இருந்தன. ஆங்கிலச் செய்தித் தாள்களில் வெளிவந்த செய்திகளை மாற்றாமலும், அச்செய்திகளுக்கு எந்தக் கருத்தும் கூறாமலும் அதனை அப்படியே தமிழ் நாளிதழ்கள் மொழிபெயர்த்து வெளியிட்டன. பெரும்பாலும் உள்நாட்டுச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

மக்களுக்கு அரசியலைப் புகட்டி அவர்களுடைய உணர்ச்சியையும் ஆர்வத்தையும் வளர்ப்பதற்காக 1882ஆம் ஆண்டு ஜி.சுப்பிரமணிய அய்யரால் சுதேசமித்திரன் இதழ் தொடங்கப்பட்டு, பின்னர் வாரம் இருமுறையாகவும், மும்முறையாகவும் 1889இல் நாளிதழாகவும் வெளிவந்தது.

நாளிதழ்கள் மொழிப்பயன்பாட்டின் முன்மாதிரியாகக் கருதப்படுகின்றன. தொடக்கக் காலத்தில் செய்தித்தாள்கள் குறிப்பாக, சென்னையில் குடியேறியிருந்த வெள்ளையர்களின் தேவைகளை நிறைவு செய்யும் நோக்கில் வெளியிடப்பட்டன. இவை தவிரத் திராவிட இயக்கங்களின் சார்பாகப் பல செய்தித் தாள்கள் வெளிவந்தன. விடுதலைக்குப்பிறகு தமிழகத்தில் ஏராளமான செய்தித் தாள்கள் வெளிவரத் தொடங்கின.

தமிழ் நாளிதழ்களின் எண்ணிக்கை மிகுந்திருந்தாலும், நாளிதழ் மற்றும் பருவ இதழ்களின் உள்ளடக்கம் எதிர்பார்த்த அளவு மன நிறைவளிப்பதாக இல்லை. பொதுவாக, நாளிதழ்கள் வாசகர் விருப்பத்தையும் எதிர்பார்ப்பையும் நிறைவு செய்தால்தான் வெற்றி பெறமுடியும். அவ்வகையில் தமிழ் நாளிதழ்கள் செயல்படுகின்றன.

ஒரு நாளிதழ் எவ்வளவு செய்தியை வெளியிடுகிறது; அதை எப்படி வெளியிடுகிறது என்பதைப் பொறுத்து அதன் சிறப்பு அம்சம் அமையும். ஒரு பெண்ணுக்கு ஆடையும், அணிகலனும், ஒப்பனையும் அவள் அழகிற்கு மேலும் அழகு சேர்ப்பதுபோல ஓர் இதழுக்கு, குறிப்பாக நாளிதழுக்குப் பக்க வடிவமைப்பும், எழுத்துக்களும் அதற்கு மெருகூட்டுகின்றன. குறிப்பிட்ட நாளிதழைப் படிக்கத் தூண்டுவதற்கு அதன் வடிவமைப்பும் ஒரு காரணமாக அமையலாம். சிறப்பான முறையில் நல்ல செய்தியை விரிவாக எடுத்துரைக்கும் நாளிதழ் மக்களின் வரவேற்பை என்றென்றும் பெறும் என்பது உண்மை.

## செய்தியை வெளிப்படுத்தும் உத்தி

உலகில் பேச்சு மொழி முதலில் தோன்றியது. பின்னர் எழுத்து மொழி தோன்றியது. அதாவது, ஒலிவடிவம் தோன்றிய பின்னரே வரிவடிவம் தோன்றியது. மனிதன் குழுவாகவும் ஒற்றுமையாகவும் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ மொழி உதவிசெய்கிறது. மனிதனின் அனைத்துச் செயல்களும் தொடர்பியலில் அடங்கியுள்ளன. சில நேரங்களில் மொழியும் தொடர்பியலில் பயனற்றுப் போகலாம்.

கடலில் தனிமையில் மீன் பிடிக்கும் மீனவனின் படகு செயலிழக்கும்போது, அவனது கூச்சல் பயனற்றதாகிவிடுவதைப்போல, இங்கு மொழியும் சொற்களும் பயனற்றுவிடுகின்றன. சாலையில் வாகனங்கள் எழுப்பும் ஒலியினால் ஒருவன் சாலையைவிட்டு விலகாவிட்டால் ஒலியினால் பயனில்லை. குறிப்பிட்ட ஒரு படம் எந்தச் செய்தியையும் பிறருக்கு வழங்கவில்லை எனில் அதனால் பயனில்லை. இங்குப் பெறுநரின் மனநிலை சிறந்த இடத்தைப் பெறுகிறது. இதனையே செய்தியை வெளிப்படுத்துவதில் ஏற்படக்கூடிய தடைகளாகக் கொள்ளலாம்.

ஓர் இதழ் தனித்தன்மையுடன் விளங்கினால்தான் அதன் செல்வாக்குப் பெருகும். அதன் விளைவாக அந்நாளிதழ் விற்பனை எண்ணிக்கை அதிகரிக்கும். புதுப்புது மாற்றங்கள், சீராகக் கடைப்பிடிக்கும் நெறிமுறைகள் அனைத்தும் இதழியல் உத்திகளில் அடங்கும். ஒரு கலைஞன் தன் துறையின் செவ்விய வெளிப்பாட்டிற்குப் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தி எனப்படும். குறிப்பாக, "இதழாசிரியர் தமது கருத்தை வெளிப்படுத்தும் திறனே உத்தி" எனப்படும்.

அந்தவகையில், அன்றாடச் செய்திகளை உடனுக்குடன் சுவையுடன் மக்களுக்குக் கொடுப்பதன் வாயிலாக நாளிதழ்கள் தமக்கென ஓரிடத்தை மக்களிடையே பெறுகின்றன என்றால் அது மிகையாகாது.

## வரிவடிவ உத்தி

செய்திகளை எழுதும்போது, வரிவடிவத்தை வழக்கத்திற்கு மாறாக இடமாற்றி எழுதுவது மற்றும் முதல் எழுத்தைப் பெரிதாக எழுதி, மற்ற எழுத்துக்களை வழக்கம்போல் எழுதுவது மேலும், வரிகளைச் செங்குத்தாகவும் (vertical) கிடைமட்டமாகவும் (horizontal) எழுதுவது போன்ற வரிவடிவத்தில் பல உத்திகளைப் படிப்பவரைக் கவர்ந்து படிக்கத் தூண்டுவதற்காக நாளிதழ்கள் பயன்படுத்துகின்றன.

## தலைப்பு

நாளிதழில் ஒரு செய்தியைப் படிக்கும்முன் அதில் சொல்லப்போகும் செய்தி என்ன என்பதை முன்கூட்டியே நிரலாகக் காட்டவும், உள்ளடக்கச் செய்தியை முன்கூட்டியே கணிக்கவும், சுருக்கமாகவும் தெளிவாகவும் அதைத் தெரிந்து கொள்ளவும் ஏதுவாக ஓரிரு தொடர்களில் எழுதப்படும் சொற்றொகுதியே தலைப்பு ஆகும். இவ்வுத்தி நாளிதழுக்கு நாளிதழ் வேறுபடலாம். செய்தியைப் படிக்கத் தூண்டிப் படிப்போரைக் கவர்வது மட்டுமல்லாமல் செய்தியின் விளக்கத்தினைத் தெளிவாக வெளிப்படுத்துகின்றது.

"பத்திரிகைகளை அவற்றில் இடம்பெறும் தலைப்புகளே துல்லியமாகக் கணிக்கின்றன" என்று ஆலன் ஹோல் கோம்ப் கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. அந்தவகையில் ஒரு சில தலைப்புகளைக் கொண்டே அச்செய்திகள் எந்த நாளிதழில் வெளிவந்தன என்று ஓரளவு அனுமானித்துச் சொல்ல முடியும். செய்தியின் உயிரோட்டத்தை, தலைப்பினைக் கொண்டே அறிய இயலும்.

தலைப்பு குறைந்த சொற்களில், படித்தவுடன் முழுச் செய்தியையும் புரிந்துகொள்ளும்வகையில் அமைக்கப்படுகின்றது. "நாளிதழில் தலைப்புகள் விறுவிறுப்பாக இருக்கத் துடிப்புள்ள சொற்களைப் பயன்படுத்த வேண்டும்" என்று பத்திரிக்கை உலகின் ஜாம்பவான் எனப் பலராலும் போற்றப்படும் சி.பா.ஆதித்தனார் கூறுகின்றார் (ஆதித்தனார், சி.பா.1978).

தலைப்பை வைத்துக்கொண்டே நாம் படிக்க வேண்டிய செய்தியா? இல்லை நமக்குத் தேவையில்லாத செய்தியா? என எளிதில் இனங்காண முடியும். நல்ல தலைப்புகள் படிப்பவரைக் கவருவதற்கு மட்டுமல்லாமல் செய்தியின் சாரத்தைப் புலப்படுத்தவும் உதவுகின்றன. (Bruce Westley, 1968)




நாளிதழில் செய்திகளை வெளிப்படுத்தப் பயன்படுத்தப்படும் மொழி அதன் பயன்பாட்டில் இயல்பானதாகவும், ஆற்றல் மிக்கதாகவும் அமைகிறது. அதில் பயன்படுத்தப்படும் பேச்சுவழக்குப் பயன்பாடு எழுத்து வழக்கு அல்லது இலக்கிய வழக்கு தேவையைப் பொருத்தமாகப் பூர்த்தி செய்வதாக உள்ளது. இவ்விரு வழக்குகளையும் ஒருங்கிணைத்துத் தனித்தனியாக நாளிதழின் மொழிப்பயன்பாட்டு அடிப்படையில் நோக்கி ஒப்பாய்வு செய்வதே பயன்தருவதாக அமையும்.

**தொழிற்பெயராக்கத் தலைப்பு**

தொழிற்பெயராக்கத் தலைப்பில் முடியும் தலைப்புகளைத் தொழிற் பெயராக்கத் தலைப்பு என்பர். இத்தலைப்புகள் கூட்டுப் பெயர்த் தொழிற்பெயராக்கத் தலைப்பு, பெயரெச்சத் தொழிற் பெயராக்கத் தலைப்பு, உடமை வேற்றுமைத் தொழிற்பெயராக்கத் தலைப்பு என்ற வகையில் அமையும்.

இவற்றில் செய்தித் தலைப்பு , தொழிற் பெயராக்கத் தலைப்பு ஆகியன நாளிதழுக்கே உரியவை. இத்தலைப்புகளில் தொழிற் பெயராக்கம் வேறுவகையில் உள்ளது. சாதாரணமாக வினையுடன்– 'தல்–மை' போன்ற தொழிற்பெயர் விகுதிகளைச் சேர்த்துத் தொழிற்பெயரை உருவாக்குவது வழக்கம்.

**பத்தி**

சொல்லவந்த கருத்தை விளக்கமாக எடுத்துரைப்பதற்கு ஏதுவாகப் பத்தி (paragraph) அமைக்கப்படுகின்றது. பல வாக்கியங்களில் மட்டுமின்றி ஓரிரு வாக்கியங்களிலும் அமைக்கப்படும் சொற்றொடர்களின் தொகுப்பைப் பத்தி எனலாம். அவ்வாக்கியம்

ஒரு கருத்தை அல்லது ஒரு பொருளை மையமாகக் கொண்டு அமைகின்றது.

**தலையங்கம்**

மனிதனுக்கு மிகவும் இன்றியமையாத பகுதியாக இதயம் விளங்குவதைப்போல இதழ்களுக்கு இன்றியமையாத பகுதியாகத் "தலையங்கம்" விளங்குகிறது. தலைமையான செய்தியாகவும் விளங்குவதால் தலையங்கம் எனப் பெயர்பெற்றுள்ளது. ஆங்கிலத்தில் இதனை editorial or leader என்றும் கூறுவர் (முத்துராசன்.கு., 1994).

நாளிதழ் ஆசிரியர் தம் வாசகர்களுடன் உரையாடும் பகுதி, கருத்துப் பரிமாற்றம் செய்யும் பகுதி, தலையங்கம் எனப்படுகிறது. இது நாளிதழின் கருத்தாகும். மேலும், நாளிதழின் உள்ளத்தை வெளிப்படுத்தும் கண்ணாடியாகவும் கொள்ளலாம். இதன்வாயிலாக நாளிதழின் சிறப்பை மேலும் கூட்ட உதவுவதோடு அதன் தரத்தை உலகிற்குப் பறைசாற்றும் கருவியாகவும் கொள்ளலாம். திரு.வி.க. அவர்கள் இதனை ஆசிரியர் உரை என்பர்.

குறிப்பாக ஏதேனும் ஒரு நாட்டில் நிலவும் சிக்கல்களைப் பற்றி நாளிதழ் ஆசிரியர் அல்லது அதன் நிர்வாகம் கொண்டுள்ள கருத்துக்களை விளக்கி எழுவதையே தலையங்கம் என்று கூறலாம். அவ்வாறு எழுதப்படும் தலையங்கம் பொதுவாக, மக்கள் நலனை அடிப்படையாகக் கொண்டே ஆளும் அரசுக்கு ஆதரவாகவோ, அல்லது அதற்கு எதிராகவோ அமைந்து, மக்களுக்கோ அரசுக்கோ அறிவுரை கூறுமளவிற்கு அமைந்திருக்கும்.

செய்தியை விமர்சனம் செய்து, உண்மையை வெளிக்கொணர்ந்து அதன் முரண்களை நீக்குதல், ஊழலை எதிர்த்துப் போராடுதல், செயலுக்குத் தூண்டுதல் ஆகியவற்றிற்காக மக்களிடையே கருத்து உருவாக்கும் வகையில் எழுதப்படுவது தலையங்கமாகும். இது வாசகரின் உள்ளத்தைத் தொட்டு ஆசிரியரின் எண்ணத்தோடு வாசகர் எண்ணமும் ஒன்றிடும் வகையில் அமைதல் அவசியம்.

**கருத்துப்படம், கேலிச்சித்திரம்**

நாளிதழ்களில் கருத்துப் படங்கள் (cartoons) மற்றும் கேலிச் சித்திரங்கள் (caricatures) சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. பல சொற்களில் தலையங்கச் செய்தியில் உணர்த்த முடியாத கருத்துக்களைக்கூடக் கருத்துப்படங்களும் கேலிச் சித்திரங்களும் எளிதாக உணர்த்துகின்றன. சமுதாயம், அரசியல், சமயம், பொருளாதாரம், நாட்டு நடப்புக் குறித்த செய்திகள் அவற்றில்

காணப்படும் குற்றங்குறைகளை நகைச்சுவையுடன் விளக்கி மக்களைச் சிரிக்கவைத்து, சிந்தித்துச் செயல்படவைக்கின்றன.

ஒரு செய்தி சொற்களால் விவரிக்கப்படுவது தலையங்கமாகும். அதையே படமாகச் சித்திரிக்கும்போது கருத்துப்படம் எனப்படுகிறது. பார்த்தவுடன் சில வினாடிகளில் கருத்தைப் புரியவைத்துக் கருத்துப் படத்தின் தனித்தன்மையை விளக்குவதால் படத்தலையங்கம் என்று கூறுவர். கருத்துப் படத்தில் தெளிவான ஒரு கருத்து இருக்க வேண்டும். அதில் உள்ள படம் மக்கள் மனதில் நன்றாகப் பதிய வேண்டும். அந்த அளவுக்குப் படம் வரையப்பட வேண்டும். மக்கள் தொடர்பான ஓர் உன்னத இலட்சியம் அல்லது போற்றுதலுக்குரிய கொள்கையை விளக்க உதவுவதாக இருக்கவேண்டும் என்று சிறந்த கருத்துப்படத்திற்கான புலிட்ஸர் பரிசு வழங்கும் அமெரிக்க நிறுவனத்தின் விதிமுறைகளில் கூறப்பட்டுள்ளது.

மேம்போக்காகப் பார்த்தால் கருத்துப் படமும் கேலிச்சித்திரமும் ஒன்றாகவே தோன்றும். ஆனால், இரண்டிற்கும் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. கருத்துப்படத்தில் கருத்துக்கு முதலிடமும், கேலிச் சித்திரத்தில் குறிப்பிட்ட நபருக்கு முக்கியத்துவமும் தரப்படுகிறது. கருத்துப்படங்கள் சிந்திக்க வைப்பதாகவும், கேலிப்படங்கள் சிரிக்க வைத்துச் சிந்திக்க வைப்பதாகவும் உள்ளன.

கேலிச்சித்திரம் குறிப்பிட்ட ஒரு நபரைப் பிறரிடமிருந்து துல்லியமாக வேறுபடுத்திக் காட்டுகிறது. உருவத்தின் ஓர் அங்கத்தையோ, உருவத்தையோ மிகைப்படுத்திக் காட்டுவதாகவும் காணப்படுகின்றது. இவை, சில நபரைப் பொறுத்து வேடிக்கையாகவோ, சில நபர்களின் தனித்த குணங்களைக் கூர்மையாக வெளிப்படுத்துவதாகவோ அமைந்துள்ளன.

நாளிதழ்கள் கருத்துகளை வெளிப்படையாகத் தெரிவிப்பதால் ஏற்படக் கூடிய தேவையற்ற நெருக்கடியான சூழலைத் தவிர்க்க அச்செய்திகளைக் கருத்துப்படங்கள் மற்றும் கேலிச்சித்திரங்கள் வாயிலாகத் தெரிவிப்பதை இதழ்கள் ஒரு மரபாகக் கொண்டுள்ளன. கருத்துப்படங்களும் கேலிச்சித்திரங்களும் நகைச்சுவையுடன் படிப்பவரின் சிந்தனைகளைத் தூண்டிப் புதிய எண்ணங்களை அவர்களுக்கு நாளும் ஊட்டி வருவதன் வாயிலாக நாளிதழ்களுக்கு மேலும் வலுச்சேர்த்து வருகின்றன என்றால் அது மிகையாகாது.

# தமிழ்நாளிதழ்கள்–மொழியமைப்பும் மொழிப்பயன்பாடும்

ஒரு மொழியின் அடிப்படைக் கூறு ஒலியேயாகும். எனினும், ஒலிக்குப் பொருண்மை எதுவும் இல்லை என்பதால், அவ்வொலி அனைத்தையும் மொழியாகக் கருதமுடிவதில்லை. ஒலிக்கூறுகள் இணைந்து சொல்லாகி, அச்சொற்களும் வரன்முறையாக அமைந்து பொருண்மையை உணர்த்தினால் மட்டுமே மொழிக்கான தன்மையைப் பெறும். அவ்வாறு உருவாக்கப்படுவதே மொழி எனலாம். இம் மொழியே மானுடத் தகவல் தொடர்பிற்குப் பயன்படுகிறது.




தமிழ்மொழியில் தொன்றுதொட்டே பேச்சு வழக்கும், எழுத்து வழக்கும் பயன்பாட்டில் இருந்து வருகின்றன. இவ்விரு வழக்கினிடையே பல பொதுத் தன்மைகள் காணப்பட்டாலும் குறிப்பிடத்தக்க சிறப்புக்கூறுகளும் வேறுபாடுகளும் இருந்து வருகின்றன. மொழிப்பயன்பாட்டில் நாளிதழின் பங்கு குறிப்பிட்டுக் கூறுமளவிற்கு உள்ளது. குறிப்பாக, தமிழ் நாளிதழ்கள் பயன்தரத்தக்க வகையில் செய்தி வெளிப்பாட்டிற்குப் பேச்சு மற்றும் எழுத்து வழக்குகளைப் பயன்படுத்துகின்றன. மொழியைப் பயன்படுத்தும் சூழலுக்கேற்ப இத்தகைய ஒருங்கிணைந்த மொழி வழக்குகளின் பயன்பாடு தேவைப்படுகிறது. மொழியில் உள்ள எழுத்து வழக்கு, பேச்சு வழக்கு ஆகிய இரு வழக்குகளை இரட்டை வழக்கு என்பர். இவ்விரு வழக்குகளும் சமூகச் செயல்பாடுகளை ஒருங்கே நிறைவேற்றி வருகின்றன.

## நாளிதழ் மொழி

நாளிதழ்களில் நாளும் வளர்ந்துவரும் அறிவியல் மற்றும் சமுதாய மாற்றத்திற்கு ஏற்பப் பல புதுச்சொற்கள், சொற்றொடர்கள், அயல்மொழிச் சொற்கள், மக்கள் அன்றாடப் பேச்சுவழக்கில் பயன்படுத்தப்படும் வழக்குச் சொற்கள் போன்றவை பயன்படுத்தப்பட்டு வருகின்றன. மொழியானது இடம், சூழல், சமுதாயம், இவற்றிற் கேற்றவாறு ஏதேனும் ஒரு வகையிலோ சில வகைகளிலோ பயன்பாட்டில் மாறுபட்டே இருக்கும். சமுதாயச் சூழல், சமுதாயத் தேவை மற்றும் சமுதாய அமைப்பு இவற்றிற்கேற்பவும் மொழியில் அவ்வப்போது மாற்றங்கள் தோன்றி வந்துள்ளன; தோன்றியும் வருகின்றன.

ஒரு கருத்தைச் சமுதாயத்திற்கு எடுத்துச் சொல்லும் முறையில் மொழிநடை ஒருவருக்கொருவர் மாறுபடலாம். மொழியைப் பயன்படுத்துபவரின் சமுதாய அமைப்பைப் பின்னணியாகக் கொண்டு அவர்களது மொழிப்பயன்பாட்டினைச் சமுதாய மொழியியல் (socio-linguistics) எனும் மொழியியற் பிரிவு விளக்குகின்றது. ஒரு சமுதாயம் அல்லது பல சமுதாயங்களுக்கு இடையே சிறந்ததொரு தொடர்பை, உறவு முறையை ஏற்படுத்தக் கூடிய ஒரு செய்திப் பரிமாற்றச் சாதனமாகவும் அதை நிலைநாட்டுவதில் திறமையுடைய ஒரு கருவியாகவும் மொழி விளங்குகிறது. அதன் அமைப்பைப் பல்வேறு பயன்பாட்டுச் சூழல்களுடன் பொருத்திச் சமுதாய மொழியியல் விளக்குகிறது. மொழியமைப்பு, மொழிப்பயன்பாடு இவற்றை ஒருசேர வைத்துக் கொண்டு மொழியைப் பயன்படுத்துவோர் எவ்வாறெல்லாம் பயன்படுத்துகிறார்கள் அதில் அவர்கள் எவ்வகைகளிலெல்லாம் வேறுபடுகின்றார்கள் என்பதைக் கண்டறிந்து விளக்குவது சாலச் சிறந்த முறையாகும்.

## மொழிவளர்ச்சி

கருத்துப்பரிமாற்றத்திற்கு மொழி பயன்படுகிறது. கருத்துப்பரிமாற்றத்தை மையமாகக் கொண்டு ஒரு குறிப்பிட்ட சமுதாயப் பணியை நிறைவேற்ற ஒரு மொழி பெற்றுள்ள சொல்வளம், இலக்கிய, இலக்கண வளம், மொழிப்பயன்பாட்டில் மொழி வழக்குகளை எளிதாகப் பயன்படுத்தக் கூடிய நிலை இவற்றின் அடிப்படையில் அதன் வளர்ச்சியைக் கணிக்கலாம்.

## மொழியமைப்பும் மொழிப்பயன்பாடும்

மொழி அமைப்பும், மொழிப்பயன்பாடும் பயன் படுத்துபவரின் அறிவாற்றலுக்குத் தக்கவாறும், எடுத்து விளக்கப்படும் கருத்திற்கேற்பவும், கருத்துக்கள் யாருக்காகச் சொல்லப்படுகின்றன

என்பதைப் பொறுத்தும் மாற்றம் பெறுவது இயல்பு. ஒருவருடைய மொழியமைப்பு எளிய சொற்களால் அமைந்திருந்தாலும் கருத்துப் பரிமாற்றத்திற்கு ஏற்றவகையில் வலிமை பெற்றிருக்கும்.

ஆட்சித்துறை, கல்வித்துறை, மக்கள் தகவல் தொடர்புத் துறை, சட்டத்துறை போன்ற பல்வேறு கருத்துப் புலப்பாட்டிற்கேற்ப மொழி அதன் பயன்பாட்டில் மாற்றம்பெறும். எனவே, மொழியமைப்பில், மொழிப்பயன்பாடு பொதுத் தமிழிலிருந்து ஏதேனும் ஒருவகையில் வேறுபடும். ஒருசில மொழியமைப்பு எளிய பொருள் விளக்கம் தராது. வேறுசில மொழியமைப்பு படிப்போரையும் கேட்போரையும் கவர்ந்திழுத்துத் தன்வயப்படுத்தும் தன்மையது. மொழியைப் பயன்படுத்துவோர் மொழியினைத் தமக்கே உரிய வகையிலும், சமுதாயச் சூழலுக்கேற்பவும் பயன்படுத்துவர்.

தமிழ் மொழியின் பல்துறைப் பயன்பாட்டில் தகவல் தொடர்பில் இதழ்களும் நாளிதழ்களும் ஊடகங்களும் முக்கியவிடத்தைப் பெறுகின்றன. நாளிதழ்களில் மொழி எவ்வாறு கையாளப்படுகின்றது என்று விரிவாக எடுத்துரைப்பதன் வாயிலாக மொழிப்பயன்பாட்டை, அதன் மேன்மையை அளவிட முயலலாம். இம் மொழிப்பயன்பாட்டினை விளக்குவதனால் மொழியமைப்பும், அதன்பயன்பாடும் எவ்வாறு நாளிதழ்களில் கையாளப்பட்டுள்ளன என்பதைத் தெளிவாகக் காணமுடியும். அதன் வாயிலாக, மொழியமைப்பும் மொழிப்பயன்பாடும் எவ்வாறு சமுதாயத்திற்குப் பயனளிக்கும் வகையில் செயற்படுகின்றன என்பதை அளவிடலாம்.

நாளிதழ் செய்திகள், தரம், செய்தியை வெளிப்படுத்தும் பாங்கு, கையாளப்படும் உத்தி, மொழிநடை, பேச்சுமொழி, பிற மொழிக்கலப்பு போன்றனவற்றால் தமிழ் மொழியை வரையறை செய்து தமிழ் வழக்குகளுக்கிடையே காணப்படும் பெரும்பான்மைப் பொதுமையைச் சுட்டிக்காட்டி அதன் சிறப்புக் கூறுகளை விளக்குவது ஆகியன மொழி குறித்த ஆய்வின் முக்கிய நோக்கமாகக் கொள்ளலாம்.

## பேச்சு/எழுத்து வழக்கு

மொழி எழுத்துவழக்கு, பேச்சுவழக்கு என இருபெரும் பிரிவுகளைக் கொண்டுள்ளது. பேச்சு வழக்கில் இருந்து உருவானதே எழுத்து வழக்கு. ஒருவர் பேசும்போது பயன்படுத்தும் வழக்கை எழுதும்போது பயன்படுத்துவதில்லை. ஒரே கருத்தை வெளிப்படுத்த தற்போது இவ்விருவகை வழக்குகளையும் நாளிதழ்கள் பயன்படுத்துகின்றன.




## இருமொழி வழக்கு

ஒரு மொழி இரு பெரும் வழக்குகளைப் பெற்று அவ்விரு வழக்குகளும் ஒரு பொருத்தமான சூழலில் மட்டும் பயன்படுத்தப்படும். அவ்வாறு பொருந்தாத சூழல்களில் பயன்படுத்த இயலாதவாறு சமூகக்கட்டுப்பாடு இயல்பாக அமைகிறது. கட்டுப்பாட்டுடன் கூடிய இருவழக்குகள் மொழியில் இருந்தால் அது இரட்டை வழக்கு (diglossia) எனப்படும். (Ferguson, 1971). சிலமொழிகளில் மட்டுமே காணப்படும் இத்தகைய வழக்கை இரட்டை வழக்கு மொழி (diglossia language) என அழைப்பர்.

இரட்டை வழக்கு தனக்கென வரையறை செய்யப்பட்ட சூழல்களில் மட்டும் பயன்படும். உயர்வழக்கும் பேச்சுவழக்கும் தாம் பெற்றிருக்கும் மொழியியற் கூறுகளால், கற்றறியப்படும் முறையால், பயன்படுத்தப்படும் சூழலால், சமூகம் அளிக்கும் மதிப்பு நிலையால் வேறுபட்டு விளங்குகின்றன.

### மாற்று வழக்கு

நாளிதழ்களில் காணப்படும் மாற்று வழக்குகள், ஓரிரு எழுத்து வேறுபாட்டால் உண்டாகும் மாற்று வழக்கு, முற்றிலும் வேறுபட்ட ஆனால் ஒரே பொருளைத் தரக்கூடிய சொற்களால் ஆன மாற்று வழக்கு என இருவகைப்படும். (தங்கமணியன், 1986:57). நாளிதழ்களில் காணப்படும் இம்மாற்று வழக்கிற்கு இரண்டுவிதக் காரணங்கள் காணப்படுகின்றன. ஒன்று மொழியில்லாக் காரணம். இதைப் புறக்காரணம் எனலாம். மற்றொன்று மொழிக் காரணம்.

நாளிதழ் மொழியைப் பொறுத்தவரை, புறக்காரணமாக அமைவது இதழ் ஆசிரியரின் மொழி உணர்வேயாகும். ஒவ்வொரு இதழ் ஆசிரியருக்கும், மொழி உணர்வு வெவ்வேறு அளவினதாக இருப்பதால் அவர்களின் மொழி நடையும் வேறுபடும். வெவ்வேறு அளவிலான மொழி உணர்வின் காரணமாகப் பத்திரிக்கை மொழியில் மாற்று வழக்குகள் காணப்படுகின்றன. இப்புறக் காரணமேயன்றிப்

பல்வேறு வகையான அகக் காரணங்களும் தமிழ் நாளிதழ்களில் காணப்படும் மாற்று வழக்குகளுக்குக் காரணங்களாக அமைகின்றன.

**தமிழாக்கம்**

வேற்று மொழிச் சொற்களைக் கடன்வாங்கும் போது அவற்றினைத் தமிழ் மொழி அமைப்பிற்கு ஏற்ப மாற்றியும், மாற்றாமலும் பயன்படுத்துவர். சொற்களைக் கடன் வாங்கும்போது கடன் சொற்களில் உள்ள கிரந்த எழுத்துக்களைத் தமிழ் எழுத்துக்களால் எழுத்துப் பெயர்ப்புச் செய்து அல்லது எவ்வித மாற்றமுமின்றிக் கடன் சொற்கள் நாளிதழ்களில் பயன்படுத்தப்படுகின்றன.

தமிழில் மொழி முதலில் வராத எழுத்துக்கள் கடன் சொற்களால் மொழி முதலில் வருமானால் அத்தகு சொற்களின் முன் 'அ, இ, உ' போன்ற எழுத்துக்களைச் சேர்த்துக் கடன் சொற்களைத் தமிழ்ப்படுத்தி எழுதும் போக்கு மாற்றுவழக்கு மற்றும் தமிழாக்கம் இடம்பெற ஏதுவாக அமைகின்றது.

சில கடன் சொற்களில் இடம்பெற்றுள்ள 'ஹ' என்னும் கிரந்த எழுத்தை நீக்கிப் பயன்படுத்துவதும் ஒருவகையில் தமிழாக்கம் செய்தலேயாகும்.

**மொழிபெயர்ப்பு**

மாற்று வழக்கிற்கு மொழிபெயர்ப்பும் ஒரு காரணமாகும். மொழிபெயர்ப்பு இரண்டு விதமாகும். ஒன்று கடன் சொல்லை நேரடியாக மொழிபெயர்த்தல், மற்றொன்று கடன் சொல்லிற்கேற்ற புதுச்சொல்லை உருவாக்குதல் என்பனவாகும். இதனால் மாற்றுவழக்குச் சொற்கள் உருவாகின்றன.

**நடை**

நடை என்பதற்கு ஒருவர் தனக்கென்று ஏற்படுத்திக் கொண்ட பாணி என்பது எல்லோரும் அறிந்த பொருள்; ஒழுங்கான அமைப்பில் எழுதுவதற்கான நெறிமுறை என்பது மேலே கூறிய விளக்கத்தால் கிடைக்கும் புதிய பொருள், ஒருவருடைய நடைப்பாங்கு என்றும் தனிநபர் சார்ந்த பொருளுடன் எழுதுவதில் மேற்கொள்ளும் ஒழுங்கு என்றும் அமைப்பு சார்ந்த பொதுவான பொருளில் புலப்படுத்தப்படுகிறது. (பா.ரா.சுப்பிரமணியன், 2001:1).

எண்ணம் அல்லது கருத்து எனும் கருவினைச் சுற்றி அமைந்துள்ள ஒரு கூடு; வேறுபட்ட வடிவங்களுக்கிடையே ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் உத்தி; ஒரு படைப்பாளியுடன் அல்லது படைப்பிலக்கியத்தில் காணப்படும் தனிமைக்கூறுகளின் ஒட்டு மொத்தம்; மொழியின் கட்டமைப்பிலிருந்து மாறுபட்ட பிறழ்ச்சிகள்: சொற்றொடர்

அடிப்படையிலின்றி முழுப்படைப்பிலுள்ள மொழியியற் கூறுகளுக்கிடையே காணப்படுவது நடை (Enkvisit, N.E., 1984).

**மொழிநடை**

மொழியில் எடுத்துரைக்கப்படும் ஒரு குறிப்பிட்ட பொருளைக் குறிக்கச் சில மொழிகளில் ஒரு வடிவம் மட்டுமே இருக்கும்; இன்னும் சில மொழிகளில் ஒன்றிற்கு மேற்பட்ட வடிவங்கள் இருக்கும், அதேபோன்று ஒரு மொழிக்குள்ளும் இத்தகைய சொல், பொருள் அமைப்பு காணப்படுகிறது. இதற்கு எதிர்மாறாக ஒரு சொல் பல பொருள்களைக் குறிக்கவும், பல சொற்கள் ஒரே பொருளைக் குறிக்கவும் பயன்படுத்தப்படுகின்றன. குறிப்பாக, படைப்பாளிகள் இத்தகைய மொழி வேறுபாட்டினைக் கையாளுகின்றனர். இத்தகைய மொழி வேறுபாடுகளின் முறைப்படுத்தப்பட்ட தொகுப்பே மொழிநடை எனப்படுகிறது (கருணாகரன, கி. ஜெயா, வ. 1993:93).

மொழிப்பயன்பாட்டை எளிய நடை, செறிவு நடை, ஆற்றொழுக்க நடை, செம்மையான நடை எனப் பலவகையாகப் பகுக்கலாம். நடை மொழிப்பயன்பாட்டுக் களத்தைப் பொறுத்தும் அவற்றின் சமுதாய முக்கியத்துவத்தைப் பொறுத்தும் அமையும (இராஜேஸ்வரி சற்குணன் & கிருஷ்ணன் இராமசாமி, 2011:173). பொதுவாக ஒரு படைப்பாளி தாம் கூறவிருக்கும் குறிப்பிட்ட செய்தியின் பொருண்மைக்கு ஏற்ப மொழிக் கூறுகளைத் தெரிவு (choice of linguistic features) செய்து கொள்வார். செய்தி சொல்லப்படும் காலம், இடம், முறை, இச்செய்தியைப் பெறும் சமுதாயம், வாசிப்பவர் அல்லது கேட்பவரின் மொழியாற்றல் முதலியவற்றிற்கு ஏற்ப அம்மொழிக்கூறுகள் தெரிவு செய்யப்படுகின்றன எனலாம். இலக்கண, இலக்கிய வரையறைகளுக்குட்பட்டு, ஒரு கருத்தினை உணர்த்தும்படி எடுத்துரைக்க எழுதப்பட்ட சொற்றொடர்களால் அக்கருத்தினைப் புரியவைக்கும் வகையில் அதன் தன்மையை, உணர்வை, தெளிவுடன் வெளிப்படுத்தி மொழிக்கு அழகூட்டுவது நடை (நீதிவாணன், ஜெ., 1983).

இம் மொழிநடைக்கூறு கால நடை, ஆசிரியரின் நடை என இருவகைப்படும். படைப்பாளரின் உளப்பாங்கோடு மொழி நடை ஒன்றியது. பொதுவழக்கு, வட்டார வழக்கு, சொல்முறை, இலக்கணப் பிறழ்வு, மரபு வழக்குகள், புதுச்சொற்கள் ஆகியன ஒருவர் மொழி நடையைப் பிறரது மொழியிலிருந்து வேறுபடுத்திக் காட்ட உதவும் கூறுகளாகும். இவற்றால் குறிப்பிட்ட படைப்பாளரின் மொழி நடையை எளிதில் இனங்காண முடியும். தெளிவான கருத்துப் புலப்பாட்டினைக் கருத்தில் கொண்டு எல்லாப் பிரிவு மக்களுக்கும் செய்தி எளிதில் சென்றடையும் வண்ணம் பேச்சு வழக்கிலிருந்த சொற்கள்,

சொல்லமைப்புகள், பிறமொழிக் கூறுகள் மற்றும் அவற்றின் பயன்பாட்டின் தேவைக்கேற்ப, சமுதாயச் சூழலுக்கேற்பப் பயன்படுத்தப்படுகின்றன.

மேலும், இவை ஓர் ஆசிரியரின் தனித்தன்மையை விளக்கவும் ஆசிரியர் பயன்படுத்தும் மொழிநடையையும் மொழிப் பயன்பாட்டையும் அறிந்து கொள்ளவும் உதவுகின்றன. நடை, காலத்தோடு நெருங்கிய தொடர்புடையது. காலத்திற்கேற்ப இலக்கிய நடையில் ஏற்பட்ட மாறுதலைச் சுட்டுவது ஒருவகை. தனி ஒரு படைப்பாளியின் நடையை அறிய உதவும் முறை புள்ளிநடையியல்ஆகும். விரும்பிப் பயன்படுத்தும் கூறுகள், அடிக்கடி பயன்படுத்தும் கூறுகள் எனப் புள்ளி நடையியல் கூறுகள் இருவகைப்படும்.

மொழிநடை என்பது மொழியில் கையாளப்படும் சொற்கள், தொடர்கள், வாக்கியங்களுடன் வருணனை, அங்கதம், பழமொழி, உவமை, உரையாடல், கதை போன்ற உத்திகள் கையாளப்பட்டு, கருத்தினை எளிதில் அனைத்து மக்களுக்கும் சென்று சேர உதவுகின்றன. இதில் மொழியமைப்பும் மொழிப்பயன்பாடும் முக்கியப்பங்காற்றுகின்றன. கருத்தினை எளிதில் புலப்படுத்த இவை தேவை (ஜெயா, வ., 2010:2).

ஒரு மொழியில் ஒரு பொருளைக் குறிப்பதற்குப் பலசொற்களும் பலசொற்களைக் குறிப்பதற்கு ஒரு சொல்லும் பயன்படுத்துவதைக் காணமுடிகிறது. ஒரு மொழியைப் பேசுவோரிடமும், எழுதுவோரிடமும் இவ் வேறுபாடுகளைக் காணலாம். இத்தகைய வேறுபாடுகளின் முறைப்படுத்தப்பட்ட தொகுப்பே மொழிநடை எனப்படுகிறது. மேலும் நடைவேறுபாடானது எடுத்துச்சொல்லப்படும் கருத்து வேறுபாட்டிற்குத் துணைசெய்கிறது; ஆசிரியர்களையும் இனங்காண உதவுகிறது (கருணாகரன்,கி. 1993:93). ஒரே கூற்றினை அல்லது செய்தியினை இரு வெவ்வேறு மொழி அமைப்புகளின் வாயிலாகக் கூறுவது நடை (Hockett, C.F., 1958).




**மொழிநடையமைப்பு**

மொழியியலாளர் மொழியமைப்பைப் பல்வேறு நிலைகளில் பாகுபடுத்தி விளக்குவதைப் பார்க்கிறோம். ஒலி நிலையில் தொடங்கி சொற்பொருள் நிலைவரை மொழியமைப்பு பரந்த நிலையில் விரிந்துள்ளது.

பயன்பாட்டு மொழியியலின் ஒரு பிரிவே நடையியல் ஆகும். நாளிதழ்களில் பேச்சு மற்றும் எழுத்து வழக்குகளில் நடை அமைப்பினை ஆராய்வதற்கு அடிப்படையாக மொழிநடையும் மொழிப்பயன்பாடும் அமைகின்றன. சொல்பவர், எழுதுபவர் சொல்லப்படும், எழுதப்படும் பொருள், சமுதாய மொழியியற் சூழல் போன்ற பல்வேறு காரணங்களுக்கேற்ப மொழி நடையும் மொழிப்பயன்பாடும் வேறுபட்டு அமையும்.

மொழி நடையை ஒலிக் கட்டமைப்பு, சொல்லாட்சி மற்றும் தொடரமைப்பு என்ற மூன்று நிலைகளில் பகுக்கலாம். இம்மூன்று நிலைகளிலும் ஒரு படைப்பாசிரியர் விரும்பிப் பயன்படுத்தும் கூறுகள், அடிக்கடி பயன்படுத்தும் கூறுகள் இவற்றைக் கொண்டு ஓர் ஆசிரியரின் நடையைத் தெளிவாக இனங்கண்டு மதிப்பிடலாம்.

பண்பற்ற (கொச்சை) மொழியிலேயே எழுதுவது கொடுந்தமிழ் நடை, நல்ல தமிழில் பிழையின்றி எழுதுவது செந்தமிழ் நடை, கடின சொற்களால் அமைவது திரிசொல் நடை, எளிய சொற்களால் எழுதப்படுவது இயல்பு நடை, வடமொழிச் சொற்களையும் தமிழ்ச் சொற்களையும் கலந்து எழுதுவது கலப்பு மொழிநடை, தூய தமிழ்ச் சொற்களால் எழுதுவது தனித்தமிழ் நடை, சொற்களை அடுக்கி ஆடம்பரமாக, அதன் கருத்தைக் கருத்தில் கொள்ளாமல் சொல்லழகுக்காக எழுதப்படுவது அடுக்கு மொழிநடை. கருத்தைத் தெளிவாகக் கூறுவதற்காக நன்கு சிந்தித்து எழுதுவது தெளிவு நடை எனப் பலவாறாகப் பகுக்கலாம்.

**மொழிப்பயன்பாடு**

ஒரு சமுதாயம் மொழியையும், மொழியின் பல்வேறு கூறுகளையும் எவ்வாறு கருத்துப்பரிமாற்றத்திற்கும் சமுதாய வளர்ச்சிக்கும் பயன்படுத்திக் கொள்கிறது என்பதை விளக்குவது மொழிப்பயன்பாடாகும்.

மொழிப்பயன்பாட்டு வளர்ச்சி என்பது எழுத்து மொழி வளர்ச்சியோடு தொடர்புடையதால் எழுத்தாக்கம் ஏற்பட மொழியிலேயே எழுத்திலக்கியம் உருவாக முடியும். எனவே மொழியில் இலக்கிய வளர்ச்சி ஏற்பட எழுத்தாக்கம் ஏற்பட வேண்டும். மேலும் அவர் தமிழ்வளர்ச்சியின் நிலைகளை எழுத்தாக்கம், இலக்கிய உருவாக்கம், தொகையாக்கம், இலக்கண உருவாக்கம் என்று வரிசைப்படுத்துகிறார். இவையே தமிழுக்கு ஒரு தகுதியை அறிந்து அதிகார மொழியாக மாற்றுகின்றன (சண்முகம், செ.வை., 1989:3).

நாளிதழில் பேச்சு வழக்கு, எழுத்து வழக்கு ஆகிய நடையமைப்பினை ஆராய்வதற்கு அடிப்படையாக அமைவது மொழியமைப்பும் அதன் பயன்பாடுமாகும். செய்தியை வெளியிடப் பல்வேறு மொழிக்கூறுகளையும் மொழிப்பயன்பாட்டு நிலைகளையும் ஒருங்கிணைத்து எழுதப்படுவது மொழிநடை எனலாம்.

அந்தவகையில், கருத்துக்களை வெளிப்படுத்தும் நிலையில் ஒருவர் எடுத்தாளும் மொழி அதன் பயன்பாட்டின் தன்மைக்கும், நிலைக்கும் ஏற்ப மாறுபடுகிறது. இதனால் கருத்தினை வெளிப்படுத்தும் பாங்கு, அதில் பயன்படுத்தும் மொழியின் புற அமைப்பு ஆகியவை ஒருவருக்கொருவர் வேறுபடும். இவ்வேறுபாடு நடையமைப்பைப் பிரதிபலிப்பதைப் காணலாம். எனவே, நடையமைப்பிற்கான விளக்கத்தை மேற்சொன்னவாறு மொழிக் கட்டமைப்பு (language structure), மொழிப்பயன்பாடு என்ற இரண்டையும் ஒருங்கிணைத்துப் பார்ப்பதன் வாயிலாகப் பெறலாம்.

நாளிதழில் பயன்படுத்தப்படும் மொழிநடை, மொழிப்பயன்பாட்டு உத்திகள் மற்றும் நடையியற்கூறுகள் (stylistic features) இவற்றை வெளிக்கொணர்வதன் வாயிலாக அந்நாளிதழில் பயன்படுத்தப்பட்டுள்ள மொழிப்பயன்பாட்டு உத்திகளை விளக்கலாம். அவற்றைப் பகுத்துப் பார்த்து ஒப்பாய்வு செய்து, பேச்சு மொழி மற்றும் பிறமொழிக் கலப்பால் தமிழ் மொழி எதிர்கொள்ளும் தாக்கத்தைக் கண்டறியலாம்.

**நடையியல் உத்தி**

ஒரு மொழியின் நடையமைப்பு விளக்கத்தில் நடையியல் உத்தி (stylistic technique) முக்கியப் பங்கினைப் பெறுகின்றது. இவ்வுத்திகள் மொழியமைப்பையும் மொழிப்பயன்பாட்டையும் அடிப்படையாகக் கொண்டவையாகும். ஒரு மொழியின் நிறைவான மற்றும் தெளிவான நடையமைப்பு விளக்கத்திற்கு இவ்வுத்திகள் மிகவும் தேவைப்படுகின்றன. எனவே, நடையமைப்பு விளக்கமானது நடையியற் கூறுகளை இவ்வுத்திகள் மூலம் விளக்கும்பொழுது நிறைவும் தெளிவும் பெறுகிறது (நீதிவாணன், ஜெ. 1983:37).









### உத்தி நிலையில் செய்தியை வெளிப்படுத்தும் திறன்

ஆசிரியர் தமது இதழ் தனித்தன்மையுடன் விளகங்வும் வாசகர்களிடம் செல்வாக்குப் பெற்றிடவும் விற்பனையைக் கூட்டவும் முயலுகின்றார். ஆசிரியர் செய்கின்ற புதுப்புது மாற்றங்கள் அந்தந்தத் தன்மையில் சீராகக் கடைப்பிடிக்கின்ற நெறிமுறைகள் அவையனைத்தும் இதழியல் உத்திகளில் அடங்கும்.

"ஒரு கலைஞன் தன் துறையின் செவ்விய வெளியீட்டிற்குப் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றலும் ஆக்க முறையும் உத்தி எனப்படுகிறது" (சுப்பிரமணியன்.ச.வே.1984:6). ஆகவே எந்த ஒரு செய்திப்படைப்பும் வெற்றிபெற வேண்டுமானால் படிக்கின்ற வாசகர்களைக் கவரக்கூடிய உத்திகளும் சிறந்த முறையில் அப்படைப்பில் அமைந்திருக்க வேண்டும்.

### உரைக்கோவை

காலத்திற்கேற்ப மொழி மாறும் இயல்புடையது. சொற்கள், தொடர்கள் ஆகியவை பயன்பாட்டில் எளிமையாகவும் ஆற்றலுடனும் விளங்கவேண்டும். அதற்கு ஏற்றவாறு புதுமையாக்கம் நடைபெற வேண்டும். ஆகவே, உரைக்கோவை என்பது செய்திகளைப் படிப்பவர்களுக்கு ஏற்றவாறு அமைய வேண்டும். மனிதன் தன் கருத்துப்பரிமாற்றத்தை நிறைவு செய்வதற்குப் பயன்படுத்தும் பல்வேறு உத்திகளுள் உரைக்கோவையும் ஒன்று. இது வாக்கியங்கள் வழியாகவும், அமைப்பு இணைப்பு, பொருள் இணைப்பு, பேச்சுச் செயல் அமைப்பு இணைப்பு ஆகியவற்றின் மூலமாகவும் வெளியிடப்படும் (பாலகிருஷ்ணன், ஓ. 1990:92). சொற்கள், சொற்றொடர்கள், தொடரமைப்புகள் இவற்றின் வாயிலாகச் செய்திகளை வெளிப்படுத்தும் தன்மையே உரைக்கோவை (discourse) ஆகும். இது உரைப்பாங்கு (utterance) என்றும் அழைக்கப்படும்.

கருத்தாடல் நிகழும்போது மொழி பயன்படுத்தப்படுகிறது. இதனால் மொழிப்படைப்புகள் அல்லது 'உரைகள்' படைக்கப்படுகின்றன (சண்முகம்.செ. 2002:17).

கருத்து (rhetoric) என்ற சொல்லுக்கு இணையாக உரைக்கோவை என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. கருத்துப் பரிமாற்ற உத்திகளுள் ஓர் உறுப்பாக உரைக்கோவை கருதப்படுகிறது. கருத்தை விளக்குகின்ற வாக்கிய அமைப்பு, பத்தியமைப்பு மற்றும் மொழிக்கூறுகளை உரைக்கோவை எனலாம். இதனைக் கருத்தாடல் என்றும் கூறுகிறார் (மேரிரோஸ்லின், 1992). கருத்துப் பரிமாற்றத்தை நிறைவு செய்யப் பயன்படுத்தும் உத்தியே உரைக்கோவை ஆகும் (கருணாகரன்.கி, 1989:73). வரிவடிவில்

அமைகின்ற உரைக்கோவையைக் "கதைவடிவ உரைக்கோவை, கட்டுரை வடிவ உரைக்கோவை, பணிப்பு வடிவ உரைக்கோவை, உரையாடல் வடிவ உரைக்கோவை என்று உரைக்கோவையை நான்கு வகையாக லாங்கேகர் கூறுகிறார் (சண்முகம்.சி., 1989).

அறிவியல் வளர்ச்சிக்கும், அன்றாடத் தேவைக்கும், மாற்றத்திற்கேற்ப நாளிதழ்களில் கருத்துப் பரிமாற்றத்தில் கருத்துப் புலப்பாட்டின் இன்றியமையாமையைக் கருத்திற்கொண்டு உரைக்கோவை அவ்வப்போது மாற்றம் பெறுகிறது. இச்சூழலில் தமிழ் உரைக்கோவை அமைப்பில் குறிப்பிடத்தகுந்த மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன.

**உவமை**

ஒரு பொருளோடு மற்றொரு பொருளை ஒப்புமைப்படுத்தி அப்பொருளின் தொழில், பயன் முதலிய இயல்புகளை நன்கு விளங்கும்படிச் செய்வதாகிய பொருள் புலப்பாட்டு நெறியே உவமை எனலாம். ஆசிரியரின் அனுபவப் பொருளே உவமையாகும். ஆசிரியர் காணும் பொருளே புதுப்பொருளாகும். அவர் ஏற்கனவே கண்டுணர்ந்த பொருளைப் புதிதாகக் காணும் பொருளோடு பொருத்திவைத்து அப்பொருளின் உயர்வு தாழ்வுகளை எடுத்துக் கூறுவதை உவமை எனலாம்.

**பழமொழி**

சமூகக் கருத்துகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் தன்னுள்ளே கொண்ட அனுபவ அடிப்படையில் சூழலுக்கேற்பப் பயன்படுத்தும் சொற்றொடரை முதுமொழி என்பர் (சிதம்பரம், கு., ரம்யாராஜீ, இரா., 2004:48). கருத்துப் புலப்பாட்டிற்கு உதாரணமாகச் சுட்டப்படும் முதுமொழித் தொடரே பழமொழி எனலாம்.

**மொழிபெயர்ப்பு**

மொழிபெயர்ப்பும் ஒரு புதுப்படைப்பேயாகும். ஒரு மொழியில் உயிரோட்டமாகப் பயன்படுத்தப்பட்ட சொல்லை மற்றொரு மொழியில் உயிரோட்டமான நிலையில் பயன்படுத்திக் கொள்ளும்படி அச்சொல்லை உருவாக்குவது மொழிபெயர்ப்பாகும். மூலநூலின் நடையின் பாங்கைப் பிரதிபலிப்பதோடு இலக்கு மொழியின் நடையழகையும் ஒரு சிறந்த மொழிபெயர்ப்பு பெற்றிருக்கவேண்டும் (மோகன், இரா. 1992:130).


மொழிபெயர்ப்பு
சரியான மொழிபெயர்ப்பு
Close or Accurate Translation
ஒரு மொழிக்குள் செய்யப்படும் மொழிபெயர்ப்பு
(Intra Lingual Translation)
இருமொழிக்களுக்கிடையே செய்யப்படும் மொழிப்பெயர்ப்பு
(Intra Lingual Translation)
ஒலிபெயர்ப்பு
Transliteration
மொழியாக்கம்
Transcreation
தழுவல்
Adoptation
சந்தமொழி பெயர்ப்பு
Meterical Translation
எதுகைமோனை மொழிபெயர்ப்பு
Rhymed Translation
சொல்லுக்குச்சொல் மொழிபெயர்ப்பு
Metaphrase Translation

மற்றொரு மொழியில் மாற்றும் பொழுது மூலமொழியில் காணப்படும் பொருள், சுவை, தன்மை போன்றவை சிறிதும் மாறாமலும் பெயர்க்கப்படும் மொழியின் அமைப்பு மற்றும் தன்மைக்கேற்பவும் அமைக்கப்படும் முறையே மொழிபெயர்ப்பு எனலாம். மேலும் இரு மொழிகளுக்கிடையே மொழியியல் அடிப்படையிலான வேறுபாடுகளும், கலாச்சார வேறுபாடுகளும் அதிகமாக இருந்தால் அவ்விரு மொழிகள் சம்பந்தப்பட்ட மொழிபெயர்ப்பில் வடிவவேறுபாடு அதிகமாக இருக்கும். மொழியியல் அடிப்படையில் வேறுபாடுகளும், கலாச்சார வேறுபாடுகளும் குறைவாக இருந்தால் வடிவ ஒப்புமை அதிகமாக இருக்கும் (சேதுமணியன், 1990:84).

**மொழித்தாவல்**

மொழித்தாவல் என்பது ஒரு சமூகம் குறிப்பிட்ட களங்களிலும் (Domains) செயல்பாடுகளிலும் இயல்பாகப் பயன்படுத்தி வந்த மொழிக்குப் பதிலாக மாற்று மொழியைப் பயன்படுத்துவதைக் குறிக்கும் (Fasold Ralph, 1984:213). அதுமட்டுமின்றி ஒரு மொழியைப் பேசுவோரின் எண்ணிக்கையில் ஏற்பட்டுள்ள மாற்றத்தையும் குறிக்கும் (Baker, C., 1996:42). வழக்கமாக ஒரு சமூகம் பயன்படுத்தும் மொழியிலிருந்து வேறொரு மொழிக்கு மாறுவது (Weinreich.U, 1968:79). இது உடனடியாக நிகழ்வதாகவோ மெல்ல மெல்ல ஏற்படும் மாற்றமாகவோ இருக்கலாம் (Crystal, D., 1977:215). அதுமட்டுமின்றி இருமொழிகள் ஒரே களத்தில் பயன்படுத்தப்படும் பட்சத்தில் இம்மொழித்தாவல் தவிர்க்கப்பட இயலாத ஒன்றாகவும் ஆகிவிடுகிறது (Romaine, S., 2000:49).

**எளிமையாக்கம்**

எழுத்து, சொல், தொடர், வாக்கியம் இவற்றை எளிமையாக அமைப்பதை எளிமையாக்கம் என்பர். மக்கள் எளிமையான நடையையே விரும்புவர். இது இயல்பானதும்கூட. பிறமொழிக்கூறுகளைத் தம்மொழியின் மொழிப்பயன்பாட்டில் கையாளுவதன் நோக்கம் மொழியில் எளிமையாக்கம் கொண்டுவருவதே. எழுத்து வழக்கினைத் திட்டமிடுவதிலேயே எளிமையாக்கம் செயல்படுகிறது.

புதுமையாக்க நெறிகளுள் ஒன்று எளிமையாக்கம் ஆகும். மேலும், ஒரு மொழியை அல்லது மொழி வழக்கினை அம்மொழி பேசும் பெரும்பான்மை மக்கள் எளிமையாகப் புரிந்து கொள்வதற்கும் மொழிப் பயனில் ஆற்றல்மிக்கதாகப் பயன்படுத்தவும் கருத்துப்பரிமாற்றத்திற்கேற்ப மாற்றி அமைக்கப்படுவது எளிமையாக்கம் எனலாம் (கருணாகரன், கி. 1981:90).




**நிலைபேறாக்கம்**

மொழிப்பொதுமை (commonality), மொழித்திறன் ஆற்றல் (language efficiency), கையாளும் எளிமை (easy adoptability) என்ற மூன்று முக்கியக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு நிலைபேறாக்கம் (standardization) அமையும். (Ferguson, 1971), மொழிப் பயன்பாடு ஆற்றல்மிக்கதாக விளங்க வேண்டுமென்பதற்காகக் கையாளப்படும் மொழிக்கூறுகள் எளிதில் புரிந்துகொள்ளவும் எடுத்தாள எளிமையாகவும் பொதுத் தன்மையுடையதாகவும் அமையவேண்டும். எழுத்து வழக்கில் நிலைபேறாக்கம் செய்தல், பேச்சு வழக்கில் நிலைபேறாக்கம் செய்தல், கலைச்சொல் பயன்பாட்டில் நிலைபேறாக்கம் செய்தல் என நிலைபேறாக்கம் செய்வதில் பல பிரிவுகள் உள்ளன.

**அயல்மொழிச் சொல்**

கல்வி, தொழில், வாழ்வுமுறை, புதுக்குடியேற்றம், தனி மனித வாழ்வு, போக்குவரத்து, வணிகம், விவசாயம், தொழில்நுட்பம், அறிவியல், மக்கள் தொடர்புக் கருவிகள் ஆகியவற்றின் வளர்ச்சி மொழியில் தாக்கம் ஏற்படக் காரணமாகின்றது. அதற்கேற்ப, மொழியும் புதிய சொற்களால் தன்னை வளர்த்துக் கொள்ள வேண்டியதாகிறது. அனைத்து மக்களுக்கான மொழிநடையை அமைக்கும் முயற்சி மொழிநடை மாற்றத்திற்குக் காரணமாகின்றது. இத்தகைய மொழி நடை மாற்றத்தால் மொழியின் புது வளர்ச்சியாக அமைவதோடு, பிறமொழிக் கலப்பும் ஏற்படுகிறது.

அயல் மொழிக் கலப்பில் பிற கூறுகளைவிடச் சொல் தொகுதியே பெரிதும் பாதிப்புக்குள்ளாகின்றது. அயல்மொழிச் சொற்கலப்பு, ஒலி, சொல், பொருள், தொடர் ஆகிய பிற கூறுகளின் கலப்பிற்கும் காரணமாகின்றது. அவை ஏற்கப்பெறும் மொழிக்கேற்பத் தன்வயமாகி அம்மொழிக் கூறுகளாக மாறுபாடடைந்து பின்வரும் தலைமுறையினால் அடையாளம் காணவியலாத மொழிக் கூறுகளாகின்றன. புதிய கூறுகளை ஏற்பதும் பழைய கூறுகளை

ஒதுக்குவதும் மொழியின் மாற்றம் அல்லது வளர்ச்சிக்குத் துணைபுரிவதாகக் கொள்ளலாம். இப்புதிய பிறமொழிக் கூறுகள் கலப்பு இருமொழியத்திற்குக் காரணமாகின்றன.

**கலைச்சொல்**

ஒரு கூட்டத்தார் அல்லது ஒரு சாஸ்திரக்காரர் விசேஷர்த்தம் தோன்றும்படி உடன்பட்டு வழங்கும் பொது வழக்கம் இல்லாத சொல் என்று பாரதியார் அஸ்திவாரக்காரியம் என்ற கட்டுரையில் விளக்கியுள்ளார். எனவே கலைச்சொல் என்பது அறிவுத் துறைக்காகப் படித்தவர்கள் படைத்துக் கொள்வதைக் குறிக்கும், (Hymes.D., 1974:4).

பல்வேறு துறைகளிலும் குறிப்பிட்ட ஒரு பொருளுக்குப் பயன்படுத்தப்படும் தக்கதொரு சொல்லாட்சியே கலைச்சொல். புதிய அறிவியல் நுணுக்கங்களை வெளிப்படுத்த அம்மொழியில் சொல் இல்லாதபோது வேறு மொழியிலிருந்து நேரடியாகச் சொற்களைப் பெற்று அவற்றை ஒலிபெயர்ப்பு செய்தோ (transliteration), மொழி பெயர்ப்பு செய்தோ (translation), புதுமொழியாக்கம் (transcreation) செய்தோ புதுச்சொல்லாக்கத்தில் உரிய கருத்தைப் புகுத்தி அம்மொழிக்கு வளம்சேர்க்கும் வகையில் அமைக்கப்படும் சொற்களே கலைச்சொல்லாகும, (இராதா செல்லப்பன், 1985).

**கலைச்சொல் தரமாக்கம்**

கலைச்சொல்லைத் தரப்படுத்த "பொருத்தமுடைமை, திறனுடைமை *(appropriateness/efficiency)* ஏற்புடைமை, சொற்சொட்டு எளிமை *(economy/simplicity)*, ஒருமைப்பாடு *(uniformity)*, பல்துறைநோக்கு *(inter–disciplinary approach)*, மொழித் தூய்மை *(language purity)* என்ற சில பண்புகள் அவசியம்" என ஊஸ்டா வரையறுத்துக் கூறியுள்ளார்.

சமுதாய வளர்ச்சிக்கு மொழியும், மொழி வளர்ச்சிக்குச் சமுதாயமும் ஒன்றுடன் ஒன்று இணைந்துள்ளதால், ஒரு மொழியில் எடுத்துச் சொல்லப்படும் கருத்துகள் பரவலாக்கம் பெறுவதன்வாயிலாக மொழி வளர்ச்சியை அளவிடுவதற்கு ஓர் அளவு கோலாக அமைந்து நீண்ட கருத்தைச் சுருக்கிச் சிறிய வடிவில் சொல்லவும், நெடிய கருத்தினைச் சிறிய சொல்லால் வெளிப்படுத்தவும் உதவும் கலைச் சொற்கள் இவ்விரண்டின் வளர்ச்சிக்கும் அவசியமானதாக அமைகின்றன.

எளிதாக அறிந்துகொள்ள ஏதுவாக அமையும் எளிய சொல் இயல்பாகச் சமுதாயத்தைச் சென்றுசேரும். சமுதாய வளர்ச்சியால் மொழியும், மொழியின் வளர்ச்சியால் சமுதாயமும் வளர்கின்றன. சமுதாய

மற்றும் மொழி வளர்ச்சிக்கேற்ப எளிமையான சொற்களே மக்கள் மனதில் என்றும் நிலைத்திருக்கக் கூடியன. அவ்வாறு மக்கள் மனதில் என்றும் நிலைத்திருக்கக் கூடிய சொற்கூட்டால் அமையும் சொல்லை, தொடர் சொற்களாக இல்லாமல் தனிச்சொற்களாக அமைத்தல் வேண்டும். கலைச்சொற்கள் மயக்கமின்றிப் பொருளைத்தரும் வகையில் கற்பனையாக இல்லாமல் கருத்துப் புலப்பாட்டினை வெளிப்படுத்துவதாக அமைதல் அவசியம்.

## ஒலிபெயர்ப்பு

பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கும் போது, அம்மொழியின் சிறப்பு ஒலிகளைத் தமிழில் எழுதுவதே ஒலிபெயர்ப்பு. சொற்களைத் தமிழோசையில் ஒலிபெயர்க்க வேண்டும். அங்ஙனம் பெயர்க்கும் போது சொற்கள் சிறிது திரிந்து ஒலிக்குமானாலும் பொருள் தொடர்புடன் இயைந்து வாக்கியமாக அமையும் போது தமிழில் சிறிது திரிபுடன் உள்ள சொல்லை அறிய முடியும்.

ஒவ்வொரு மொழிக்கும் அதற்கெனச் சிறப்பான சில ஒலிகள் உள்ளன. ஆகவே ஒரு மொழியின் சொற்கள் பிறிதொரு மொழியில் புகும்போது, அம்மொழியில் இல்லாத புது ஒலிகள் வெறும் ஓசை மாற்றங்களாகவே நிற்கின்றன. வடமொழி ஒலியான 'ஜ' தமிழில் இல்லை. இவ்வொலியையுடைய எழுத்துக்கள் தமிழில் இடம்பெறும்போது அவை வெறும் ஓசை வேறுபாடுகளாகவே அமைகின்றன. (எ.கா.) மேஜை, மேசை. ஓர் ஒலி மற்றொரு ஒலியிலிருந்து வேறுபட்டு இருமாறுபட்ட பொருள்களைக் காட்டுமானால் அவ்வேறுபட்ட ஒலிகள் ஒலியன்களாகும். (எ.கா.) காடு, சாடு. மாறாக இவ்விரு ஒலிகளும் ஒன்றையே குறிக்குமானால் அவை ஒலி வேறுபாடுகளே. இவ்வேறுபாடுகளைக் குறிக்க ஒரு மொழியில் புது எழுத்துக்களைப் புகுத்த வேண்டியதில்லை, (மீனாட்சிசுந்தரம், கா. 1973:6).

## ஒலிபெயர்ப்புச் சொல்

கடன் சொற்களை எவ்வித மாற்றமுமின்றி அப்படியே தமிழ்மொழி அமைப்பிற்கேற்ப ஒலிபெயர்ப்பு (transliteration)ச் செய்து தினமலரில் வெளியிடப்பட்டுள்ளது. செய்தித்தாளில் பயன்படுத்தப் பட்டுள்ள ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் இருந்தபோதிலும் அவற்றைப் பயன்படுத்தாமல் ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்தும் போக்கு அதிகமாகக் காணப்படுகிறது. இதனால் சொற்களஞ்சியத்தில் பெரும் மாற்றம் ஏற்படவும், நல்ல பல கலைச் சொற்கள் வழக்கிழந்து போகவும் வாய்ப்புள்ளது.

"இனிய உளவாக இன்னாத கூறல் கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" என்ற வள்ளுவர் கூற்றின்படி, இனிய தமிழ்ச் சொற்கள் இருக்க

வேற்று மொழிச் சொற்களைப் பயன்படுத்துவது கனியிருக்கும்போது காயைவிரும்புவதைப்போலாகும்.

**கலைச்சொல்லாக்கம்**

பல்வேறு அறிவுத்துறைகளிலும் பயன்படுத்தக்கூடிய துறைச் சொற்களை ஒலிபெயர்ப்பு, சொல்லாக்கம் ஆகியவற்றின் மூலம் உருவாக்கலாம். சொல்லாக்கம் என்பதில் மொழிபெயர்ப்பு, புதிய சொற்படைப்பு இரண்டும் அடங்கும் (மீனாட்சிசுந்தரம், கா., 1973:6)

ஒரு மொழியில் கலைச்சொல்லாக்கம் பெருகும்போது அந்த மொழி வளர்கிறது எனலாம். பொதுவாக அந்த வளர்ச்சி நேரடியாக அவர்கள் தாய்மொழியிலேயோ, இன்னொரு மொழியில் ஏற்பட்ட வளர்ச்சியின் தாக்கத்தாலோ ஏற்படலாம். இதை அகநிலை வளர்ச்சி என்றும் பின்னதைப் புறநிலை வளர்ச்சி என்றும் அழைக்கலாம். பிறமொழிச் சொற்களை அப்படியே இல்லாமல் பொருள் அடிப்படையில் புதுச்சொல்லாக்கம் செய்வது அகப்புற வளர்ச்சி. மானிடவியலார் புறநிலை வளர்ச்சியை, அதன் தாக்கத்திற்கு ஏற்ப இரண்டாகப் பகுப்பர். ஒன்று தொடர்பு ஏற்படும் பிற சமூகத்தின் பழக்க வழக்கங்களையோ, பிறவற்றையோ அப்படியே ஏற்றுக் கொள்வது புறப்புற வளர்ச்சி. அப்படி இல்லாமல் தன்னுடைய பண்பாட்டிற்கும் சமூகச் சூழல்களுக்கும் ஏற்ப மாற்றி ஏற்றுக் கொள்வது அகப்புற வளர்ச்சி.

அகநிலை வளர்ச்சியில் கலைச்சொல்லாக்கம் உருவாக்கும் போது சொல்லாக்கம் பற்றிய பிரச்சினை இருக்காது. பின்னால் தரப்படுத்தும்போது கலைச்சொல்லாக்க நெறிமுறை தெளிவுபடும். புறநிலையில் கலைச்சொல்லாக்கம் உருவாக்கும்போது பலரும் தனித்தனியே ஈடுபடுவதால் ஒன்றுக்கு மேற்பட்ட கலைச்சொற்கள் தோன்றும். மேலும் கலைச் சொற்களின் தேவையும் புதிய கருத்துக்களை வெளிப்படுத்த வேண்டும் என்ற உணர்வும் பரவலாகக் காணப்படும். எனவே தரம் பற்றிய சிந்தனையும் தோன்றும்.

ஒரு சமுதாயத்தில் ஏற்படும் அக மற்றும் புறத்தாக்குதலால் அச்சமுதாயம் எய்திடும் வளர்ச்சிக்கேற்ப அச்சமுதாயத்தின் மொழியிலும் மாற்றம் ஏற்பட்டு வளர்ச்சி தோன்றும் என்பது வரலாறு உணர்த்தும் உண்மை. இந்த அடிப்படையில் புதிய கண்டுபிடிப்புகள், கோட்பாடுகள், புதிய சொற்கள் போன்றவை சமுதாயத்திற்குப் பயன்தரத்தக்க வகையில் மொழியில் புதிதாக ஏதேனும் ஒருமுறையில் வந்து சேருகின்றன. குறிப்பிட்ட துறையில் பயன்படுத்தப்படும் பல்வேறு கோட்பாடுகள், கருத்துகள் இவற்றை வெளிப்படுத்தும் வகையில் அமைக்கப்படும் சொற்கள், வெளிப்படுத்தும் பொருள் மிகத்துல்லியமாகவும் ஒரு வரையறைக்குட்பட்டும் அமைந்திருக்கும்.

புதுப்புதுக் கருத்துக்களைக் கூறும் நோக்குடன் நாம் சொற்களைப் படைத்துக்கொள்கிறோம். சில கலைச்சொற்களைப் பிற மொழிச்சொற்களிலிருந்து மொழிபெயர்க்கிறோம். சில புதிதாகவே படைக்கப்படுகின்றன. உயர்தனிச் செம்மொழிகளுள் ஒன்றான தமிழ்மொழி வேர்ச்சொற்கள் செறிந்தது. இந்த வேர்ச்சொற்களில் திரிபு, பெருக்கம், கூட்டு முதலிய மாற்றங்கள் செய்வதன் மூலம் பல கலைச்சொற்களை உருவாக்கலாம், (இராதா செல்லப்பன், 2006:20).

**புதுமையாக்கம்**

சமுதாய வளர்ச்சிக்கேற்ப அவ்வப்போது மொழியில் ஏற்பட்ட மாற்றங்களின் அடிப்படையில் அம்மொழியிலும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதைக் காணலாம். ஒரு குறிப்பிட்ட மொழியை மற்ற மொழியில் உள்ள ஆற்றலுக்கு ஈடு கொடுக்கும் வண்ணம் ஆக்கும் முறையே புதுமையாக்கம் என்பர், (Ferguson, 1971). வழக்கில் இல்லாத, புதிதாக வழக்கில் ஈடுபடுத்தப்படும் சொல் காலத்தின் தேவைக்கேற்ப ஒரு மொழியில் உருவாவது அவசியம்.

**தொடரியல் அமைப்பு**

சொற்களை, சொல்லமைப்புகளை இணைத்துச் சொற்றொடர்களையும், சொற்றொடர்களை இணைத்து வாக்கியங்களையும் விளக்கும் மொழியியல் பிரிவே தொடரியல். மொழியின் தொடரமைப்பை விளக்குவது பற்றிப் பல வகையான கொள்கைகளைக் கொண்டுள்ளனர் இக்கால மொழியியலார். எடுத்துக்காட்டாக வகைப்படுத்துதல் இலக்கணம் (taxonomic grammar), மாற்றிலக்கணம் (transformational grammar), படைப்பு இலக்கணம் (generative grammer), பயனுருபியல் இலக்கணம் (tagmemic grammar) போன்ற பலவகை இலக்கணக் கொள்கைகள் மூலம் ஒரு மொழியின் வாக்கிய மற்றும் தொடரமைப்பு விளக்கப்படுகின்றது.

சில வாக்கியங்கள் இயற்கையாகவே பெயர், வினைத் தொடர்களைப் பெற்றுநிற்கும். இவை அணு வாக்கியங்கள் எனப்படும். சில வாக்கியங்கள் அணு வாக்கியங்களிலிருந்து மாற்றல் விதிமுறைகளின் மூலம் பெறப்பட்டனவாயிருக்கும். இவைகளைத் தருவிப்பு வாக்கியங்கள் (derived sentences) என்கிறோம். தருவிப்பு வாக்கியங்கள் அணு வாக்கியங்களின் சில கூறுகளை ஒலிப்பதன் மூலமாகவோ, விரிவுபடுத்துவதன் மூலமாகவோ (expansion), பெயர்ச்சி செய்வதன் மூலமாகவோ, இணையான கூறுகளைப் புகுத்துவதன் மூலமாகவோ பெறப்படுகின்றன.

வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள், கால இட ஒட்டுக்கூறுகள் போன்ற பயன்பாட்டுத் தொடர்கள்

இருப்பதாகச் சிலர் கருதுகிறார்கள். இன்னும் சிலர் வாக்கியங்களில் பெயர்த் தொடர், வினைத்தொடர், வேற்றுமைத் தொடர் முதலிய அமைப்புத் தொடர்கள் இருப்பதாகக் கொள்கிறார்கள், (ஜெயா,வ. 1989:57).

நாளிதழ்களின் தொடரமைப்புப் பயன்பாட்டில் பலவகையான தொடர்களும், வாக்கியங்களும் காணப்படுகின்றன. எழுவாய் பெயர்த்தொடர்களும், வினைத் தொடர்களும், வேற்றுமைத் தொடர்களும் காணப்படுகின்றன. மேலும் வாக்கியக் கருவின் முன் சில விழிச் சொற்களும் உணர்ச்சி வெளியீட்டுச் சொற்களும் காணப்படுகின்றன.

இலக்கண முறைப்படி பல சொற்கள் ஒன்று சேர்ந்து வரிசையாக அமையும் அமைப்போடு முழுப்பொருளையும் தந்தால் அது வாக்கியம் எனப்படும். அதாவது, ஒன்றுக்கு மேற்பட்ட சொற்களின் முற்றுப்பெற்ற தொகுப்பு வாக்கியம் ஆகும். ஒவ்வொரு சொல்லும் தொடரும் சில இலக்கண வரைமுறைகளுக்கும் வழக்கத்திற்கும் உட்பட்டுப் பொருளுக்கு முதன்மையிடம் தரவேண்டும். அவ்வாறாக இலக்கணத்தோடு பொருள் விளக்கமும் தரும் சொற்களின் தொடரே வாக்கியம் எனப்படும். பொதுவாக, சொற்களின் தொடர் அமைப்பையே வாக்கியமாகக் கொள்ளலாம்.

வாக்கியம் என்பதை முற்றுத்தொடர் என்பர். ஒரு முழுக்கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கும் சொற்றொடரை வாக்கியம் என்பர். இதில் மறைபொருள் இருக்கக்கூடாது. ஒரே பொருளுடையதாகவும் எழுவாய், செயப்படுபொருள், பயனிலை போன்ற கூறுகளைப் பெற்றும் வரவேண்டும். வாக்கியங்களை அதன் அமைப்பு அடிப்படையிலும் கருத்து அடிப்படையிலும் வகைப்படுத்தலாம்.

**அமைப்பு நிலை வாக்கியம்**

↓

| ↓ | ↓ | ↓ | ↓ |
|---|---|---|---|
| தனிவாக்கியம் | கூட்டுவாக்கியம் | கலவை வாக்கியம் | கூட்டுக்கலவைவாக்கியம் (அ) கதம்ப வாக்கியம் |

**கருத்து நிலை வாக்கியம்**

↓

| ↓ | ↓ | ↓ | ↓ |
|---|---|---|---|
| செய்தி வாக்கியம் | ஏவல் வாக்கியம் | வினா வாக்கியம் | உணர்ச்சி வாக்கியம் |

இவ்வாறு கருத்து நிலையில் வாக்கியங்களைப் பல வடிவ வாக்கியங்களாக அமைத்து உணர்த்தும்பொழுது சுவை பயக்கும்.

மொழி நடையும், தெளிவும் உருவாவதற்கு வழி பிறக்கிறது. இவ்வாக்கியங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பயனைத் தரவல்லதாக அமைந்துள்ளன.

### நாளிதழ் மொழி நடை

நாளிதழ்கள் சமுதாயத்தில் விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றன. கருத்துப் பரிமாற்றத்திற்கு மொழியின் முக்கியத்துவம் அவசியம். மொழிநடை, மொழிப்பயன்பாடு ஆகியன நாளிதழுக்கு நாளிதழ் வேறுபடுகின்றன. ஆற்றல்மிக்க எளிய நடையில் (efficient and simple style) கருத்துப் பரிமாற்றம் இருக்க வேண்டும். கருத்துப் பரிமாற்றத்திற்கு எளிமையாகவும் வலுவாகவும் அமையும் மொழிநடையை நாளிதழ்கள் பயன்படுத்துகின்றன. செய்திப் பரவல் ஊடகமாகிய நாளிதழ்கள் பேச்சுவழக்கு நடையில் உணர்ச்சிப் பூர்வமான கருத்துக்களைப் பேச்சுவழக்குச் சொற்கள் மூலம் அனைத்து மக்களும் படித்தவுடன் புரிந்து கொள்ளக்கூடிய வகையில் வெளியிடுகின்றன.

### தமிழ் நாளிதழ்–மொழி நடை

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பெரும்பாலான நாளிதழ்களின் மொழிநடை எளிய நடையாக இருந்தாலும் வடமொழிக் கலப்பு அதிகமாக இருந்தது. திராவிட இயக்கத்தைச் சார்ந்த பத்திரிக்கையாளர்கள் ஆங்கிலம், வடமொழி முதலான அயல்மொழிச் சொற்களைத் தவிர்த்துப் புதுப்புது தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தினர். அயல்மொழிச் சொற்களுக்கு இணையாகத் தமிழ்ச் சொற்களைப் பழந்தமிழ்ச் சொற்களால் உருவாக்கினர்.

மொழிநடையும் மொழிப்பயன்பாடும் பயன்படுத்துபவரின் அறிவாற்றல், சமுதாயம் இவற்றிற்கேற்ப அமையும். சமுதாயத்திற்கேற்ப மொழியும் அதன்பயன்பாடும் மாறுபடும். மேலும், செய்திகளை எடுத்து விளக்கப்பெறும் கருத்திற்கேற்பவும், கருத்துக்கள் யாருக்காகச் சொல்லப்படுகின்றன என்பதைப் பொறுத்தும் மொழிநடை அமையலாம். கருத்துக்களை வெளிப்படுத்தும், பயன்படுத்தும் மொழியின் புறவமைப்பானது ஒருவரது மொழிநடையிலிருந்து மற்றொருவரது மொழிநடையில் வேறுபட்டுக் காணப்படுகிறது.

தமிழ் மொழிக்கு வளம் சேர்க்கும் செம்மையான பழந்தமிழ்க் கவிதை நடை மொழியையும், எளிமையான அலங்காரச் சொற்களையும், அடுக்கு மொழியினையும் பயன்படுத்தினர். அதனைப் பெரும்பான்மை மக்கள் புரிந்து கொள்வதில் சிரமம் இருந்தது. ஆங்கில மொழி

வாக்கிய அமைப்பைப் போன்றே தமிழ் மொழி வாக்கிய அமைப்பை எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என மாற்றிப் பயன்படுத்தினர். இத்தகைய நடையினை அதன் பயன்பாட்டோடு பொருத்திப்பார்த்து அவற்றின் சிறப்புக் கூறுகளைக் கண்டறிவது சிறப்பானதாகக் கருதப்படுகிறது. ஆசிரியரின் தனித்தன்மையை விளக்குவதோடு அவர் பயன்படுத்தும் மொழிநடையையும் மொழிப்பயன்பாட்டையும் அறிந்து கொள்ளவும் உதவியாக அமைகிறது.

தமிழ் நாளிதழ்கள் பொரும்பாலும் தமிழ்நடையைத் தவிர்த்து ஆங்கில நடையிலும் பிறமொழிக் கூறுகளைப் (சொற்கள்) பயன்படுத்தியும் எழுதுகின்றன.

> முதலாவது நீ எழுதப்போகிற விசயத்தை ஆங்கிலம் தெரியாத ஒரு தமிழனிடம் வாயினால் சொல்லிக்காட்டு. அவனுக்கு நன்றாக அர்த்தம் விளங்குகிறதா என்று பார்த்துக் கொண்டு பிறகு எழுது. அப்போது நீ எழுதுகிற எழுத்து தமிழ்நாட்டிற்குப் பயன்படும். இல்லாதுபோனால் நீயும் சிரமப்பட்டு மற்றவர்களுக்கும் பயனில்லாமல் போய்விடும். எனவே, மக்கள் எளிதில் புரிந்துகொள்ளும் முறையில் எழுதுதல் வேண்டும் என்றார் பாரதி.

**இன்றைய தமிழ் நாளிதழ்களின் மொழிநடை**

அறிவியல் அடிப்படையில் விவரித்துப் பெறக்கூடிய முடிவுகள் உடனடியாகச் சமூகத்திற்குப் பயன்தருவதாகவும், மொழி இலக்கிய அடிப்படையில் விவரித்துப் பெறக்கூடிய முடிவுகள் சில கொள்கை விளக்கங்களைக் கொடுப்பதாகவும் அமையும். ஏற்கெனவே உள்ள விளக்கங்களில் சில மாற்றங்களை ஏற்படுத்திக் கொள்வதற்கும் அது பயன்படலாம். நாளிதழ்களின் மொழி நடையைப் பயனாக்க மொழியியல் (applied linguistics) அணுகுமுறையில் காண்பது சமூகத்திற்குப் பயன்தரக் கூடியதாக அமையும்.

நாளிதழ்களில் பயன்படுத்தப்படும் மொழிநடை, மொழிப்பயன்பாடு, மொழி அமைப்பு, ஒலியன்கள், உருபன்கள், சொற்கள், தொடர்கள், பிறமொழிக்கூறுகள், உருபொலியன் மாற்றங்கள் ஆகியவற்றை எடுத்துக் கூறும்போது அவற்றில் ஏற்பட்டுள்ள புதுமைகளை அறிந்துகொள்ள ஒரு வாய்ப்பு ஏற்படுகிறது.

இன்றைய நாளிதழ்கள் பேச்சுமொழி மற்றும் வட்டார வழக்குகளைப் பயன்படுத்துகின்றன. இப்போக்கு எழுத்து மொழிக்கும் பேச்சு மொழிக்கும் உள்ள இடைவெளியைக் குறைத்து அனைத்துத் தரப்பினருக்குமான பொதுவான ஒரு மொழியை உருவாக்கப் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

## மொழியமைப்பு

பல்துறைகளிலும் சமுதாயம் விரைவாக வளர்ச்சியடைந்துவரும் இந்நூற்றாண்டில் சமுதாய வளர்ச்சிக்கேற்பச் செய்தித் தொடர்புச் சாதனங்களும் பெருகியுள்ளன. வானொலி, தொலைக்காட்சி, நாளிதழ், இணையத்தளம் ஆகியன மிக முக்கியச் செய்தித் தொடர்புச் சாதனங்களாக இருந்தபோதிலும், குறிப்பாக, நாளிதழ் அச்சுருவாக்கம் பெறுவதால் அதன் மொழிநடையை இனங்கண்டு பிறவற்றிலிருந்து எளிதில் அடையாளப்படுத்த முடியும்.

நாளிதழ்களின் மொழி இன்றைய மொழியின் உண்மை நிலையை விளக்குவதாக அமைகிறது. நாளிதழ்களில் காணப்படும் மாற்று வழக்குகளைக் கையாள்வதில் ஆசிரியருக்கு ஏற்படக்கூடிய மனப்போராட்டம் மொழியமைப்பின் தன்மையை, அதன் வளத்தினைப் பெரிதும் பிரதிபலிப்பதாக அமைகின்றது. ஒரு நிலைபேற்று மொழியை உருவாக்குவதில் நாளிதழுக்கும் சிறந்த பங்குண்டு. பிறமொழிச் செய்தியை மொழிபெயர்த்தல், கருத்துச் செறிவிற்கேற்பப் புதுச்சொற்களை உருவாக்கல் போன்றவைகளில் அன்றாடம் ஏற்படக்கூடிய சிக்கலுக்குத் தீர்வு காண்பதில் நாளிதழ் ஆசிரியரின் பங்கு குறிப்பிடத்தக்கதாக அமையும்.

சமுதாயத்தில் பயன்படுத்திவரும் மொழியும் அதன் பயன்பாடும் காலத்திற்கேற்ப மாறுபடும். மொழிப் பயன்பாட்டில் ஏற்படும் மாற்றம் அம்மொழியின் வளர்ச்சியில் மாற்றத்தை உருவாக்குகிறது. மொழியைப் பயன்படுத்தும் சமுதாயத்தினரிடையே அதன் பயன்பாட்டுச் சூழல் வேறுபடுகின்றது. இத்தகைய சூழலில் நாளிதழ் ஆசிரியர் எவ்வாறு மொழியைக் கையாளுகின்றார் என்பதை இதன்வாயிலாக அறிந்து கொள்ளவியலும்.

மேலும், ஒரு பத்திரிக்கை ஆசிரியர் எவ்வாறெல்லாம் சொற்பெருக்கத்தையும் (lexical expansion) சொல்லாக்கங்களையும் தமது எழுத்தின் மூலமாக மொழியில் இடம்பெறச் செய்கிறார் என்பதையும் அறிந்து கொள்ளமுடியும். இத்தகைய சொற்பெருக்கமும், சொல்லாக்கமும் கொண்ட மொழிநடையை விளக்குவதன்மூலம் மொழி வளர்ச்சிப் போக்கினைக் கண்டறியலாம்.

நாளிதழ்கள் மொழியைப் பயன்படுத்தும்விதம், அவர்கள் பயன்படுத்தும் மொழிநடை உத்திகள் ஆகியவற்றால் அம்மொழியைப் பயன்படுத்தும் மக்களுக்குத் தாக்கம் ஏற்படக்கூடும். அதை அறிந்து கொள்வதற்கு விரிவான விளக்கம் தரவேண்டியது இன்றியமையாததாகிறது. இதனால் செய்தித்தாள்களின் மொழிப் பயன்பாடு பற்றிய சிந்தனைகள் பல துளிர்த்து வெளிவர வாய்ப்பு ஏற்படும். மொழி வழக்குகளை விரிவாக விளக்க முற்படும்போது

மொழிப்பயன்பாட்டிற்கும் மொழி நடைக்கும் உள்ள தொடர்பு வெளிப்படும் என்று உணரப்பட்டு அதுவும் வெளிப்படையாக இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளது.

நாளிதழ்களின் மொழிநடை குறிப்பிடத்தக்க, வியத்தகு அளவுக்கு மொழிக்கு வளம் சேர்க்கிறது. நாளிதழ்களின் வாயிலாக மொழியை, அதன் பயன்பாட்டை விரிவாக எடுத்துரைக்க வேண்டியது பெரிதும் அவசியமான ஒன்றாக உள்ளது. அந்த வகையில் குறிப்பிட்ட பாரம்பரியமிக்க நாளிதழ்களான தினமலர், தினமணி, தினத்தந்தி ஆகிய நாளிதழ்களில் மொழிநடை, மொழிப்பயன்பாடு எவ்வாறு உள்ளன என விரிவாக இங்கு விளக்கப்பட்டுள்ளது.

தினமலர் நாளிதழில் தலைப்புகளை அமைக்கும்விதம், பேச்சு வழக்குப் பயன்பாடு, வழக்குச்சொற்கள் பயன்பாடு, இலக்கணத்தைப் பின்பற்றும் போக்கு, ஒலிக்குறிப்புச் சொற்களின் பயன்பாடு, அடுக்குத் தொடர், இரட்டைக்கிளவிப் பயன்பாடு, பொருண்மை மாறுபாடு, பிறமொழிக் கலப்பு போன்றன விரிவாக எடுத்துக்காட்டுகளுடன் இங்கு விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

தினமணி நாளிதழில் பயன்படுத்தப்பட்டுள்ள ஆங்கிலச் சொற்களின் பயன்பாடு, வடமொழிச் சொற்களின் பயன்பாடு, ஆங்கிலச் சொற்களின் வரிவடிவம் (orthography), மொழிக்கலத்தல் (code mixing), மொழித்தாவல் (code switching), பெயர்சொற் சுருக்கம் (abbreviation), உரசொலி (fricatives), பேச்சு மொழி (spoken language), சொல் வரிசை மாறுபாடு (word order) போன்றவற்றின் பயன்பாடுகள் குறித்துச் சான்றுகளுடன் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

தினத்தந்தி நாளிதழில் பயன்படுத்தப்படும் சொற்களின் எளிமை, வாக்கிய எளிமை, கருத்தை வெளிப்படுத்தும் சொற்களின் நிலை, புதுச் சொல்லாக்கம், ஆங்கிலச் சொற்களைத் தமிழாக்கம் செய்து பயன்படுத்தும்விதம், பிறமொழிக் கலப்பு, கருத்தை எளிமையாக விளக்கும் பாங்கு போன்றவை பற்றித் தெளிவாக உரிய எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.

மொழிப்பயன்பாட்டில் நாளிதழ்கள் முன்மாதிரியாக விளங்குவதால், அவை மொழியை எவ்வாறு பயன்படுத்தினால் தமிழ்மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாக அமையும் என்பதை இனங்காண்பது அவசியம். அந்தவகையில் தமிழ் நாளிதழ் வரலாற்றில் தனியிடம் பிடித்துப் பல ஆண்டுகள் பாரம்பரியமுடன் வெளிவந்து கொண்டிருக்கும் தினமலர், தினமணி, தினத்தந்தி ஆகிய நாளிதழ்களின் மொழிநடை மற்றும் மொழிப்பயன்பாடு ஆகியவற்றை ஒப்பு நோக்கி விரிவாக விளக்குவதன் மூலம் தமிழ் நாளிதழ்களின் பொதுவான இன்றைய மொழிநடை உத்தியைத் தெளிவாகக் காணலாம்.

# தினமலர் நாளிதழ் மொழிநடை

அன்றாடம் கவர்ச்சியான தலைப்பில் உண்மைச் செய்தியை வெளியிடும் தமிழ் நாளிதழ்களில் தினமலர் தனிச்சிறப்பைப் பெற்றுள்ளது. 1951–ஆம் ஆண்டு திரு. டி.வி.இராமசுப்பையர் அவர்களால் முதன் முதலாகத் தினமலர் நாளிதழ் திருவனந்தபுரத்தில் வெளியிடப்பட்டது.

இன்று தமிழகத்தின் பல மாவட்டங்கள் மற்றும் வெளி மாநிலங்களிலும் இந்நாளிதழ் பல பதிப்புகளில் வெளிவருகின்றது. இன்றளவும் இதற்கென ஒரு தனியான வாசகர் வட்டத்தைப் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. அனைத்துப் பிரிவினரும் விரும்பிப் படிக்கக்கூடிய பல்வேறு தகவல்களையும் செய்தியையும் தாங்கி நாள்தோறும் சரியான நேரத்தில் கொண்டு சேர்க்கும் பெருமையைப் பெற்றுள்ளது. அந்தவகையில் தினமலர் நாளிதழ் மக்களிடையே நல்ல குறிப்பிடத்தக்க செல்வாக்கைப் பெற்றுள்ளது என்றால் அது மிகையாகாது.

**தலைப்பு**

தினமலர் நாளிதழ் தொடக்கத்தில் சென்னைப் பதிப்பில் புதுமையைக் கருத்தில் கொண்டு தலைப்புகளைக் கவிதை நடையிலும், அடுக்கு மொழியிலும் வெளியிட்டது. அத்தகைய தலைப்புகளில் செய்தி வெளியிடும்போது, செயற்கைத் தன்மை வெளிப்படையாகத் தெரிந்தது. இதனால், செய்திக்கேற்ற தலைப்பை அமைப்பதில் சிக்கல் ஏற்பட்டது.

தினமலர் நாளிதழில் வாசகரின் கருத்தைக் கவர்ந்திழுத்துத் தொடர்ந்து படிக்கத் தூண்டும்விதமாய்த் துடிப்புள்ள சொற்கள் தலைப்புச் செய்தியில் அதிகமாகப் பயன்படுத்தப்படுகின்றன. இப்போக்கு சில நேரங்களில் நாளிதழின் சிறப்பை, தரத்தை, தனித்தன்மையை உயர்த்துவதிலும், அவற்றைத் தக்கவைத்துக் கொள்வதிலும் சிரமம் ஏற்பட வழிவகுத்தது. தற்போது தினமலர் நாளிதழ் அனைத்து வகையிலும் தனித் தன்மையுடன் விளங்குவதோடு, அதிக அளவு நிரந்தர வாசகரைத் தொடர்ந்து தக்கவைத்துக் கொள்ளுமளவிற்குச் செய்தியை அதன் உண்மைத் தன்மைக்குப் பாதகமில்லாமல் விரிவாக எடுத்துக்கூறி மக்களிடையே

வரவேற்கத்தக்க மதிப்பைப் பெற்று முன்னணி வகித்து வருகிறது. என்றால் அது மிகையன்று.

**பேச்சுவழக்குச் சொற்கள்**

தினமலர் மொழிநடைப் பயன்பாட்டில் அதிக அளவில் பேச்சு வழக்குச் சொற்கள் மற்றும் பிறமொழிக் கூறுகள் பயன்படுத்தப்படுகின்றன. செய்தியைப் படிக்கின்ற மக்கள் எளிதில் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக இத்தகைய வழக்குச் சொற்கள், பேச்சு மொழிச் சொற்கள், பிறமொழிச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. செய்தியை முழுமையாகக் கொடுக்க வேண்டுமென்ற நோக்கிலும், அதேநேரத்தில் அனைவரையும் எளிதில் கவரும் வண்ணமும் தினமலர் மொழிநடை அமைந்திருக்கிறது.

(எ.கா.)

*காட்சியைக் கண்டாலே கலங்குங்கிறது. ஆபத்து நேர்ந்தால் 'அச்சச்சோ'...!* 22.1.2005, ப.10

*வீடு தேடி வருது! வாக்காளர் அடையாள அட்டை வழங்க கமிஷன் ஏற்பாடு* 31.10.2006, ப.1

*அம்மாடியோவ் ...கரண்ட் பில் ரூ.80 லட்சம்* 31.01.2008,ப.4

*நெல்லு வெளஞ்சிருக்கு ... அறுக்க ஆளு எங்கிருக்குது ...* 31.01.2009, ப.12

*ஏப்பம் விட்டவருக்கு அல்வா கொடுத்த மக்கள்* 24.7.2009,ப.17

*உள்குத்து டீலிங் இருக்குமோ ...?* 31.01.2010, ப.4

*யாருகிட்டேயும் சொல்லாதீங்க!* 13.09.2011, ப.12

*என் பிரண்ட போல யாரு மச்சான் கன்றுடன் நட்பு பாராட்டும் வாத்து*

*நிலம் வாங்கிக் கொள்வதாக 'அல்வா'* 07.02.2012, ப.5

*சொன்னபடி கேளு... மக்கர் பண்ணாதே...* 11.02.2012, ப.4

**பேச்சுவழக்குப் பெயர்ச்சொற்கள்**

(எ.கா.)

*புருவத்துக்கு,*
*கொசுவுக்கு,*
*பார்லிமெண்ட்டுல,*
*போலீசாரே*

*போன்றன.*

**பேச்சுவழக்கு வினைச்சொல்லமைப்பு**

| எழுத்து வழக்கு | பேச்சு வழக்கு | ஒலி மாற்றம் |
|---|---|---|
| சாதித்து விட்டார்கள் | சாதிச்சுட்டாங்க | த்து>ச்சு(திரிதல்) |
| திறந்தாயிற்று | திறந்தாச்சு | ஆயிற்று>ஆச்சு(திரிதல்) |
| சிரமமாகிறது | சிரமமாகுது | கிறது>குது(திரிதல்) |
| மாற்றுங்கள் | மாத்துங்க | ற்று>த்து(திரிதல்)ள்>ɸ(கெடுதல்) |
| போய்விட்டது | போயிடுச்சு | ய்>யி(திரிதல்) |
| குழப்பாதீர்கள் | குழப்பாதீங்க | ர்> /ங்க(திரிதல்) |
| இயலவில்லையே | ஏலவில்லையே | இய>ஏ(திரிதல்) |
| விளங்கிக்கொள்ள | வெளங்கிக்கொள்ள | வி>வெ(திரிதல்) |

எழுத்து மொழிச் சொற்களை, பேச்சு மொழியாகப் பயன்படுத்தும்போது கீழ்க்கண்ட ஒலி (phonetic) மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| (எ.கா.) | *த்து* | > | *ச்சு* |
| | *ஆயிற்று* | > | *ஆச்சு* |
| | *ற்று* | > | *த்து* |
| | *கள்* | > | *ங்க* |
| | *கிறது* | > | *குது* |
| | *இய* | > | *ஏ* |
| | *ஏ* | > | *வெ* |

**மதிப்பு விகுதி பேச்சுவழக்குச் சொல்**

பேச்சு வழக்குச் சொற்களின் முடிவில் (final position) –ங்க (–nga) என்ற மதிப்பு (honorific) விகுதி வழக்குச்சொற்கள் சேர்த்துப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

(எ.கா.)

*'போட்டி போடுங்க!*
*ஏற்றுமதியில் வெல்லுங்கள்!'*
*இன்ஜினியரிங் நிறுவனங்களுக்கு அழைப்பு 20.1.2005, ப.13*

*நாங்கதாங்கோ நம்பர் ஒன் பெருமைபடுங்க பெண்களே*
*கலெக்டரே தந்தார் சர்டிபிகேட்.*

*கரண்ட் கட்டா? பயப்படாதீங்க ...*
*..... நம்பாதீங்க...*

*துன்பப்படுத்துறாங்க,*
*குழப்பாதீங்க,*

*நியமிக்கிறாங்க,*
*நடக்குதுங்கோ*
*நாங்தாங்கோ,*
*நடந்துக்குங்கோ*
*யாருகிட்டேயும் சொல்லாதீங்க!* *13.09.2011, ப.12*

மேற்கூறப்பட்டுள்ள –ங்க (-nga) என்பது அனைவரும் பயன்படுத்தக் கூடிய மரியாதைக்குரிய பொது வழக்குச் சொல்லாகும். ங்கோ (nkoo) என்ற விகுதி கொங்கு வட்டார மதிப்பு வழக்குச் சொல்லாகும்.

'ஏ' என்னும் ஏகார ஒலி செய்தியின் முடிவில் தொடர்ந்து வருவது போன்று செய்தி அமைக்கப்படுகிறது.

(எ.கா.) *வண்ணம் பூசலே,* *இணைப்பு தரலே,*
*விளக்கு எரியலே,* *சீரமைக்கலே*
*பராமரிக்கலே*

'ஓ' என்ற ஓகார உயிரொலியால் முடியுமாறும் செய்தி உள்ளது.

*(எ.கா.) விபத்தைத் தடுப்பார்களோ*
*வீணாவதைத் தடுப்பார்களோ*
*மாயமானதைக் காண்பார்களோ*

நேரடியாகப் பேசுவது போல் பேச்சுமொழியில் செய்தி உள்ளது.

(எ.கா.) *ரோடாங்க இது, தப்பினாலே ஆச்சு, பளிச்சா? உச்...,*
*வீணாகப் போகுதே*

இதுபோன்ற பேச்சு மொழி நடையை அதிகமாகக் கையாள்கிறது தினமலர்.

**நிலைபேறாக்கம்**

தினமலர் நாளிதழ் அன்றாடம் மக்கள் பயன்படுத்தும் பேச்சு மொழிச் சொற்கள், வழக்குச் சொற்கள் போன்றவற்றை நிலைபேறாக்கம் செய்துள்ளது. செய்தியில் அன்றாடப் பேச்சு வழக்கில் இடம் பெறக்கூடிய மொழிக் கூறுகளைப் பயன்படுத்தியும், மக்கள் அன்றாடத் தமிழில் புழக்கத்தில் உள்ள பிறமொழிச் சொற்களைத் தன்னினமாக்கியும் (nativization) அப்படியே பயன்படுத்துவதன் வாயிலாகவும் ஆற்றல்மிகு மொழிக்கு வழிவகுக்கின்றது. படிப்பவர் எளிதில் புரிந்துகொள்ளும் மொழிநடை அனைத்தையும் இன்று பொது விதிகளாக்கி மொழி வளர்ச்சிக்காகப் பாடுபடுகிறது.

(எ.கா.)

*கம்ப்யூட்டர், ஃபிளாட், பார்லிமெண்ட், டாக்டர்,*
*கலெக்டர், இன்ஜினியரிங், கோர்ட், ஜட்ஜ்,*
*நர்சிங், நர்ஸ், ஸ்டிரைக், வாபஸ்*
*டிக்கட், டிடர்ஜெண்ட், போலீஸ், கேப்டன்,*
*எலெக்ட்ரானிக்ஸ், கிரிக்கெட், ரிமாண்ட்.*

போன்ற பல துறைச்சொற்கள் தினமலர் பயன்பாட்டில் நிலைபேறாக்கம் பெற்று விளங்குவதைக் காணமுடிகிறது.

**புதுச் சொல்லாக்கம்**

இன்றைய சமுதாய அமைப்பிற்கேற்பத் தினமலர் பல புதுச் சொற்களைப் பயன்படுத்துகிறது.

*(எ.கா.) சுனாமி, ஆழிப்பேரலை,*

**எதிரொலிப் பயன்பாடு**

எதிரொலிச் சொற்கள் வழக்கத்தில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. இவ்வகைப் பயன்பாடு தினமலர் நாளிதழ்ச் செய்திகளிலும் காணப்படுகின்றது.

*(எ.கா.) பார்டி – கீர்ட்டி*
*பந்த் – கிந்த்*

**புணர்ச்சி எளிமை**

தினமலர் எளிமை கருதிச் சந்திப்பிழைக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லை.

*(எ.கா.)*

*கருப்பு (ப்) பேட்ஜ் அணிந்து பணிபுரிய அழைப்பு (ப்) நீக்கம்*
*துக்கத்தை (த்) தந்த நிலநடுக்கம்.... ... (த்) நீக்கம்*
*...... அன்னதான(த்) திட்டம் (த்) நீக்கம்*
*தமிழக(க்) கடலோரத்தைச் தூறையாடியது கடல் (க்) நீக்கம்*

**சொற் சுருக்கம்**

*(எ.கா.)* 1. *முதுமலையிலிருந்து 65 யானைகளும் கிளம்பின புத்துணர்வு முகாம் வளாகம் வெறிச்*
2. *ஒரே ஆண்டில் ரூ.77.14 கோடிக்கு போதை பறிமுதல்*

இங்கு, வெறிச்சோடிக் கிடந்தது என்பதற்கு 'வெறிச்' என்றும் போதைப் பொருள் என்பதற்குப் 'போதை' என்றும் சொற்கள் சுருக்கி எழுதப்பட்டுள்ளன. வாசகர்கள் சொற்சுருக்கத்தின் பொருளை எளிமையாகவும் குழப்பமின்றியும் புரிந்து கொள்வர் என்ற எண்ணத்தில் சொற்சுருக்கத்தைத் தினமலர் நாளிதழ் கையாளுவதை ஓர் உத்தியாகக் கொண்டுள்ளது.

**தொழிற்பெயராக்கத் தலைப்பு**

தினமலர் தலைப்புகளில் தொழிற்பெயராக்கம் வேறுமுறையில் உள்ளது. இவ்வகையான புதிய உத்தியைக் கையாண்டுள்ளது தினமலர் நாளிதழ்.

(எ.கா.) *முதல்வரிடம் தொலைபேசி மூலம் பிரதமர் விசாரிப்பு*

*இன்று கடையடைப்பு*

*தொழில் வர்த்தக சபை திட்டவட்டம்*

*96 வர்த்தக வணிகர்கள் சங்கம் பங்கேற்பு*

மேற்கண்ட தொடர்களில் பங்கேற்பு, விசாரிப்பு, கடையடைப்பு போன்ற சொற்கள் (பங்கேற்றல், விசாரித்தல், கடையடைத்தல்) தொழில் பெயரைக் குறிக்கின்றன.

**நடையமைப்பு-ஒலியன் நிலை**

தினமலர் நாளிதழின் மொழிநடைப் பயன்பாட்டில் இடம்பெறும் ஒலியன்கள், அவற்றின் வருகையிடங்கள், அவற்றின் சேர்க்கைகள், போன்றவை எடுத்துக் கொள்ளப்பட்டு வரையறை செய்யப்பட்ட விதிகளின் வாயிலாக விளக்கப்படுகின்றன. இதனால் தமிழ் மொழியில் இடம்பெறாத சில ஒலியன்கள், ஒலியன் சேர்க்கைகள் ஆகியவை இங்கு இடம்பெறுகின்றன. பயன்பாட்டு விலகல் (deviation) உத்தியின் அடிப்படையில் இவை எழுதப்பட்டுள்ளன.

**மொழிமுதல் ஒலியன்**

ஒலியன் வருகை இலக்கண விதிகளுக்குப் புறம்பாக உள்ளது. தமிழ்மொழி மரபுப்படி மெய்யெழுத்துக்களான ட, ர, ல போன்ற எழுத்துக்கள் மொழி முதலில் வருவது மரபாகாது. தினமலர் மொழி நடைப் பயன்பாட்டில் இவ்வுயிர்மெய்கள் மொழிமுதல் வருகின்றன.

(எ.கா.)

| | | | |
|---|---|---|---|
| /r/ | (ர) | ரத்து | /rathu/ |
| /r/ | (ர) | ரவுசு | /ravusu/ |

**மொழியிடை ஒலியன்**

| | | | |
|---|---|---|---|
| / S/ | – (ஸ்) | சாஸ்திரம் | / Ca : Stiram / |
| / S/ | – (ஷ்) | விஷம் | / Visam / |
| / S/ | – (ஷ்) | ரிஷியூர் | / risiyoor/ |

**மொழியிறுதி ஒலியன்**

| | | | |
|---|---|---|---|
| / j / | – (ஜ்) | காலேஜ் | / ka :Le:J / |
| / n/ | – (ன்) | ஜாமின் | / ja:min / |
| / S/ | – (ஸ்) | ஜேசீஸ் | / Jeisiis / |
| / S/ | – (ஷ) | விசேஷ | / Visesa / |

**ஒலியன் சேர்க்கை மொழிமுதல் மெய்யொலியன்கள்**

| | | | |
|---|---|---|---|
| / ST-/ | ஸ்ட் | ஸ்டாண்டர்டு | /Sta:NTarTu/ |
| / Sk-/ | ஸ்க் | ஸ்கூல் | / skool / |

**ஒலியன் சேர்க்கை மொழியிடை மெய் மயக்கங்கள்**

| | | |
|---|---|---|
| / npr - / (ன்ப்ர்) | இன்பார்மர் | / inpa:rmar / |
| / rrT- / (ர்ர்ட்) | கோர்ட் | / ko:rT / |

**ஒலியன் சேர்க்கை மொழியிறுதி மெய்யொலிகள்**

| | | | |
|---|---|---|---|
| / - mp - / | (ம்ப்) | ஸ்டாம்ப் | / sTa : mpu / |
| / - rrT- / | (ண்ட்) | கவர்மெண்ட் | / kavarmeNT / |

**ஒலியன் மரபுமீறல்**

தமிழில் 'ஃ' என்ற ஆய்த எழுத்து தினமலர் நாளிதழில் மொழிப்பயன்பாட்டில் மொழி முதலில் இடம்பெறுவதால் ஒலியன் மரபு மீறப்பட்டிருப்பதைக் காணலாம். ஆங்கில எழுத்தான 'F'–ஐக் குறிக்கத் தமிழ் எழுத்தான பகரத்தோடு ஆய்தத்தைச் சேர்த்து எழுதப்படுகிறது. செய்தியில் 'ஃப' என்பது இடம் பெறுகிறது.

(எ.கா.)

*கம்யூட்டர் ஃபைலை ஜிப் அன் ஜிப் செய்வது எப்படி*

*...... உலகின் ஒரே ஸெமி ஃபிராஸ்ட் ஃபிரிட்ஜ்.*

தமிழில் உரசொலியன் இல்லாத காரணத்தால் ஆங்கில உரசொலியாகிய 'F'-ஐ ஒலிபெயர்த்து எழுதுவது கடினமாக இருப்பதால், இதனைப் போக்கத் தமிழில் உள்ள ஆய்த எழுத்து உரசொலியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**தொடர் மரபுமீறல்**

*கல்லூரியில் இன்று முதல் தென்னிந்திய கல்லூரிகளிடை கால்பந்து*
*26.01.2005, ப.13*

மேற்கூறிய செய்தியில் இடைச்சொல் முழுமையாகப் பயன்படுத்தப்படவில்லை. 'இடைச்சொல்' என்பது தனக்கென்று ஒருபொருள் இல்லாமல் பெயர்ச்சொல்லோடு அல்லது வினைச்சொல்லோடு இணைந்துவரும் சொல்லாகும். கல்லூரிகளுக்கு இடையேயான கால்பந்து என எழுதுவதற்குப் பதிலாகக் கல்லூரிகளிடை கால்பந்து என எழுதப்பட்டுள்ளது. இங்கு இலக்கண மரபு மீறப்பட்டுள்ளது.

*இல்லைகள் ஏராளம்! தவிப்போ தாராளம்* 04.01.2005,ப.4

இல்லை என்பது எதிர்மறைச் சொல்; கள் என்பது பன்மை விகுதி. அடிப்படை வசதிகள் பள்ளியில் இல்லை என்பது செய்தி. இவ்வசதிகள் இல்லை என்பதைக் குறிப்பிடுவதற்கு இல்லை என்ற எதிர்மறைச் சொல்லோடு கள் என்னும் பன்மை விகுதியைச் சேர்த்து இல்லைகள் என்ற புதிய வழக்கு தினமலர் மொழிப்பயன்பாட்டில் கையாளப்பட்டுள்ளது.

தாராளம் என்ற சொல்லுக்குச் சிக்கனமற்ற தன்மை என்று பொருள் கொள்ளலாம். குணத்தின் அடிப்படையில் தாராள குணம், தாராள மனம் என்பதையும் தேவைக்கு மேல் உள்ளதைத் தாராளம் என்றும் கூறலாம். பல அடிப்படை வசதிகள் இல்லை அதனால் ஏற்படக்கூடிய தவிப்பு அதிகம் என்பதைக் குறிக்கும் விதமாக இல்லைகள் ஏராளம் தவிப்புபோ தாராளம் என்று படிப்பவரைக் கவரும் நோக்கில் எழுதப்பட்டுள்ளது.

**எழுதுமுறை மரபு மீறல்**

தினமலர் நாளிதழில் செய்தியை எழுதும்போது எழுதுமுறை மரபு ஓரளவு புறக்கணிக்கப்படுவதைக் காணலாம். பொருளின் செயலின் செயல்பாட்டை விளக்க எழுத்துக்களைப் பிரித்து எழுதப்படும் போக்கும் காணப்படுகிறது. தலைப்புச் செய்தியில் இவ்வாறு கையாளப்படுகிறது.

*(எ.கா.)*

*பார்த்தால் நாகரீகமுகங்கள் பி...டித்தால் பிளேடு பார்ட்டி*
*05.08.2004*

*தள்ளா...டி வந்த ..........* *01.02.2005*

*.....யை இழுழுழு...க்க பிளான்* 06.02.2005

*தனியார் மருத்துவமனையில் ஆ.....ச்சர்யம்* 13.02.2005

*'ஹி ... ஹி ...'*

*ச்ச்ச்ச் சும்மாங்காச்சுக்கும்* 29.01.2008: 4

*'கொர் ... ர் ... ர்'*

*யாராவது தட்டி எழுப்புங்கப்பா!* 27.1.2009: 13

*மெழுகுவர்த்தி விலை விர் ...* 20.2.2012: 4

**தமிழ்-ஆங்கிலம் கலந்த பயன்பாடு**

தமிழ் எழுத்துக்களுடன் ஆங்கில எழுத்தைப் பயன்படுத்தி செய்தியை விளக்கும்முறை தினமலரில் பரவலாகக் காணப்படுகிறது.

*(எ.கா.) Mயூசிக் Sங்கீதம்* 19.12.2004

**உருபன் மரபு மீறல்**

செய்தியில் உருபு மயக்கங்களும் காணப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட பொருளில் பயன்படுத்தவேண்டிய உருபு வேறொரு பொருளில் செய்தியில் கையாளப்பட்டாலும் வாக்கியத்தின் அமைப்பு மாறுவதில்லை. இம்மாற்றம் புரிந்து கொள்ளும் தன்மையைக் கெடுப்பதில்லை. மாறாக இப்பயன்பாடு செய்திக்கு வலிமை சேர்ப்பதாக உள்ளது. தினமலர் உருபு மயக்கங்களைச் செய்தியில் வெளிப்படுத்துகின்றது.

*(எ.கா.) உருள்கிறது ஊட்டி உருளை விலை*

*இனித்தது இண்டர்வியூ*

*வனத்தீயை வாடச் செய்யப் பயிற்சி*

*பதவி அறுவடைக்கு பரபரப்பு போட்டி* 27.10.2009:4

*போலி இன்ஸ்பெக்டரைஅமுக்கியது கோவை போலீஸ்*

6.2.2012:11

**பொருண்மை மாறுபாடு**

புதிய சொற்பயன்பாட்டை உருவாக்குதல், அறிமுகப்படுத்துதல் போன்றவற்றோடு, மட்டுமல்லாமல் சிலசொற்களை உண்மைப் பொருளிலிருந்து மாறுபட்ட பொருளை உணர்த்துவதைத் தினமலர் நாளிதழில் காணமுடிகிறது. ஒரு மொழியில் வழங்கும் சொற்களை அவை வழங்கிவரும் முறையிலேயே பயன்படுத்த வேண்டும். மாற்றி எழுதினால் பொருள் மாறுபடலாம். சொல்மாற்றம் அனுமதிக்கப்படாத இடங்களில் சொற்சேர்க்கையை மாற்றக்கூடாது. அவ்வாறு மாற்றிப் பயன்படுத்தும்போது பொருள் முற்றிலும் மாறுபடுகின்றது.

*(எ.கா.) கஞ்சா செடிகளை கைது செய்யத் திட்டம்*
12.01.2005:16

ஒருவரைக் கைது செய்து தன்னிச்சையாகச் செயற்படவிடாமல் கட்டுப்பாட்டில் வைத்தல் (arrest) என்று பொருள். கஞ்சா செடி பயிரிடுவதைத் தடை செய்யத் திட்டம் என்று கூறுவதற்குப் பதிலாகக் *கஞ்சா செடிகளைக் கைது செய்யத் திட்டம்* என்று எழுதப்பட்டுள்ளது. 'தடை' என்ற சொல்லுக்குப் பதிலாகக் 'கைது' என்று பயன்படுத்தியிருப்பது புதிய வழக்காக உள்ளது. வாசகரைக் கவர்வதற்காக இதுபோன்று எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

(எ.கா.)

*... ... வங்கியில் வீட்டுக்கடன் வழங்கும் உற்சவம்*
*6.2.2005*

உற்சவம் என்ற சொல்லுக்குக் கோயிலில் திருவிழாக் கொண்டாட்டம் என்று பொருள். தினமலர் செய்திப் பயன்பாட்டில் வங்கியில் வீட்டுக்கடன் வழங்கும் நிகழ்ச்சி என்று பயன்படுத்துவதற்குப் பதிலாக 'உற்சவம்' என்று மாறுபட்ட பொருளில் பயன்படுத்தப் பட்டிருக்கிறது.

**புதுமையான பயன்பாடு**

*தண்ணீர் குடிக்க யானைகள் வன செக்போஸ்ட்டுக்கு விசிட்*
*13.11.2003*

'விசிட்' என்ற ஆங்கிலச்சொல்லுக்குப் பார்வையிடுதல் என்ற பொருள் உண்டு. நாளிதழில் அந்தச் சொல் விலங்கினத்திற்குப் (யானை) பயன்படுத்தப்பட்டுள்ளது. விசிட் என்ற சொல் பார்வையிடுதல், காட்சிப் பயணம் போன்றவற்றைக் குறிப்பதற்கு வழக்கில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. தண்ணீர் குடிக்க யானைகள் வனச் செக்போஸ்ட்டுக்கு வந்தன என எழுதப்பட்டிருக்கலாம். மாறாகச் செக்போஸ்டுக்கு விசிட் என்று புதுமையாக எழுதப்பட்டுள்ளது.

**பொருள் மயக்கம்**

ஒரு தொடர் தெளிவற்ற பொருளைத் தருமானால் அத்தொடரை மயக்கத் தொடர் எனலாம். இவ்வாறு இரு பொருளைத் தருகின்ற தொடரினைத் தினமலரில் காணலாம்.

*(எ.கா.)*
*தாயின் வேண்டுதலை நிறைவேற்ற மத்திய பிரதேசத்திலிருந்து ஒன்பது ஆண்டாக தூளிகட்டி தாயை தோளில் அமர்த்தியபடி நடைப்பயணமாக ராமேஸ்வரம் செல்லும் கைலாஸ்கிரி.*
*–26.11.2004*

மேற்கண்ட செய்தியைப் படிப்பவர்களுக்குப் பொருளைப் புரிந்து கொள்வதில் ஒருவிதக் குழப்பம் ஏற்படலாம். தாயின் வேண்டுதலை நிறைவேற்ற மத்தியப் பிரதேசத்திலிருந்து இராமேஸ்வரம் போக ஒன்பது ஆண்டுகள் ஆகினவா? அல்லது ஒன்பது ஆண்டுகளாக நடைப்பயணம் மேற்கொண்டாரா? என்ற குழப்பம் வாசகர்களுக்கு ஏற்படலாம். இருப்பினும் நிகழ்ச்சி நடந்த சூழ்நிலையைக் கருத்தில் கொள்ளும்போது பொருள் மயக்கம் ஏற்பட வாய்ப்பில்லை. இதுபோன்ற பயன்பாடு தினமலரில் காணப்படுகிறது.

**அயல்மொழிக் கலப்பு**

தாய்மொழிக் கூறையும் பிறமொழிக் கூறையும் ஒன்றாகச் சேர்த்துப் பெறப்படுவது ஒருவகையில் தன்னினமாக்கம் (nativisation) ஆகும், (ஜெயா, வ. 1989:88). பிறமொழிச் சொற்களோடு தமிழில் உள்ள முழுச்சொற்களும் சிலசமயங்களில் ஒட்டுகளும் சேர்ந்து இவ்வமைப்பு உருவாக்கப்படுகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட பிறமொழிக் கூறுகள் தமிழ்மொழி அமைப்போடு சேர அயல்மொழிக் கலப்பு முறையில் புதுச்சொற்கள் தமிழில் உருவாகின்றன.

*தேர்தல் + கமிஷன் > தேர்தல் கமிஷன்*
*தெற்கு + ரயில்வே > தெற்கு ரயில்வே*

**ஆங்கிலப்பெயர் + தமிழ்ப் பெயர்**

*கோர்ட் + வளாகம் > கோர்ட்வளாகம்*
*ஃபிளாட் + விலை > ஃபிளாட்விலை*

*போன்றன.*

தமிழ்ச் சொற்களுக்கு ஆங்கிலச் சொற்கள் அடைகளாகவும் ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ்ச் சொற்கள் அடைகளாகவும் கொண்டு உருவாக்கப்படும் கலப்புத் தொடர்கள் தினமலரில் காணப்படுகின்றன.

**தமிழ்ப்பெயரடை+ ஆங்கிலப் பெயர்**

*அதிரடி + ஆக்ஷன் > அதிரடி ஆக்ஷன்*
*முக்கிய + சேனல் > முக்கியச்சேனல்*

**ஆங்கிலப் பெயரடை+ தமிழ் பெயர்**

*சூப்பர் + சலுகை > சூப்பர் சலுகை*
*சூப்பர் + சாதனை > சூப்பர் சாதனை*

**ஆங்கில வினை + தமிழ் வினை**

*டிஸ்மிஸ் + செய்தனர் > டிஸ்மிஸ் செய்தனர்*
*சஸ்பெண்ட் + செய்தார் > சஸ்பெண்ட் செய்தார்*

**ஆங்கிலப் பெயரடை + ஆங்கிலப் பெயர்**

*சூப்பர் + டெக்கரேஷன் > சூப்பர் டெக்கரேஷன்*
*சூப்பர் + சேனல் > சூப்பர் சேனல்*

**ஆங்கிலப்பெயர் + ஆங்கிலப்பெயர் >ஆங்கிலக் கூட்டுப்பெயர்**

*பிரவுசிங் + சென்டர் > பிரவுசிங்சென்டர்*
*வீடியோ + கான்பரன்ஸ் > வீடியோ கான்பரன்ஸ்*

**வடமொழிப்பெயர் + தமிழ்ப்பெயர்**

*ஜனாதிபதி + விருது > ஜனாதிபதி விருது*
*ஷஷ்டி + விரதம் > ஷஷ்டி விரதம்*

**தமிழ்ப்பெயர் + வடமொழிப்பெயர்**

*தெப்பம் + உற்சவம் > தெப்ப உற்சவம்*
*கர்ப்பிணி + வேஷம் > கர்ப்பிணிவேஷம்*

**தமிழ்ப் பெயரடை + வடமொழிப்பெயர்**

*புரியாத + பாஷை > புரியாத பாஷை*
*முன் + ஜாமின் > முன்ஜாமின்*

**வடமொழிப்பெயர்+ தமிழ்வினை**

*கோஷம் + போட்டனர் > கோஷம் போட்டனர்*
*விஷம் + குடித்து > விஷம்குடித்து*

**வடமொழிஅடை + தமிழ்ப்பெயர்**

*ஜொலிக்கும் + விழா > ஜொலிக்கும் விழா*

**வடமொழிப்பெயர்+ வடமொழிப்பெயர் > வடமொழிக்கூட்டுப்பெயர்**

*வாஸ்து + பூஜை > வாஸ்துபூஜை*

*பிரதோஷ + பூஜை > பிரதோஷ பூஜை*

*ஜனாதிபதி + விஷயங்கள் > ஜனாதிபதி விஷயங்கள்*

**வடமொழி அடை + வடமொழிப் பெயர்**

*விஷமமான + நிஜம் > விஷமமான நிஜம்*

**அடைச் சொல்**

பெயர்ச் சொல் அல்லது வினைச்சொல்லுக்கு முன்வந்து அதை விவரிக்கும் சொல் அடைச் சொல் எனப்படும். ஆங்கிலப் பெயர்ச் சொல்லுக்கு முன் தமிழ் அடை பயன்படுத்தப்படுகின்றது.

**தமிழ் அடை + ஆங்கிலப் பெயர்ச் சொல்**

*புதிய* + *டிப்ளமோ* > *புதிய டிப்ளமோ*

*போலி* + *ரேஷன் கார்டு* > *போலி ரேஷன் கார்டு*

*போதை* + *போலீஸ்* > *போதை போலீஸ்*

**தமிழ்ப் பெயரடை + தமிழ்ப் பெயர்**

*சிறப்பான* + *ஆட்டம்* > *சிறப்பான ஆட்டம்*

*மகத்தான* + *வெற்றி* > *மகத்தான வெற்றி*

போன்றன.

ஆங்கிலப் பெயர்ச் சொற்களுடன் தமிழ்ப் பன்மை உருபு (plural marker) இணைத்துப் பயன்படுத்தப்படும் போக்கு அதிகமாகக் காணப்படுகிறது.

**ஆங்கிலப் பெயர் + தமிழ்ப் பன்மை விகுதி**

*டாக்டர்* + *கள்* > *டாக்டர்கள்*

*இன்ஜினியர்* + *கள்* > *இன்ஜினியர்கள்*

**வேற்றுமை உருபு**

பெயரின் இறுதியில் அமைந்து அவற்றின் பொருள் நிலையை வேறுபடுத்தித் தருவது வேற்றுமை உருபு எனப்படும். ஆங்கிலப் பெயர்ச் சொற்களுடன் தமிழ் வேற்றுமை உருபுகளான ஐ, ஆல், கு, இன், இல், உடன், இடம் ஆகிய வேற்றுமை உருபுகளை இணைத்துக் கையாளப்படும் போக்கு அதிகமாகக் காணப்படுகிறது.

**இரண்டாம் வேற்றுமை உருபு - ஐ** (Second case)

*பட்ஜெட்* + *ஐ* > *பட்ஜெட்டை*

*மெஷின்* + *ஐ* > *மெஷினை*

**மூன்றாம் வேற்றுமை உருபு -ஆல்**

**(கருவி வேற்றுமை)** (Instrumental case)

*பஸ்கள்* + *ஆல்* > *பஸ்களால்*

*சுனாமி* + *ஆல்* > *சுனாமியால்*

**நான்காம் வேற்றுமை உருபு -கு**

**(கொடைப்பொருள் வேற்றுமை)** (Dative case)

*நெட்வொர்க்* + *க்கு* > *நெட்வொர்க்கிற்கு*

*கோர்ட்* + *க்கு* > *கோர்ட்டுக்கு*

*சி.பி.ஐ* + *க்கு* > *சி.பி.ஐக்கு*

**ஐந்தாம் வேற்றுமை –இல் (இடவேற்றுமை)** (Locative Case)

*லாட்ஜ் + இல் > லாட்ஜில்*
*ஸ்டேடியம் + இல் > ஸ்டேடியத்தில்*
*பட்ஜெட் + இல் > பட்ஜெட்டில்*

**உடனிகழ்ச்சி வேற்றுமை உருபு–உடன்** (Sociative Case)

*ரன்கள் + உடன் > ரன்களுடன்*
*டி.வி + உடன் > டிவியுடன்*

மேற்கூறப்பட்டுள்ள வேற்றுமை உருபுகளில் நான்காம் வேற்றுமை உருபான கொடைப் பொருள் வேற்றுமை (dative case) 'கு' மற்றும் மூன்றாம் வேற்றுமை உருபான கருவிப்பொருள் வேற்றுமை (instrumental case) 'ஆல்' இவை இரண்டும் தினமலர் நாளிதழில் பெரும்பாலும் பயன்படுத்தப்படுகின்றன.

அயல்மொழிச் சொற்கள், அதன் கூறுகள் தமிழ் மொழியில் கலக்கும்போது இயல்பான இலக்கண விதிக்கு உட்பட்ட நடையைப் பின்பற்ற இயலாது. இருப்பினும், புதிய சொல் வழக்குகள் உருவாக்கப்படுகின்றன. இதுபோன்ற மாற்றங்களை இன்று இயல்பாகவே மக்கள் ஏற்றுக் கொண்ட நிலையையும் இங்கு உணரலாம்.

**ஒலிபெயர்ப்புச் சொல்**

(எ.கா.)

| *ஆங்கிலச் சொல்* | *ஒலி பெயர்ப்பு சொல்* | *தமிழ்ச்சொல்* |
|---|---|---|
| *Insurance* | *இன்சூரன்ஸ்* | *காப்பீடு* |
| *Scholarship* | *ஸ்காலர்ஷிப்* | *ஊக்கத் தொகை* |
| *Pension* | *பென்ஷன்* | *ஓய்வு கால ஊதியம்* |
| *Computer* | *கம்ப்யூட்டர்* | *கணினி* |
| *Internet* | *இன்டர்நெட்* | *இணையத்தளம்* |

**துடிப்புச் சொல்**

செய்தியின் முக்கியத்துவத்தையும் தன்மையையும் உணர்த்தத் தினமலர் துடிப்புள்ள பதட்டத்தை வெளிப்படுத்தக்கூடிய சொற்களைக் கொண்ட தலைப்புச் செய்தியை அதிகமாகப் பயன்படுத்தி வெளியிடுகின்றது.

*கிளைமாக்சில் 'திடீர்' சிக்கல் 28.07.2009, ப.4*

*நள்ளிரவில் வீட்டுக்குள் 'டமால்'*
*2 பேர் உடல் கருகி பலி 30.06.2009, ப.10*

*பட்டாசு தொழிற்சாலையில் 'டமார்' 21.7.2009, ப.14*

*போலீஸ் விசாரனையில் 'திருக்'*
*அதிகாரிகள் மீண்டும் 'அதிரடி'* 06.02.2012, ப.12

*வெள்ளை ஆசாமியுடன் ஏர் இந்தியா*
*அதிகாரி சிக்கிய 'பகீர்'* 20.2.2012, ப.11

**சொல் வரிசை மாறுபாடு**

தமிழ்த் தொடர்கள் பொதுவாக எழுவாய் (subject), செயப்படு பொருள் (object), பயனிலை (verb) என்ற வரிசையைக் கொண்டுள்ளன. கருத்திற்கேற்ப இவ்வரிசையை மாற்றியமைப்பதால் பொருள் மாறுபடாமலும் எழுதலாம். இவ்வமைப்பைக் கருத்திற்கேற்ப மாற்றிப் பின்வரும் அமைப்பிலும் தினமலரில் செய்திகள் வெளி வருகின்றன.

*செயப்படு பொருள்+ பயனிலை + எழுவாய்*
*பயனிலை + எழுவாய் + செயப்படுபொருள்*
*பயனிலை + எழுவாய் + பயனிலை+ எழுவாய்*
*பயனிலை + எழுவாய் + பயனிலை*
*எழுவாய் + எழுவாய் + பயனிலை*
*பயனிலை + செ.பொ + எழுவாய் + பயனிலை + எழுவாய்*
*எழுவாய் + பயனிலை*
*பயனிலை + எழுவாய்*
*பயனிலை + பயனிலை + எழுவாய்*

போன்ற பல்வேறு தொடர்களை உள்ளடக்கிய வாக்கியங்கள் உள்ளன. செயப்படு பொருள், பயனிலை ஆகியவை இல்லாமலும் தொடர்கள் பயன்படுத்தப்படுகின்றன.

***செயப்படுபொருள் + பயனிலை + எழுவாய்***

(எ.கா.) *முதல்வரை சந்தித்தார் டாக்டர் ......*
*முதல்வரை (செயப்படு பொருள்)*
*சந்தித்தார் (பயனிலை)*
*டாக்டர் ...... (எழுவாய்)*

*தொடரை வென்றது ஆஸ்திரேலியா*
*தொடரை (செயப்படு பொருள்)*
*வென்றது (பயனிலை)*
*ஆஸ்திரேலியா (எழுவாய்)*

**பயனிலை + எழுவாய் + செயப்படுபொருள்**

(எ.கா.)

*விரட்டாதீங்க புகார் கொண்டு வருவோரை*

*விரட்டாதீங்க (பயனிலை)*

*புகார் (எழுவாய்)*

*கொண்டு வருவோரை (செயப்படுபொருள்)*

**பயனிலை + எழுவாய் + பயனிலை + எழுவாய்**

(எ.கா.)

*கண்டனர் நாகத்தைக் காட்டினர் வேகத்தை*
*கண்டனர் (பயனிலை)*
*நாகத்தை (எழுவாய்)*
*காட்டினர் (பயனிலை)*
*வேகத்தை (எழுவாய்)*

**பயனிலை + எழுவாய் + பயனிலை**

(எ.கா.)

*எரிந்த சேரன் ரயில் பெட்டியை என்ன செய்யப் போறாங்க*
*எரிந்த (பயனிலை)*
*சேரன் ரயில் பெட்டியை (எழுவாய்)*
*என்ன செய்யப்போறாங்க (பயனிலை)*

**எழுவாய் + எழுவாய் + பயனிலை**

(எ.கா.)

*சாலை விபத்தில் வெல்ல வியாபாரி சாவு*
*சாலை விபத்து (எழுவாய்)*
*வெல்ல வியாபாரி (எழுவாய்)*
*சாவு (பயனிலை)*

**பயனிலை + செ.பொ + எழுவாய் + பயனிலை + எழுவாய்**

(எ.கா)

*கொள்ளையடித்த பொருளை வீதியில் வீசி தப்பிய நூதன திருடர்கள்*
*கொள்ளையடித்த (பயனிலை)*
*பொருளை (செயபடுபொருள்)*
*வீதியில் (எழுவாய்)*
*வீசிதப்பிய (பயனிலை)*
*நூதன திருடர்கள் (எழுவாய்)*

**எழுவாய் + பயனிலை**

*(எ.கா)* *விசாரணைக் கைதி திடீர் சாவு*

*விசாரணைக் கைதி (எழுவாய்)*
*திடீர் சாவு (பயனிலை)*

*பயனிலை + எழுவாய்*

*(எ.கா) பாழடைகிறது ரயில்வே ஸ்டேஷன்*

*பாழடைகிறது (பயனிலை)*
*ரயில்வே ஸ்டேஷன் (எழுவாய்)*

*செய்தனர் சேவை*

*செய்தனர் (பயனிலை)*
*சேவை (எழுவாய்)*

***பயனிலை + பயனிலை + எழுவாய்***

(எ.கா)

இறந்தும் ஒளிர்கிறார் கவிதா

*இறந்தும் (பயனிலை)*
*ஒளிர்கிறார் (பயனிலை)*
*கவிதா (எழுவாய்)*

செய்யப்படுகின்ற செயலுக்கு முக்கியத்துவம் கொடுப்பதற்காக இவ்வாறு சொற்களை, சொல்வரிசையை மாற்றிப் பயன்படுத்தப்படுகிறது. அதாவது யார், என்ன, எங்கே, ஏன், எப்படி போன்ற வினாக்களின் விடைக்கு முக்கியத்துவம் அளிக்கும் வகையில் அச்சொற்கள் வாக்கியத்தின் தொடக்கத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

**வினைமுற்றுத் தொடர்**

தினமலரில் இரு வினைமுற்றுகளை இணைத்துச் செய்தி வெளியிடப்படுகிறது. சிட்டி க்ரைம் எனும் பகுதியில் வாசகர் ஆர்வத்தைத் தூண்டவும், செய்தியின் முக்கியத்துவத்தை உணர்த்தவும், வினைமுற்றுகளைப் பயன்படுத்திச் செய்தியை வெளியிடுவதை ஒரு உத்தியாகக் கையாள்கிறது தினமலர் நாளிதழ்.

*30.01.2004*

*(எ.கா.) பயந்தார்; பலியானார்*
*திருடினார்; கைதானார்*

*மிரட்டினார்; சிக்கினார்*
*திருடினர்; பறந்தனர்*

*16.12.2004*

**அடைத் தொடர்**

செயல் நலன்களைப் பிரதிபலிப்பதில் அடைச்சொற்களே சிறப்பிடம் பெறுகின்றன. பலவிதமான அடைத்தொடர்களைக் கையாள்வதன் மூலம் செய்தியின் செயல் நலன்களை நமக்கு நன்கு

தெரியப்படுத்தி அச்சொற்களின் மூலம் செய்தியைப் படிக்கும்போது உணர்ச்சியைத் தினமலர் வாசகர்களுக்கு ஏற்படுத்துகிறது.

*(எ.கா.)*

*.... ...... 7வது கட்டப் போராட்டத்தில் நொந்து நூடுல்சாகி வெந்து சுண்ணாம்பாகி நம்பிக்கையிழந்து நலிகியுள்ளார் ........*

*பளீரென்று சிரித்தபடிதான் பேசுவார் எதையும் பட்டென பேசும் போல்டான பெண்மணி. 22.1.2005:ப.8*

*புதிய மினி லாரி மினி பஸ்கள் அறிமுகம்*

**செயவெனெச்சம்**

செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சத்தைப் பயன்படுத்தித் தினமலரில் சொற்றொடர் உள்ளது. 'இன்று இனிதாயக் கழிய' என்னும் தலைப்பிட்டுப் பயன்படுத்தப்படுகின்றது. ஒவ்வொரு பத்திகளின் தலைப்புகளில் இவ்வாறு கையாளப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

*(எ.கா.)* *பக்தியில் லயிக்க ...*

*படிப்பில் சிறக்க ...*

*பாராட்டுப் பெற ...*

*சட்டத்தை உணர ...*

*இளமையை ரசிக்க ... 07.10.2003*

*இணையத்தில் சிறுவர்களைக் காக்க ....*
*மின்சாரத்தை மிச்சப்படுத்த... 07.02.2012,ப.8*

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் செயவென் எச்சங்களான சிறக்க, பெற, உணர, ரசிக்க போன்றவை முறையே படிப்பில் சிறப்பதற்காக, பாராட்டுப் பெறுவதற்காக, சட்டத்தை உணர்த்துவதற்காக, சிறுவர்களைக் காப்பதற்காக, மின்சாரத்தை மிச்சப்படுத்துவதற்காக என்ற நோக்கப் பொருண்மையில் பயன்படுத்தப் பட்டிருகின்றன.

**ஒலிக்குறிப்புச் சொல்**

ஒலிக்குறிப்புச் (onomatopoeia) சொல்லைப் பயன்படுத்தி ஆசிரியரின் உணர்ச்சி வெளிப்பாட்டினைப் படம் பிடித்துக்காட்டி அதைப்படிப்போரும் உணர்ந்து அங்நிகழ்ச்சியை நேரில் பார்ப்பதுபோன்ற உணர்வைப் பெறும் வகையில் செய்தியின் சூழலோடு ஒன்றிடவும் இத்தகைய சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

*(எ.கா.)*

*தொட்டியில் விழுந்த குட்டி யானையை மீட்க*
*10 மணி நேர திக்... திக்... திக்...!* *18.1.2005,ப.1*

*மீனாட்சி கோயில் ஒட்டகங்களுக்கு ஜல்.. ஜல் ஓசையுடன் கொலுசு*

*அழகிய குடியிருப்பு நடுவே அச்சுருத்தும் மர்ம பங்களா 20 ஆண்டாக மக்களுக்குத் திக் திக் திக் ...*

*தோண்டியதும் சர்ர்... நிறுத்தினர் சட்டென 01.12.2008, ப.4*

*ரோஜா விலை விர்ர் ...*

*தற்கொலை திக்... திக்... திக்...*

*மஞ்சள் விலை 'குபீர்'* *18.7.2009, ப.2*

**ஒத்திசைவுச் சொல்**

*தள்ளு முள்ளு; கல்வீச்சு வேன் கண்ணாடி உடைப்பு*
*... .... ...* *20.8.2008, ப.12*

*தில்லு முல்லு மூலம் ரேஷன் கார்டு*

*போலீஸ் அதிகாரி பலே பிளான்* *18.12.2008, ப.4*

**இரட்டைக் கிளவி**

ஓர் இணைச்சொல்லைப் பிரித்தால் பொருள்தராத சொல் இரட்டைக் கிளவி (reduplication) ஆகும். இச்சொல் தினமலரில் அதிகமாகக் கையாளப்பட்டுள்ளது. செய்தி விறுவிறுப்பாகவும் பரபரப்பாகவும் இருக்கவேண்டும் என்பதற்காக இத்தகைய சொற்கள் பயன்படுத்தப்பட்டு செய்தி வெளியிடப்படுகின்றது.

(எ.கா.) *கமகம பொருட்கள் கலக்குது ஏற்றுமதியில்*

*மல்லிகைப் பூ விலை கிடுகிடு உயர்வு*

*குண்டு மிரட்டலும் கோட்டை 'கிளுகிளு'வும்* *27.1.2008,ப.4*

*சுறுசுறுப்பாகும் 'தலை'கள்* *31.1.2008,ப.4*

*கலகலத்த அரங்கம்*
*கட்டி போட்ட காமெடி* *15.12.2008,ப.4*

*பருப்பு விலை கிடுகிடு உயர்வு!* *29.6.2009,ப.5*

| | |
|---|---|
| *கட்சிகள் 'சுறுசுறு'* | *2.7.2009,ப.1* |
| *அணைகள் 'கிடுகிடு'* | *18.7.2009,ப.1* |
| *நாகர்கோவில் ரயிலில் 'தீ'<br>கரூர் அருகே பரபரப்பு* | *26.2.2012,ப.2* |

**முரண் தொடை**

வாசகர்களின் கவனத்தைக் கவருவதற்காக முரண்தொடையை உத்தியாகப் பயன்படுத்துகிறது தினமலர்.

(எ.கா.) *எட்டியது அபாயக் கட்டம்.*
*எட்டாதது சீரமைப்புத் திட்டம்.*

*கலக்கிய நாகம்.*
*கலங்காத ஆட்டோ டிரைவர்கள்.*

**எதுகை மோனை**

படிப்போரைக் கவர்ந்திழுக்க அலங்காரமான ஒலிநயத்துடன் எதுகை மோனைச் (alliteration) சொற்களைப் பயன்படுத்திச் செய்தி வெளியிடப்படுகின்றன.

| | |
|---|---|
| (எ.கா.) பழுதடைந்த பாலத்தால்<br>பரிதவிக்கும் பொதுமக்கள் | *3.12.2008,ப.6* |
| *காரை அடித்துச் சென்றது<br>காட்டாற்று வெள்ளம்* | *14.12.2008,ப.1* |
| *தட்டுப்பாடு ரேஷனில்<br>தாராளம் கடைகளில்* | *22.12.2008,ப.4* |
| *விருது வாங்கப் போனோம் ....<br>வீண் செலவு செய்தோம் ....* | *27.1.2009,ப.4* |
| *வீரமா ... விதியா ...<br>ஜல்லிக்கட்டு கொடூரம்* | |
| *விண்ணை எட்டும் விலைவாசி* | *27.7.2009,ப.12* |
| *தண்டவாளத்தில் தண்டவாளம்<br>தப்பியது ரயில்* | *31.1.2010,ப.17* |
| *பாம்புடன் வந்த பாம்பாட்டி* | *09.02.2012,ப.12* |

**இயைபு**

முரண்பாடு இல்லாமல் பொருந்துதல், இணைதல் போன்ற அமைப்பை இயைபு என்று கூறுவர்.

*தமிழக வாகனம் வராது!*

*தமிழ்ப் பாட்டு ஓடாது!* 9.12.2008,ப12

*துரத்தியது தப்பு*
*மாட்டிவிட்டது கப்பு'* 31.1.2009,ப.3

*கதரிய தாய்*
*உதரிய சேய்*
*தண்டவாளத்தில் தூக்கம்*
*புதுமாப்பிள்ளை வீட்டில் துக்கம்* 28.7.2009,ப.12

**விளிச் சொல்**

படிப்பவர் கவனத்தை ஈர்ப்பதற்காக ஒரு குறிப்பிட்ட பகுதியினரை விளித்துக் கூறுவதைப்போல் சில செய்தி வருகிறது. இவ்வுத்தி குறிப்பிட்ட பகுதி வாசகரைக் கவர்ந்திழுக்க ஏதுவாக அமைகிறது.

*(எ.கா.)*

*ஹலோ லேடீஸ் உதவுங்கள்.*

*ஹலோ தோழியே சீட்டில் அமர்ந்து வேலை செய்யப்பிடிக்குமா உங்களுக்கு?*

**சுருக்க முறை**

தினமலர், இடப்பற்றாக் குறையைக் கருத்தில் கொண்டு செய்தியைச் சுருக்கமாகவும் விரைவாகவும் கூறுவதற்கு இவ்வுத்தியைக் கையாளுகிறது. இச்சொற்கள் பெரும்பான்மையாகப் பெயர்ச் சொற்களாகவே உள்ளன. ஊர் பெயர், நாடுகளின் பெயர், மாநிலங்களின் பெயர், கட்சிப் பெயர், பதவிப் பெயர், அரசியல் தலைவர்களின் பெயர், நிறுவனங்களின் பெயர் போன்றவற்றை இவ்வாறு சுருக்கிப் பயன்படுத்துகின்றது. இச்சுருக்கப் பயன்பாடு பெரும்பான்மையாக ஆங்கிலத்தின் நேரடி ஒலிப்பெயர்ப்பாக உள்ளது. இவ்வுத்தி அதிகமாகக் கையாளப்படுகிறது.

(எ.கா.)

| | |
|---|---|
| *ஆஸி.* | *ஆஸ்திரேலியா* |
| *நியுஸ்.* | *நியூஸிலாந்து* |
| *இன்ஜி.* | *இன்ஜினியர்* |
| *ஜன.* | *ஜனவரி* |

**மொழித்தாவல்** (Language Shift)

ஆங்கிலத் தொடர்களையும் தமிழ்த் தொடர்களையும் மாற்றி மாற்றி எழுதுவது மொழித்தாவல் என்று கூறப்படுகிறது.

இவ்வகைப்பயன்பாடு தினமலர் நாளிதழிலின் மொழிப்பயன்பாட்டில் அதிகமாகக் காணப்படுகிறது.

*'மட்டன் நோ ...சிக்கன் தா'*
*அசாம் சிறுத்தைகள் அடம்* 16.12.2008,ப.13

*புகைக்கு 'குட்பை' சொன்னால்*
*'லைப் டைம்' கூடும்* 10.10.2009,ப.11

*விண்டோஸ் பூட்டிங்*
*நேரத்தை வேகப்படுத்த .....* 13.09.2011,ப.15

*அன்லிமிடெட் அழைப்புகள்...புதிய திட்டம்*
*வாய்ஸ் கமாண்ட் வசதியுடன்...அறிமுகம்* 12.02.2012,ப.2

*இந்தியாவில் சைலண்ட் மோடு*
*வெளிநாட்டில் வைப்ரேசன் மோடு* 20.2.2012,ப.4

**அடுக்குத் தொடர்**

ஒரு சொல் இருமுறை வந்து அதனைப் பிரித்தாலும் பொருள் தரக்கூடிய சொல்லை அடுக்குத் தொடர் என்பர். இச்சொற்கள் பொருளின் செயலாற்றலையும் பயனையும் சிறப்பினையும் விளக்கி உணர்வினைத் தூண்டும் விதமாகவும் அமைந்துள்ளன. குறிப்பிட்ட சொல் மீண்டும் மீண்டும் வரும்போது செய்தியின் முக்கியத்துவத்தை உணரலாம். இவ்வகை அடுக்கு மொழித் தொடர்கள் தினமலர் நாளிதழில் அதிகமாகக் காணப்படுகின்றன.

(எ.கா.)

*யோசிங்க யோசிங்க படிங்க படிங்க அறிவு பெருகும் சாதனை அழைக்கும்.*

*தோண்டத் தோண்ட சாமி சிலைகள் .... ...*

*உடல் வலியைப்போக்க கண்டகண்ட மாத்திரைகளை வாங்கி விழுங்காதீர்கள்.*

*மாத்துங்க மாத்துங்க வயதான தோற்றமளிக்கும் இந்த கண்ணாடியை என்றும் இளமையான தோற்றத்துக்கு.*

*புதுசு புதுசாய் கலக்குது எலக்ட்ரானிக் உலகம்.*

*அப்போ படிபடி .... இப்போ குடிகுடி ....* 07.02.2012, ப.10

**மரபுத் தொடர்**

சொல்லுக்குச் சொல் பொருள் கொள்ள முடியாததும் முற்றிலும் வேறு பொருளில் வழங்குவதுமான தொடர் மரபுத்தொடர் எனப்படும்.

அந்தவகையில் படிப்பவர் செய்தியைத் தெளிவாகப் புரிந்து கொள்ளவேண்டும் என்பதற்காக மரபுத் தொடரையும் தினமலர் பரவலாகக் கையாள்கிறது.

**(எ.கா.)**

*தனியார் நிறுவனங்கள் வட்டியை அதிகப்படுத்தித் தருவதாக விளம்பரப்படுத்திக் கடைசியில் பல நூறு கோடிகளுடன் கம்பி நீட்டிவிட்டன.*

கம்பி நீட்டிவிட்டன என்ற தொடர் மரபுத் தொடராகும். அதிக வட்டி கொடுப்பதாக விளம்பரப்படுத்தி வாங்கிய பணத்தைச் சுருட்டிக் கொண்டு தலைமறைவாகிவிட்டனர் என்ற செய்தியைக் குறிப்பிடுவதற்குப் பதிலாகக் கம்பி நீட்டிவிட்டன என்ற மரபுத் தொடரைப் பயன்படுத்தித் செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

**(எ.கா.)**

*மதுப் பழக்கத்தை கைகழுவுங்கள் 11.5.2005*

கைகழுவுங்கள் என்ற தொடருக்கு அகராதியில் பொருள் இல்லை. பேச்சு வழக்கில் மக்கள் தவறான பழக்கத்தை தவிர்க்க வேண்டும் என்று கூறுவர். மது அருந்தும் பழக்கத்தை 'விடவேண்டும்' என கூறுவதற்குப் பதிலாக 'கை கழுவ வேண்டும்' என்ற மரபுத் தொடரைப் பயன்படுத்தி செய்தி விளக்கப்பட்டுள்ளது.

**(எ.கா.)**

*கை நீட்டிய டாக்டரை சிக்க வைத்த நிருபர் குழு*
*11.08.2005*

இலஞ்சம் வாங்கிய டாக்டரை மாறுவேடத்தில் சென்ற நிருபர் குழு கையும் களவுமாகப் பிடித்தது என்ற செய்தியைக் கூறுவதற்குக் கை நீட்டிய டாக்டர் என்று மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது. இங்கு கை நீட்டிய என்ற தொடர் மரபுத் தொடராகும்.

**(எ.கா.)**

*கை நீட்டிய இன்ஸ்பெக்டர் கோர்டில் ஆஜர்*
*31.10.2009,ப.3*

*கோயில் திருவிழாக்களில் பெண்களிடம் கைவரிசை*
*28.1.2010,ப.19*

**குறைத் தொடர்**

ஒரு சில தலைப்புகள் தன்னளவில் முழு பொருளைத் தரா. முழுப் பொருளைத்தர அத்தகு தலைப்புகள் வேறொரு பொருத்தமான சொல்லை வேண்டி நிற்கும். பொருத்தமான சொல்லை வேண்டிய

இடத்திலிட்டு நிரப்பித் தலைப்பைப் படித்தால்தான் அத்தலைப்பின் முழுப்பொருளையும் உணரமுடியும். பொருள் முடிவுக்காக ஏற்றதொரு சொல்லை வேண்டி நிற்கும் இதுபோன்ற குறைத்தொடர் தலைப்புகள் தினமலரில் அதிகமாக உள்ளன.

*(எ.கா.)*

| | |
|---|---|
| *தில்லு முல்லுக்குத் துணை போனால் ...* | *03.01.2004* |
| *..... ...... ...... ஏதாவது குறைந்தால்...* | *31.01.2004* |
| *போகியன்று கொளுத்தினால் ...! மாசுக் கட்டுப்பாட்டு வாரியம் எச்சரிக்கை* | *12.1.2005,ப.5* |
| *கூட்டி கழிச்சு பார்த்தா ...!* | *27.1.2010,ப.4* |
| *ஷாக் தொடரும் ...!* | *30.1.2010,ப.10* |
| *சோதனைக்கு வராவிட்டால் ...* | *24.9.2011,ப.6* |
| *என்னத்த சொல்ல ......... .....* | *6.2.2012,ப.4* |
| *கொலை கொலையா முந்திரிக்கா ... ...* | *6.2.2012,ப.4* |
| *குற்றங்களைத் தடுக்க ... ... ...* | *07.02.2012,ப.4* |

குறைத்தொடரில் தொக்கி நிற்கும் சொற்கள் பெயராகவோ, வினையாகவோ அல்லது பெயரும் வினையுமாகவோ இருக்கலாம். ஒன்றின் சிறப்பை அறிவுறுத்தித் தெளிவாகப் புரிய வைப்பதன் வாயிலாக ஆர்வத்தை வளர்த்து வாசகர்களைக் கவர்ந்திழுக்கும் வலிமைமிக்க வாக்கிய அமைப்பைக் கொண்ட குறைவாக்கியங்கள் அதிகம் இருக்கின்றன. இச்சொற்கள் பெரும்பாலும் தொடரின் இறுதியில் தொக்கி நிற்கின்றன. இவ்வகை உத்தியைத் தினமலர் பெருமளவில் கையாளுகிறது.

### முப்புள்ளிச் செய்திகளின் பயன்பாடு

இடச்சுருக்கத்தைக் கருத்தில் கொண்டு சுருக்கமாக வாக்கியத்தில் விடுபட்ட பகுதியைக் குறிப்பதற்காக வாக்கியத்தின் இறுதியில் அதன் தொடர்ச்சியைக் குறிப்பதற்கும் சொற்களின் ஒலிப்புத் தொடர்ச்சியைக் காட்டவும் புள்ளிகள் இட்டு செய்திகள் எழுதப்படும் உத்திகளைத் தினமலர் அதிகமாகக் கையாள்கிறது.

*(எ.கா.)*

*கொலை கொள்ளையைத் தடுக்க அதிரடி ...*
*ஏலம் ... ஒரு தரம் ... ரெண்டு தரம் ... மூணு தரம் ...*

***வாக்கியத்தின் இறுதியில் சிந்தனைத் தொடர்ச்சியைக் குறிக்க:***

*(எ.கா.)*

*ஓசைப்படாமல் உயரும் ஃபிளாட் விலை! வட்டி இன்னும் குறையுமா என்று பார்த்தால்...!*

*பட்ஜெட்டிற்குப் பின்னரும் வாங்காவிட்டால் ...*

*லஞ்ச விவகாரத்தில் திடுக் திருப்பம்!*

- *மன்னிப்பு கேட்டு கதறல்!*
- *அவ்ளோவும் மீண்டும் வீடியோவில்!*
- *அந்த 38 நிமிடங்கள் ...!*

***சொற்களின் ஒலிகளின் ஒலிப்புத் தொடர்ச்சியைக் குறிக்க***

*(எ.கா.)*

*...... .... ஒரு வருடத்துக்கு இழுழுழு...க்கப் பிளான்!*

*தள்ளா... டி வந்த ... ...*

**வியங்கோள்/ஏவல் பொருள் உத்தி**

மரியாதை நிமித்தம் ஏவல் வினைகளாக அமைவனவும் வாழ்த்துதல், வைதல் (திட்டுதல்), விதித்தல் (கட்டளை), வேண்டுதல் (அறிவுரை) முதலான பொருள்களில் அமையும் வினையையே வியங்கோள் வினைமுற்று என்பர். இவ்வகையான வியங்கோள் சொற்களைப் பயன்படுத்தி அதிகமான செய்திகள் வெளியிடப் பட்டுள்ளன. அவை பின்வருமாறு வகைப்படுத்தப்பட்டுள்ளன.

***வாழ்த்து***

*(எ.கா.)*

*நீடூழி வாழ்க!*
*உங்கள் வாழ்நாளெல்லாம் நாங்கள் ஆசிகளைப் பெறுகிறீர்கள்*

*இரண்டே பெருக!*
*இனிதே வாழ்க!*

**அறிவுரை**

(எ.கா.)

*இளைஞர்கள் பேச்சுத் திறனை வளர்த்துக் கொள்ள வேண்டும்* — *22.12.2008,ப.3*

*மதுப்பழக்கத்தை விட்டுடுங்க ...* — *8.07.2009,ப.5*

*ஆரஞ்சு சாப்பிடுங்க;*
*எதிர்ப்பு சக்தி வளரும்!*

*டீ.வி. ரொம்பப் பார்க்காதீங்க ;*
*கண்ணுக்கு எதுவும் கெடுதல் தான்!*

*நல்லா சாப்பிட வையுங்க நல்லாத் தூங்க வையுங்க*
*தனிமைப்படுத்தாதீங்க*

*ஹலோ தோழியே!*
*காதலிக்க அவசரப்படாதீர்கள்... அவதிப்படாதீர்கள்!*
*வாகனம் ஓட்டும்போது செல்போன் பேசுவதை தவிர்ப்போம்!*

*09.02.2012,ப.5*

**வேண்டுகோள்**

**(எ.கா.)**

*புத்தாண்டுக்குப் புத்துயிர் பெறுங்கள்!*

*தோல்வியைக் கண்டு பின் வாங்க முயலாதீர்கள்!*

*டென்ஷன் தவிருங்கள் சந்தோசமாய் இருங்கள்!*

*இளைஞர்களைத் தாக்கும் கல்லீரல் பாதிப்பு நோய் இப்போதே விழித்துக் கொண்டால் தான் நல்லது.*

மேற்கண்ட சொற்றொடர்களில் உள்ள வியங்கோள் வினைமுற்றுகளான பெறுக, வாழ்க போன்றவை முறையே பெறுங்கள், வாழுங்கள் என ஏவல் பொருண்மையில் பயன்படுத்தப்பட்டுள்ளன. அறிவுறுத்தல், வேண்டுதல், போன்ற வினைகள் வேண்டுகோள் விடுக்கும் பொருளில் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள் என்னும் பொருண்மையில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**மங்கல வழக்குச்சொல்**

மங்கலம் அல்லாத அமங்கலச்சொற்களை வெளிப்படையாகச் சொல்வதற்குப் பதிலாகக் குறிப்புச் சொற்களால் குறிப்பிடுவது மங்கல வழக்கு எனப்படும். ஒருவர் இறந்த செய்தியை இறந்தவர்களின் மதப்பிரிவின் அடிப்படையில் இவ்வகையான சொற்கள் பயன்படுத்தப்படுகிறது. இவ்வகைக் குறிப்புச்சொற்கள் மற்ற நாளிதழ்களில் காணப்படுவதைப் போன்றே தினமலரிலும் காணப்படுகிறது.

***(எ.கா.)***

***இயற்கை எய்தினார்***
***இறைவனடி சேர்ந்தார்***

*காலமானார்*

*வைகுண்ட பதவி அடைந்தார்*

*சிவலோக பதவி அடைந்தார்*

**வினாவிடை உத்தி**

வினாவிடை உத்தி உரையாசிரியர் காலத்திலிருந்தே பயன்படுத்தப்படுகிறது. மக்களைச் சிந்திக்கத்தூண்டும் வகையில் வினாவிடை உத்தி அமைக்கப்பட்டுள்ளது. வினாவை எழுப்பி வினாவே விடையாக அமைவது போலவும் தினமலரில் செய்தி வருகிறது. இது படிப்போரைச் சிந்திக்க வைப்பதால் வலிமைமிக்க உத்தியாகக் கருதப்படும்.

*(எ.கா)*

*புதுப்பிக்கலைன்னா என்ன?*

*உண்டு புது ரேஷன் கார்டு*

*ஹாரி பட்டர் படிக்கலாமா? வேண்டாமா?*

- *மனதில் வன்முறையை வளர்க்கிறதா?*
- *மூட நம்பிக்கையைத் தூண்டுகிறதா?*
- *ஆங்கில அறிவை வளர்க்கிறதா?*
- *மூளையைத் தூண்டிவிடுகிறதா?*

தம்மாத்தூண்டு வாண்டுஸ்களைக்கூடக் கேட்டுப்பாருங்கள் ஹாரிபட்டர் என்றால் ... துள்ளிக்குதிப்பார்கள். வாண்டுஸ் முதல் வயோதிகர் வரை விரும்பிப் படிக்கும் லேட்டஸ்ட் நாவல் புத்தகம்.

**(எ.கா.)**

*எம்.பி.ஏ.. எம்.சி.ஏ.. கட் ஆப் எவ்வளவு?* 12.7.2005

| | |
|---|---|
| *ஓ.சி.* | *35.500* |
| *பி.சி.* | *33.250* |
| *எம்.பி.சி.* | *23.500* |
| *எஸ்.சி.* | *23.500* |
| *எஸ்.டி.* | *22.500* |

*ரேஷன் கார்டு கிடைக்கலயா?* 26.01.2004

*மேல் முறையீடு செய்யலாம்.*

*பனிக்கட்டி தண்ணீரில் மிதக்கக் காரணம் என்ன?*

அடர்த்திதான் காரணம். தண்ணீர்தான் பனிக்கட்டியாக மாறினாலும் அடர்த்தியில் இரண்டும் வேறுபடுகின்றன. தண்ணீரைவிட அடர்த்தி குறைந்த பொருள்கள் மிதக்கும். இதுபோன்று வினா எழுப்பி அதற்குப் பதிலாக வினாவே விடையாக அமைவது போல எழுதப்பட்டுள்ளது.

**பழமொழி**

சூழற்கேற்ற வகையில் பயன்படுத்தும் போது மட்டுமே தெளிவான பொருள்தரும். பழமொழியைப் பயன்படுத்தியும் செய்தி வருகின்றன. வெளிப்படையான இவ்வுத்தி, தெரிந்த செய்தியைக் கொண்டு தெரியாத செய்தியை விளக்க பழமொழி பயன்படுத்தப்படுகிறது.

*(எ.கா.)*

*"விதி முடிந்தவனை வீரியன் தீண்டும்" என்ற முதுமொழியைப்போல் சாவு நிச்சயிக்கப்பட்டவர்களின் வழக்குதான் அவரால் விசாரிக்கப்படும் என்ற அளவுக்கு அவர் பிரபலமாகிவிட்டார் என்ற செய்தியை விளக்குவதற்குப் பழமொழி கையாளப்பட்டுள்ளது.*

**(எ.கா.)**

*காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ள முட்டை*
*உற்பத்தியாளர்கள் முடிவு.*

சுனாமி தாக்குதல் காரணமாக மீன் வரத்து குறைந்துவிட்டதால் இது தான் சமயம் என்று முட்டை விலை உயர்த்தப்பட்டுள்ளது என்ற செய்தியைக் குறிப்பிடுவதற்குப் பழமொழியைப் பயன்படுத்தித் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

**(எ.கா)**

| | |
|---|---|
| *தும்பை விட்டு வாலை பிடித்த கதை* | *31.1.2008,ப.11* |
| *வேலியே பயிரை மேய்வதா?* | *30.12.2008,ப.6* |
| *வளர்த்த கடா மார்பில் பாய்ந்தது!* | *31.7.2009,ப.4* |
| *கண் கெட்டபிறகு சூரிய நமஸ்காரம் ...* | *07.02.2012,ப.4* |

**பிற உத்திகள் உவமை**

உவமையைப் பயன்படுத்தித் தான் சொல்லவரும் கருத்துக்களை, உணர்ச்சியைத் தெளிவாக விளக்கவும், வலியுறுத்திச் சொல்லவும் அவ்வாறு வலியுறுத்தும்போது அக்கருத்து மேலும் வலிமை பெறவும், விளக்கம் பெறவும் உவமைகள் எடுத்தாளப்படுகின்றன.

**(எ.கா.)** *பெண்கள் கால்பந்து .... .... "கோல் மழை"*

பெண்கள் கால்பந்து தமிழ்நாடு அணியினர் அதிகமான கோல்களை எடுத்து வென்றனர் என்ற செய்தியை மழை என்பதற்கு இணையாக உவமைப்படுத்தி கூறப்பட்டுள்ளது.

*"சூறாவளியாக"* சுற்றுகிறார் ...

வாடிக்கையாளர் உள்ளத்தைக் கவர உவமையைப் பயன்படுத்துதலும் ஒரு சிறந்த உத்தியாகும். செய்திகளில் உவம உருபுகள் மறைந்தும் வெளிப்படையாகவும் வருகின்றன.

**(எ.கா.)**

*"விழலுக்கிறைத்த நீர் தான். இரும்பு அடிக்கும் இடத்தில் இனி ஈக்களுக்கு வேலை இல்லை"* ... .. ... அல்லல்பட்ட பாட்டால் பட்ட வடு இன்னும் வலிக்கிறதா? 22.12.2004

மேற்கூறப்பட்ட செய்தியில் உள்ள விழலுக்கிறைத்த நீர்தான் என்ற தொடரில் போல என்னும் உவம உருபு மறைந்துள்ளது. இங்கு உவமை எடுத்தாளப்பட்டு செய்தி விளக்கப்பட்டுள்ளது. புல்லுக்கு இறைக்கப்பட்ட நீரினால் எந்தப்பயனும் இருக்காது.

**உருவகம்**

உவமானத்தையும் உவமேயத்தையும் வேறுபாடுத்தாமல் இரண்டும் ஒன்றென ஒற்றுமைப்படுத்திக் கூறுவது உருவகம். (க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி). செய்தியின் கருத்துப் புலப்பாட்டிற்கு உருவகம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**(எ.கா.)**

*கண்ணீர் குளத்தில் "தளும்பிய ஞாயிறு" .....*

*"கண்ணீரில் மிதக்கிறது" கடலூர்.* *31.12.2004*

*கொடூர சுனாமியிடம் தப்பி "கடலின் மடியில்"*
*இரண்டு நாட்கள் தவழ்ந்து உயிர் தப்பி வந்திருக்கிறாள்*
*13 வயது சிறுமி.*

*மழையில் கரைந்த வெற்றி .....*

மேற்கூறப்பட்ட செய்தியில் கண்ணீரைக் குளமாகவும், கடலை மடியாகவும் உருவகித்துச் செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

**மேற்கோள் காட்டல்**

மற்றொருவர்கூறிய கருத்தைச் செய்தியாக வெளியிடும்பொழுது அச்செய்திக்கு மேற்கோள் காட்டும்முறை தினமலரில் அதிகமாக உள்ளது. செய்தியின் தொடக்கத்திலும் இடையிலும் இறுதியிலும் மேற்கோளை எடுத்தாள்கிறது.

**செய்தியின் தொடக்கத்தில் மேற்கோள்**

(எ.கா.)

*'உயர் கல்வி நிறுவனங்கள் தங்கள் கல்வித்தரத்தை மேம்படுத்துவதில் கவனம் செலுத்த வேண்டும்' என்று பல்கலைக்கழக மானியக்குழுவின் (யு.ஜி.சி) கூடுதல் செயலாளர் கூறினார்.*

*"இன்டர்நெட் மூலம்"* பட்ட மேற்படிப்பு இந்தியாவில் முதன் முறையாக அறிமுகம்.

**செய்தியின் இடையில் மேற்கோள்**

செய்தியின் இடையில் சில கருத்துக்களின் விளக்கத்திற்காகவும் மேற்கோள் பயன்படுத்தப்பட்டுள்ளது.

(எ.கா.)

1. *வரும் கல்வியாண்டில் 'பயோ எதிக்ஸ்' படிப்பு* 02.02.2004
2. *தமிழில் "கோன் பனேகா குரோர்பதி" 07.06.2004*
3. *சாது அரண்டால் ...? சகாபுதீன் 'காட்டில் மழை' .....*
4. *லஞ்சத்தை தடுக்க "ஆக்ஷன் குருப்" ஊழல் எதிர்ப்பு இயக்கம் திட்டம்*

**செய்தியின் இறுதியில் மேற்கோள்**

*செய்தியைக் கூறி முடித்தவுடன் செய்தியின் இறுதியில் மேற்கோள் கொடுத்து முடிப்பதையும் ஓர் உத்தியாகக் கொண்டுள்ளது.*

*(எ.கா.)*

1. *வாபஸ் விபரம் தெரியாமலேயே தமிழகத்தில் "கடையடைப்பு"*
2. *பிளாஸ்டிக் ஒழிப்பு "விழிப்புணர்வு பேரணி"* 13.9.11,ப.7
3. *இதெல்லாம் எங்களுக்கு "ரொம்ப சகஜம்"* 12.2.12,ப.14

**உணர்ச்சிக் குறி பயன்பாட்டு உத்தி**

உணர்ச்சிக் குறியைப் பயன்படுத்தி வெளியிட்டுள்ள செய்தி தினமலரில் பின்வருமாறு வரையறை செய்யப்பட்டுள்ளது. உணர்ச்சி, வியப்பு, மகிழ்ச்சி, பயம், அதிர்ச்சி, வாழ்த்துத் தெரிவித்தல் போன்ற செய்திகளைத் தெரிவிக்கும் வாக்கியங்களின் முடிவில் உணர்ச்சிக் குறி பயன்படுத்தப்பட்டுள்ளது.

*(எ.கா.)*

1. *தேதி மாற்றம்!*
   *10வது. பிளஸ் 2 தேர்வுகள் ஒரு மாதம் தள்ளிவைப்பு*
   *(மகிழ்ச்சி)*

*சுனாமி பாதித்த மாவட்டங்களுக்கு அரசு சலுகை*

2. *வீண் போராட்டங்கள்!* *(வெறுப்பு)*
3. *... ..... அடுத்தடுத்து கொலை, கொள்ளை*
   *சென்னையில் ஒரே நாளில் 6 இடங்களில் திருட்டு!* *(பயம்)*
4. *பிப். மாதம் சம்பளம் சந்தேகம் தான்? 06.02.2004*
   *.... ... நிதி நெருக்கடி!* *(அதிர்ச்சி)*
5. *அடடே வியப்பாக இருக்கிறதே!*
   *ஆ... கண் முன் நிஜம் வந்ததே!*
   *ஓ... ! பின்னணி பிரமிப்பூட்டுதே!.* *(வியப்பு)*
6. *களை கட்டுகிறது கிராமம்!*
   *ரூ.5.35 கோடியில் அதி நவீன குடியிருப்புகள்*
   *சுனாமி வேகத்தில் நிதி திரட்டுகிறது கரம்!* *(மகிழ்ச்சி)*
7. *முட்புதரில் பெண் குழந்தை*
   *உயிருடன் கண்டெடுப்பு!* *(அதிர்ச்சி) 13.9.11 ப.9*

*கவனத்தை ஈர்க்கும் வகையில் ஒரே சொல்லை இருமுறை கூறும்போது ஒவ்வொன்றின் பின்னும் ஆச்சர்யக் குறி பயன்படுத்தப் பட்டுள்ளது.*

(எ.கா.)

*ஐ.டி.. பயோ.. மட்டுமல்ல பல துறைகளிலும் இந்தாண்டு வேலை குவியுது! குவியுது!*

- *லட்சம் பேருக்கு மேல் வாய்ப்பு உண்டு*
- *படித்து சாதித்தால் கை நிறைய கரன்சிதான்.*

**கதை கூறும் உத்தி**

ஒரு செய்தியைக் கூற நேரிடும் நிலையில் அதற்குத் தொடர்புடைய, முன்பு நடந்த செயல்கள் மூலமாகவோ, மேற்கோள்கள் மூலமாகவோ விளக்கும் பொழுது அச்செய்தி மேலும் விளக்கம்பெறும் என்பதற்காக இவ்வுத்தியினைத் தினமலர் கையாண்டுள்ளது.

**வார்த்தை சுருக்க உத்தி**

*பீல்டராக வருவார் சச்சின் பேட்டிங் செய்யமாட்டார்.*

பீல்டராக வருவார் சச்சின் என்பது முதன்மை வாக்கியம். பேட்டிங் செய்யமாட்டார் என்பது துணை வாக்கியம். இவ் இரண்டு

வாக்கியங்களையும் இணைக்கக்கூடிய இணைப்புச் சொல்லான ஆனால் என்ற (conjunction) வார்த்தை குறைக்கப்பட்டுள்ளது. பீல்டராக மட்டுமே வருவார் என்பதை வலியுறுத்திச் சொல்வதற்காகச் சச்சின் என்ற பெயர்ச் சொல் இடமாற்றிப் பயன்படுத்தபட்டுள்ளது.

*வெயிலில் வளைந்தது தண்டவாளம்: வழியில் ரயில்கள்: பயணம் தாமதம்* 09.02.2012,ப.7

இவற்றை நோக்கும்போது வார்த்தை சுருக்க உத்தி மற்றும் இடமாற்ற உத்தி கையாளப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. இடச்சுருக்கம், படிப்பவரைக் கவர்தல், செயலின் சிறப்பை வலியுறுத்த அவாவினைத்தூண்டி ஆர்வமாகச் செய்திகளைப் படிப்பதற்கு இவ்வகையான உத்திகள் கையாளப்பட்டுள்ளன.

# தினமணி நாளிதழ் மொழிநடை

தமிழில் மிகச்சிறந்த இதழ்கள் சிறப்பாக வெளிவந்து கொண்டிருந்த காலக்கட்டத்தில் பாரதியாரின் நினைவு நாளான 1934 செப்டம்பர் 11-ஆம் நாள் தினமணி முதல் இதழ் சென்னையில் வெளிவந்தது. தமிழ் மொழியையும் தமிழின மக்களின் உணர்வையும் பாதுகாத்துப் போற்றும் வகையில் உண்மைச் செய்திகளைச் செறிவான தமிழ் நடையில் தினமணி நாளிதழ் வெளியிட்டு வருகிறது.

"தினமணி" என்ற சொல் கதிரவனைக் குறிக்கும். "தினமும் ஒலிக்கும் மணி" எனவும் பொருள்படும். கதிரவன் உலகிற்கு மிகப்பெரிய ஒளியைத்தந்து மக்களை வாழ்விப்பது போல், நல்ல செறிவான உண்மைத் தன்மையுள்ள கருத்துக்களைத் துணிவுடன் நாளும் வெளியிட்டு நாட்டிற்கும் தமிழுக்கும் பெருமை சேர்த்துவருவதன் வாயிலாக நாளிதழ்களில் தினமணி நாளிதழ் தனித்துவம் பெற்றுத் திகழ்வதைக் காணமுடிகிறது. இந்திய விடுதலைக்குமுன் தொடங்கப்பட்ட தமிழ் நாளிதழான தினமணி இன்றுவரை தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கும் நாளிதழ் என்ற பெருமையைப் பெற்றுள்ளது எனலாம்.

தொடக்கத்தில் தினமணியில் அதிக அளவு வடமொழிச் சொற்கள் பயன்படுத்தப்பட்டதால், அதன் நடை எளிதில் புரியாத நிலையில் இருந்தது. ஆனால், இன்று வடமொழிப் பயன்பாடு பெரும்பாலும் குறைவாகவே உள்ளது. மேலும், தேசியப் பாரம்பரியமான உண்மைச் செய்திகளைத் தருவதில் ஓரளவு உறுதியான நிலைப்பாட்டினைக் கொண்ட தினமணி அறிவியல், அரசியல், சமுதாயம், கலாச்சாரம் போன்ற பல்வேறு தலைப்புகளில் தொடர்ந்து கட்டுரையை வெளியிட்டு வருகிறது.

**தலைப்பு**

தலைப்புகள் பலவகையாக இருப்பது சுவைதரும் என்றாலும் வாசகர்களின் கவனத்தை ஈர்க்கும் வகையில் தினமணி இதழ் தலைப்புச் செய்தியை அச்செய்தியின் தன்மைக்கேற்பக் கையாள்கிறது. இவ்வாறு தலைப்புச் செய்தியைத் தரும் முறையில் தங்கள் நோக்கம் மற்றும் தனித்தன்மையை நாளிதழ்கள் வெளிப்படுத்துகின்றன.

தலைப்பின் முதல் வரியில் சிறிய எழுத்துகளிலும், அடுத்த வரியில் பெரிய எழுத்துகளிலும், அதன் கீழக் கட்டத்திற்குள் சிறிய எழுத்துகளிலும் உட்தலைப்பு இடப்பட்டுச் செய்தியை வெளியிடுகிறது. தினமணி நாளிதழின் முதல் பக்கத்தில் இதுபோன்ற தலைப்புகளில் செய்திகள் வெளிவருகின்றன. இவ்வகையான தலைப்புகள் தினமணிக்கே உரிய தனித்தன்மையாகும்.

(எ.கா.)

பேரவையில் 2 ஆண்டுகளுக்குப் பிறகு

மீண்டும் ஆளுநர் உரையின்

*தமிழாக்கம் வாசிப்பு*

*எதிர்க் கட்சிகள்*

*தமிழ் அறிஞர்கள்*

*வேண்டுகோள் ஏற்பு*

**தலையங்கம்**

நாளிதழில் வெளிவரக்கூடிய ஆசிரியர் தலையங்கம் வாசகரிடையே பெருத்த வரவேற்பைப் பெற்றுள்ளது. எனவே, இது ஓர் இன்றியமையாத பகுதியாகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு நாளிதழும் ஏதாவது ஒரு நிறுவனத்தையோ அல்லது கட்சி அமைப்பையோ சார்ந்தே இருக்கிறது. ஆகவே, ஒவ்வொரு நாளிதழும் நாட்டில் அல்லது உலக அளவில் நடைபெறும் நிகழ்ச்சிகள் பற்றிப் பொதுவாக என்ன சொல்ல விரும்புகிறது என்ற ஆர்வம் படிப்போரிடையே இயல்பாகவே அமைந்திருக்கிறது.

அந்த அடிப்படையில் பொதுமக்களின் நியாயமான வெளிப்பாட்டினை எடுத்துரைப்பதாகத் தலையங்கம் அமைய வேண்டும். இதழாசிரியர் கருத்துகளை எடுத்தியம்பும் கருத்துப் பெட்டகமாகத் தலையங்கம் தனித்தன்மையோடு திகழ்கிறது. நாளிதழ்களில் ஒரு குறிப்பிட்ட நிகழ்வுகள் குறித்த இதழாசிரியர் கருத்துகளை மையப்படுத்திக் கருத்தாக்கம் வெளிவருவதால் "தலையங்கம்" என்றும் கருதவாய்ப்புள்ளது. அந்தவகையில் பிறமொழிக் கலப்பின்றி நல்ல தமிழ் நடையில் எளிமையான சொற்களுடன் தினமணி நாளிதழில் தலையங்கம் விரிவான விளக்கத்துடன் வெளிவருகிறது.

**கட்டுரை**

ஆங்கில நாளிதழ்களுக்கு இணையாகத் தமிழ் நாளிதழ்களில் கட்டுரைகள் வருவதில்லையே என்ற ஏக்கத்தைத் தினமணி போக்கி வருகிறது. தினமணி நாளிதழில் தினசரிக் கட்டுரை இடம்பெறுகின்றது. பல்துறை சார்ந்த அறிவியல் கட்டுரைகளும் சிறப்புக் கட்டுரைகளும்

மக்கள் விருப்பத்துடன் படிக்கும் பொதுவான கட்டுரைகளும் பிறமொழிக் கலப்பின்றிச் செறிவான தமிழில் இலக்கியச் சொற்களுடன் புதுச்சொற்களையும் கலைச் சொற்களையும் பயன்படுத்தி விரிவான விளக்கத்துடன் தெளிவான மொழிநடையில் கட்டுரைகள் வருகின்றன. ஒருவரின் கூற்றைத் தனித்துக்காட்ட இரட்டை மேற்கோள் குறியை இடவேண்டும் எனத் தமிழ் நடைக் கையேடு கூறுகிறது. அந்தவகையில், தினமணி நாளிதழ் கட்டுரைகளிலும் செய்திகளிலும், பிறர்கூற்றைத் தனித்துச் சுட்டிக்காட்ட இரட்டை மேற்கோள் பயன்படுத்தப்படுகிறது.

**பத்தி அமைப்பு**

ஒருவர் தான் சொல்லவந்த கருத்தை விளக்குவதற்கும், எடுத்துரைப்பதற்கும் ஏதுவாக அமைக்கப்படும் வாக்கியங்களின் தொகுப்பு பத்தி எனலாம். மொழி அலகுகளில் ஒன்றாகவும், மிக எளிமையானதும் பயன்தரக் கூடியதுமான அலகு பத்தி எனலாம்.

அமைப்பு மற்றும் கருத்துத் தொடர்பான வாக்கியங்களால் அமைவது பத்தி. இது புறப்பத்தி, கருத்துப்பத்தி எனப்படும் (சண்முகம், சி., 1989).

ஒரு கருத்தை வெளிப்படுத்தும் பல வாக்கியங்கள் எவ்வித இடைவெளியுமின்றி அமையும்போது படிப்பவர்களுக்குக் கண் சோர்வு ஏற்படாமல் இருக்கப் பத்தியமைப்பு உதவுகிறது. தினமணி நாளிதழ் செய்திகளைச் சிறுசிறு பத்திகளாக வெளியிடுகின்றது. பத்திகளுக்கு இடையே சிறு தலைப்புகளில் (உட்தலைப்பு) செய்தியை வெளியிடுகிறது. இப்பத்திகளில் சொல்லப்படும் செய்தியின் அளவு அதன் தன்மை இவற்றைப் பொறுத்து அதை, கருத்து நிலைப்பத்தி, தோற்ற நிலைப்பத்தி என இருவகையாகப் பாகுபடுத்தலாம்.

தினமணி நாளிதழும் தனக்கென்று தனியானதோர் உத்தியைக் கையாள்கின்றது. தலைப்பு, தலையங்கம் போன்றனவற்றை வெளியிடுவதை உத்தியாகக் கொண்டுள்ளது.

*செய்தித் தலைப்பு*-சில சொற்களால் அமைந்திருக்கிறது. படிப்பவர்களை ஈர்க்கும் வகையில் அமைந்திருக்கிறது.

*செய்திச் சுருக்கம்*- விரிவான செய்திகளைச் சுருக்கமான வாக்கியங்களில் தருகின்றது.

*செய்தி விளக்கம்*- தலைப்பினையும், செய்திச் சுருக்கத்தையும் விரிவாகப் பல பத்திகளில் விளக்குகின்றது.

**உரைக்கோவை உத்திகள்**

நாளிதழில் கருத்தைப் புலப்படுத்துகின்ற உத்திகள் (techniques) பல வகைகளில் அமைகின்றன. அவை மேற்கோள், உருவகம், பழமொழி, வினாவிடை, விளித்தல், அறிவுறுத்தல், வரிவடிவம்

போன்றன அதன் பொருள் புலப்பாட்டுத் தன்மைக்கேற்ப மாறுபட்டுத் தோன்றுகின்றன. அனைத்து வகையான உரைக் கோவைகளைப் படைக்கின்ற நேரத்திலும் சில படைப்பு உத்திகள் பயன்பாட்டுக்கு உள்ளாகின்றன.

**ஒலியன் மரபு மீறல்**

தமிழில் ஃ என்ற ஆய்த எழுத்து தினமணி நாளிதழ் மொழிப் பயன்பாட்டில் மொழி முதல் வருகின்றது. இவ்வகைப் பயன்பாடு ஒலியன் மரபு மீறலுக்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

(எ.கா.)

*அரசு மரியாதையுடன் ஃபருக் உடல் அடக்கம்*
*28.01.2012,ப.9*

**மேற்கோள்**

செய்தியின் தன்மையை அல்லது அதன் முக்கியத்துவத்தை விளக்கமாக எடுத்துக்கூற ஒருவர் கூற்றை அப்படியே எடுத்து எழுதுவது மேற்கோள் எனலாம். இப்பயன்பாடு தினமணி செய்தியில் பயன்படுத்தப்படுகிறது. *பாரதி சொல்வதைப் போல,*

*"ஓரம் செய்திடாமே – தருமத்து*
*உறுதி கொன்றிடாமே*
*சோரம் செய்திடாமே பிறரைத்*
*துயரில் வீழ்த்திடாமே*
*ஊரை ஆளும் முறைமை–உலகின்*
*ஓர் புறத்தும் இல்லை"*

என்று விட்டுவிடலாமா? அல்லது,

இளங்கோவடிகள் சொல்வதுபோல, அரசியல் பிழைத்தோருக்கு அறம் கூற்றாகும் என்று சாபமிடலாமா? என்று பாரதியார் கவிதையையும் இளங்கோவடிகளின் கூற்றையும் மேற்கோளாகக் கொண்டு தினமணி நாளிதழில் செய்தி அமைக்கப்பட்டுள்ளது. மற்ற நாளிதழ்களிலும் இதுபோன்ற பயன்பாடு காணப்படுகின்றது.

**உருவகம்**

உவமானத்தையும் உவமேயத்தையும் வேற்றுமைப்படுத்தாமல் ஒற்றுமைப் படுத்திக் கூறும் முறை உருவகம் எனப்படும்.

(எ.கா.)

1. *பெரியகடை வீதியில் மக்கள் வெள்ளம் 03.11.2004*
2. *வின்னிங்லெவன் ரூர்க்கி சாய் அணி கோல்மழை 04.08.2004. ப.13.*

*3. கங்கையில் பக்தர் கடல் 09.02.2004.ப.1*

*4. "வெற்றிமழையில் நனைந்த" இந்தியாவின் இளம் "டென்னிஸ் புயல்" சானியா மிர்சாவுக்கு "வாழ்த்து மழை" பொழியத் தொடங்கியுள்ளது.*

*5. சுனாமியால் பாதிக்கப்பட்டு, "கண்ணீர் கடலில்" தவிக்கும் மீனவர்களை மீட்க உதவும் கான்கிரீட் படகுகள். 07.02.2005 ப.7*

*6. மெரினாவில் மக்கள் வெள்ளம் 02.01.2012,ப.12*

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் மக்கள் கூட்டத்தை வெள்ளமாகவும், வெற்றியை மழையாகவும், பக்தர் கூட்டத்தைக் கடலாகவும், கண்ணீரைக் கடலாகவும், பாராட்டுக்களை மழையாகவும், டென்னிஸ் வீராங்கனையைப் புயலாகவும் உருவகப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. பிற நாளிதழ்களிலும் இதுபோன்ற உருவகப் பயன்பாடு கையாளப்பட்டுள்ளது.

**பழமொழி**

மக்களிடையே நீண்ட காலமாக வழங்கி வருவதும் பேச்சில், செய்தியில் ஆதாரமாகவோ, உதாரணமாகவோ காட்டப்படுவதுமான கருத்துத்தொடர் பழமொழி (proverb) என்பர் (க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி). இதை முதுமொழி என்றும் கூறுவர். மக்களின் அன்றாட வாழ்க்கையில் பெற்ற அனுபவ உண்மையே முதுமொழியாகிறது. சூழலுக்கேற்பப் பயன்படுத்தினால் மட்டுமே இது முழுமையான பொருள்தரக் கூடியதாக அமையும்.

*(எ.கா.)*

*சுத்தம் சோறு போடும் 29.7.2007,ப.1*

*கண்ணை விற்று சித்திரம் வாங்குவதா? 30.7.2007,ப.6*

*தோட்டம் காக்கப் போட்டவேலி பயிரை மேய்வதோ*
*அதைக் கேள்வி கேட்க ஆள் இல்லாமல்*
*பார்த்து நிற்பதோ?*

ஆம். நமது வளங்களான இயற்கைச் செல்வங்களைப் பாதுகாக்க வேண்டிய அதிகாரிகளும் அரசியல்வாதிகளுமே வளங்களைச் சுரண்டுவதற்குத் துணைபோகும் துர்பாக்கிய நிலை.

இயற்கை வளங்களைப் பாதுகாக்கப் பொறுப்புடன் செயல்பட வேண்டிய அதிகாரிகளே அவ்வளங்களைச் சுரண்டுவோர்க்குத் துணையாக இருக்கின்றனர் என்ற செய்தியை விளக்கிக்கூற, முதுமொழியான "வேலியே பயிரை மேய்வது" என்ற பழமொழியைக்

கூறிச் செய்தியின் தன்மையை மிக எளிமையாக விளக்கியுள்ளது தினமணி நாளிதழ்.

**வினா விடை**

வினாவினை எழுப்பி வினாவே விடையாக அமைவது போலவும் அமைக்கப்படுவது வினாவிடை உத்தியாகும். இவ்வுத்தியானது மக்களைச் சிந்திக்கத் தூண்டும் வகையில் அமைந்திருக்கிறது.

(எ.கா.)

*கல்விக்கடன் பெறுவதற்கு என்ன தகுதி வேண்டும்?*

என்ற வினாவுக்கு விடையாக,

*ஒரு படிப்பில் சேர்வதற்கான குறைந்தபட்ச தகுதிபெற்ற யார் வேண்டுமானாலும் கல்விக் கடன் பெற முடியும். எனினும் கடன் பெறுபவர் படித்து முடித்த பின்பு அந்தப் படிப்பின் மூலம் வேலைவாய்ப்பு பெறுவதற்கு உள்ள வாய்ப்புகளையும் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும்.*

*கனிமவள சோதனைச் சாவடி மாநில எல்லையில் அமைக்கப்படுமா?*

என்ற வினாவுக்கு விடையாக,

*மாநில எல்லைகளில் இருக்கும் மாவட்டங்களில் கனிமவளத் துறையின் சோதனைச் சாவடிகளை அமைப்பதன் மூலம் தமிழக அரசுக்கு ஆண்டுக்கு ரூ.301 கோடி கூடுதல் வருவாய் கிடைக்கும் எனக் கனிமவளத்துறை கூறுகிறது.* இவ்வினாவிடை உத்தி பிறநாளிதழ்களிலும் பயன்படுத்தப்படுகின்றது.

*'இறக்குமதிகளால் இலக்கை எட்ட முடியுமா?'  26.1.2008,ப.11*

இதுபோன்ற பயன்பாடு பல இடங்களில் காணப்படுகின்றது.

**மரபுத்தொடர்**

சொல்லுக்குச் சொல் பொருள் கொள்ள முடியாததும் முற்றிலும் வேறு பொருளில் வழங்கிவருவதுமான தொடர் மரபுத்தொடர் (Idiom) எனப்படும் (க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி).

(எ.கா.)

1. *மாவட்டங்களில் செய்திகளைக் குறைக்கும் முடிவை கைவிட கமிஷன் மறுப்பு  31.07.2005,ப.9*
2. *இவர்களை விடக்கூடாது ஒரு கை பார்த்து விடுவது என்ற முடிவுக்கு வந்தார்.*

*இவ்வுத்தி பிறநாளிதழ்களிலும் கையாளப்படுகிறது.*

### அடுக்குத் தொடர்

ஒரு சொல் இரண்டு முறைவந்து அதைப் பிரித்தாலும் பொருள் தருமானால் அதனை அடுக்குத் தொடர் என்பர். இத்தகு சொற்கள் பொருளின் செயலாற்றலையும் பயனையும் சிறப்பினையும் விளக்குவனவாக அமைகின்றன. சில இடங்களில் படிப்பவரின் உணர்வைத் தூண்டும் தன்மையுடையதாகவும் அமையும்.

*(எ.கா)*

*வாகனங்கள் வாங்குவதற்கு "கூவிகூவி" கடன் கொடுக்கின்றன தனியார் வங்கிகள்.*

*... ...."குழைந்து குழைந்து" வலியுறுத்தின. 31.07.2005,ப.8*

*பேஷ், பேஷ்... பலே, பலே ...! 26.11.2010,ப.6*

இவைபோன்ற அடுக்குமொழிச் சொற்கள் மற்ற நாளிதழ்களில் உள்ளது போல தினமணி நாளிதழிலும் காணப்படுகின்றன.

### ஒலிக்குறிப்புச் சொல்

ஒருவரின் செயலால் அல்லது ஒன்றின் தன்மையால் எழும் ஒலியை அது கேட்கப்படும் விதத்திலேயே குறிக்கும் சொல் ஒலிக்குறிப்புச் சொல் (onomatapoeia words) ஆகும். செய்தியைப் படிப்பவருக்கு அதை உணர்ந்து நேரில் அந்நிகழ்ச்சியைப் பார்ப்பது போன்ற உணர்வை ஏற்படுத்தும் வகையில் செய்தி அச்சூழலோடு ஒன்றிடுமாறு இருக்க வேண்டுமென்ற நோக்கில் இத்தகைய சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

*(எ.கா.) 04.11.2004*

*தீப ஒளித் திருநாள்*
*தித்... தித்... தித்திக்குதே...*

*தினமணி மொழிநடைப் பயன்பாட்டில் ஒலிக்குறிப்புச் சொற்கள் பரவலாகக் காணப்படுகின்றன.*

### இரட்டைக்கிளவி

தினமணி நாளிதழில் இரட்டைக் கிளவி (reduplication) அதிகம் கையாளப்படுவதில்லை. பரவலாகச் சில இடங்களில் மட்டும் கையாளப்பட்டுள்ளது.

*(எ.கா.) பளபளக்கிறது பல்லடம் – உடுமலை சாலை.*

*... ... நீதிமன்றத்தில் "பரபரப்பு"*

*ஷ்ரியா பற...பற... 11.09.2005,ப.*III

*காரில் வெடிகுண்டு இருப்பதாக*
*திருச்சியில் பரபரப்பு* 26.12.2008,ப.4

*தொழில் சங்க அங்கீகாரத் தேர்தல்*
*விறுவிறுப்பான வாக்குப் பதிவு* 26.11.2010,ப.2

**எதிரிடைச் சொற்கள்**

கொள்கை இயக்கம் முதலியவற்றிற்கு நேர்மாறான அல்லது முரண்பாடான சொல் எதிரிடைச் சொல் (contrariness) ஆகும். இவைபோன்ற சொற்கள் தினமணி நாளிதழில் ஆங்காங்கே கையாளப்படுகின்றன.

(எ.கா.)

*'நமது பலவீனம் அவர்களது பலம்'.*

**பேச்சுமொழிப் பயன்பாடு**

தினமணி நாளிதழின் மொழிநடையில் பேச்சுமொழி பரவலாகக் கையாளப்பட்டுள்ளது.

(எ.கா.)

*எம் புள்ளைங்க பிரிட்டனில் படிக்குதுங்கோ*

*ஆதாரத்தைக் கேட்டு பேஜாரு பண்றாங்க.*

*டாக்டர் சீட் கிடைக்கலியா! இதோ* M.B.B.S. *படிக்க*
*அருமையான வாய்ப்பு.*
*மெய்யாலுமா ....?* 28.01.2012, ப.7

**எதுகை மோனை**

அலங்காரமான ஒலிநயத்துடன் அமைக்கப்படுகின்ற சொல் எதுகை மோனை (alliteration) ஆகும். இதுபோன்று அலங்காரமான ஒலிநயத்துடன் செய்திகள் தினமணி நாளிதழில் பயன்படுத்தப் பட்டுள்ளன. தினமணி மொழிநடைப் பயன்பாட்டில் இதுபோன்ற பயன்பாடு அதிகமாகக் காணப்படுகின்றன.

*(எ.கா.)*

*உள்ளத்தில் சோகம்*
*உதட்டில் புன்னகை* 28.5.2006, ப.10
*அன்று மகாரஷ்டிரம்*
*இன்று மணிப்பூர்*

*கோழிப் பண்ணையாளர்கள் பரிதவிப்பு* 29.7.2007,ப.6

தேவையில்லாமல் முட்டுக்கட்டை போட்டால்
தேர் ஒழுங்காகச் செல்லாது 30.7.2007,ப.7

*உலக சாதனைகளை*
*உள்ளூரில் தேடுவோம் 26.12.2008,ப.6*

*திருமணம் என்னும் நறுமணம்.*

*காதலியை கரம்பிடித்தார்*
*கால்பந்து நட்சத்திரம்*

*காதலர் தின வாடிக்கையாளரை கவர*
*காரசார சமோசா சிக்கன் டிக்கா. 30.12.2008,ப.6*

*காலம் செய்த கோலம்*

*விலக்கலாம்; இல்லையேல்*
*விலங்கிடலாம் 30.12.2008,ப.11*

*இறக்குமதிகளால் இலக்கை எட்ட முடியுமா?*

*ஆலம் விதையும் அழகிய மதிலும் 02.01.2012,ப.6*

*மரம் நட்டால் சோலைவனம்*
*மரம் வெட்டினால் பாலைவனம் 22.2.2012,ப.6*

**இயைபு**

முரண்பாடு இல்லாமல் பொருந்துதல், இணைதல் போன்ற அமைப்பை இயைபு என்று கூறுவர்.

*(எ.கா)*

*அரசன் எவ்வழி*
*மக்கள் அவ்வழி*
*மக்கள் எவ்வழி*
*மன்னன் அவ்வழி*
*ஜனநாயகத்தில் இதுதான் உண்மை 30.2.2008,ப.6*

*காலம் செய்த கோலம் 26.12.2008,ப.6*

*நாளை மறுநாள்*
*...... நினைவு நாள்*

*தீபாவளி திருநாள்*
*ஆட்டம்*
*பாட்டம்*
*கொண்டாட்டம்*

இதுபோன்ற அமைப்பு தினமணி நாளிதழ் மொழிநடைப் பயன்பாட்டில் பரவலாகக் காணப்படுகிறது.

### துடிப்புச் சொற்கள்

தலைப்புகள் விறுவிறுப்பாக இருக்கத் துடிப்புள்ள (drammatic words) சொற்களைப் பயன்படுத்த வேண்டும் என்கிறது தினத்தந்தி மொழிநடைக் கையேடு. தினமணி நாளிதழின் தலைப்புச் செய்திகளில் சில இடங்களில் இதுபோன்ற துடிப்புள்ள சொற்கள் கையாளப் பட்டுள்ளன.

*(எ.கா.)*

*நீதிமன்றத்தில் ... .. ... "புரளி"*

*ஸ்பெயின் 32 மாடிக்கட்டடத்தில் "திடீர் தீ"*

*வங்கிப் பங்குகளுக்கு "திடீர் வரவேற்பு"*

*டீசல் விலையில் "திடீர் சரிவு"*

இதுபோன்ற பயன்பாடு மற்ற நாளிதழ்களைப் போன்றே தினமணி நாளிதழிலும் ஆங்காங்கே சில இடங்களில் காணப்படுகிறது.

### பொருண்மை இயைபின்றிச் சொல்லாளுமை

தினமணியில் சில இடங்களில் சில சொற்கள் பொருண்மை இயைபின்றிப் பயன்படுத்தப்படுகின்றன. ஆனால், இப்பொருண்மை இயைபின்மையும்கூட வாடிக்கையாளர்களின் உள்ளத்தில் தாக்கத்தை ஏற்படுத்தும் வலிமைமிக்கதாக அமைந்து விடுகிறது.

*(எ.கா.)*

*கோவையில் வாலிபால் திருவிழா நாளை துவக்கம்.*

*நிரம்பி வழிகின்றன சிறைகள் தில்லியில்தான் அதிகம்.*

*நீச்சல் தாரகை நிஷா மில்லட்.*

### ஒருபொருள் பல சொற்பயன்பாடு

சாவு என்பதைக் குறிக்க அது நடைபெற்ற இடத்திற்கேற்பவும், சூழலுக்கு ஏற்பவும் பலி, மரணம், இறப்பு ஆகிய வெவ்வேறு சொற்களைப் பயன்படுத்தியுள்ளது தினமணி நாளிதழ்.

*(எ.கா.)*

பறவைக்காய்ச்சல் நோய்க்கு முதல் "பலி" உறுதி செய்தது இந்தோனேசியா.

*விழுப்புரம் அருகே கார் – பஸ் மோதல் ..... .... பல்கலை அலுவலர்கள் மூவர் சாவு.*

*பாலக்காடு அருகே மனைவி இறந்த துக்கம் தாளாமல் கணவர் "சாவு"*

*இவ்வகைப் பயன்பாடு மற்ற நாளிதழ்களிலும் காணப்படுகின்றது.*

**எழுதுமுறை மரபுமீறல்**

பொருளின் பயன்பாட்டின் செயல்பாட்டை விளக்குவற்காக எழுத்துக்கள் பிரித்து எழுதப்படுகின்றன.

(எ.கா.)

*"ரா...ட்சதக் கொழுக்கட்டை"* *08.09.2004,ப.14*

இவ்வாறு எழுத்துக்களைப் பிரித்து எழுதப்படுவதன் வாயிலாகத் தினமணி நாளிதழின் எழுது முறையில் மரபு மீறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

**இலக்கண மரபுமீறல்**

மொழிக்குரிய இலக்கண விதிகளை மீறுவது இலக்கண மரபு மீறல் ஆகும். செய்திகள் ஆற்றல் மிக்கவைகளாக விளங்குவதற்காக நாளிதழ்கள் மொழியை இலக்கண விதிமீறிப் பயன்படுத்துகின்றன. மொழியின் ஒலி, உருபன், சொல், தொடர், பொருள் போன்ற மொழியின் அனைத்து நிலைகளிலும் இலக்கண மரபு மீறப்பட்டுள்ளது.

*(எ.கா.)*

*ஸ்ரீ ராம கிருஷ்ணா மிஷன் வித்யாலயத்தில் மாநில கல்லூரிகளிடை கூடைப்பந்து ஜன. 6ல் துவக்கம்*
29.12.2004,ப.3

*லயோலா கல்லூரியில் இன்று முதல்*
*தென் இந்திய "கல்லூரிகளிடை" கால்பந்து* *24.1.2005,ப.15*

*"கல்லூரிகளிடை" தடகளப் போட்டி* *01.02.2005,ப.4*

**சொற்சுருக்கம்**

இடச்சுருக்கத்தினைக் கருத்தில் கொண்டும் செய்தியைச் சுருக்கமாகவும் விரைவாகவும் எடுத்துக்கூறச் சொற்சுருக்கம் எனும் உத்தி கையாளப்படுகிறது. இவ்வாறு பயன்படுத்தக்கூடிய சொல் ஊர்ப்பெயர், நிறுவனப் பெயர், தலைவர் பெயர் போன்றவற்றில் பயன்படுத்தப்படுகின்றது. இதுபோன்ற சொற்சுருக்கம் மற்ற நாளிதழ்களில் காணப்படுவது போல் தினமணியிலும் காணப்படுகிறது.

*(எ.கா.)*

*பல்கலை..* *பல்கலைக்கழகம்*

| | |
|---|---|
| *த.நா.* | *தமிழ்நாடு* |
| *பாக்..* | *பாக்கிஸ்தான்* |
| *தெ. ஆ.* | *தென்னாப்பிரிக்கா* |
| *பெ.நா.பாளையம்* | *பெரிய நாயக்கன்பாளையம்* |
| *இன்ஜி.* | *இன்ஜினியர்* |

*போன்றன.*

**சொற் பயன்பாடு**

ஒரு மொழியின் கூறுகளில் எளிதில் எடுத்துரைக்கக் கூடிய, மாற்றத்திற்கு உள்ளாகும் கூறு சொல்லாகும். மொழி எளிமைக்கும், விளக்கத்திற்கும் தேவையானது சொற்பயன்பாடு. அதனால்தான் சொல்லாட்சியை நடையமைப்பின் ஒரு பகுதியாகக் கருதலாம். மொழிக்கூறுகளை அவற்றின் பயன்பாட்டிற்கேற்பத் தேர்வு செய்யும் நிலையில் முதன்மையிடம் பெறுவதும் சொற்பயன்பாடாகும்.

சொற்களில் பெயர், வினை என்ற இருபெரும் பிரிவுகள் இலக்கண அமைப்பையொட்டி அமைகின்றன. இன்றைய மாறிவரும் சமுதாயத்திற்கேற்பக் கலைச்சொற்களின் தேவை அதிகமாகிறது. பிறமொழிச் சொற்கள் தன்னினமாக்கப்படுகின்றன. கருத்தடிப்படையில் புதுச்சொற்கள் உருவாக்கப்படுகின்றன. சொல் புதிது–சுவை புதிது எனச் சொற்களின் பயன்பாட்டில் புதுமையும் பழமையும் இணைக்கப் படுகின்றன. மொழிப்பயன்பாட்டில் துறைக்கேற்ப அன்றாட வழக்குச் சொற்கள் நிலைபேறாக்கம் செய்யப்படுகின்றன. இவ்வாறான சொற்பயன்பாடு தினமணியில் காணப்படுகின்றது.

**இலக்கியவழக்குச் சொற்கள்**

தினமணி நாளிதழின் மொழிநடைப் பயன்பாட்டில் *குருதி, இறையாண்மை, கையறுநிலை, சான்றோன், செவிலி, அகம், அகழி, அவா, கழனி போன்ற* இலக்கிய வழக்குப் பழந்தமிழ்ச் சொற்கள் இடம்பெறுகின்றன.

**புதுமையாக்கம்**

மொழியில் ஏற்படுத்தப்படும் பல மாற்றங்களை உள்ளடக்கி, மொழிக் கூறுகளின் பயன்பாட்டில் தோற்றுவிக்கப்படும் விரிவாக்கமும் (elaboration), எளிமையாக்கமுமே (simplification) புதுமையாக்கம் என்ற ஒரு கருத்து நிலவினாலும், சொற்களஞ்சியத்தின் வளர்ச்சியே புதுமையாக்கம் என்று ஒரு கருத்தும் புதுமையாக்கம் (modernization) என்ற கோட்பாட்டில் நிலவுகிறது.

ஒரு சமுதாயத்தில் ஏற்படக்கூடிய மாற்றங்கள், புதுமைகள் ஆகியவை அச்சமுதாயம் பயன்படுத்திவரும் மொழி அல்லது மொழிகளின் மூலம் பெரும்பாலும் வெளிப்படுத்தப்படுகின்றன. இதனால் அச்சமுதாய மொழியில் மாற்றங்களும் புதுமைகளும் சிறிது சிறிதாக ஏற்படுவது இயல்பு. இதுபோன்ற மாற்றங்களும் புதுமைகளும் மொழியை வளப்படுத்தி அதனை ஆற்றல்மிக்க மொழியாக மாற்றக்கூடிய சமுதாய மொழியியற் சூழலை உருவாக்கக் கூடியவையாகும். மேலும் பயன்பாட்டிற்கேற்ப மொழிநடை மாற்றங்களைச் செய்துகொள்ள வழிவகை செய்வதும் புதுமையாக்கத்தின் குறிக்கோள்களுள் ஒன்றாகும்.

காலத்திற்கேற்பச் சமுதாயத்தின் அடிப்படைத் தேவைகளைக் கருத்தில் கொண்டு ஒருமொழியில் புதிய சொற்களை உருவாக்குவது, பயன்படுத்துவது புதுச்சொல்லாக்கம் ஆகும்.

*(எ.கா.)*

*தொலை அமுக்கி* – *ரிமோட் கன்ட்ரோல்*

*ரெய்கி* – *புதிய மருத்துவமுறை*

**பிறமொழிச்சொல்**

தினமணி மொழிநடைப் பயன்பாட்டில் ஆங்கிலச் சொற்கள், வடமொழிச் சொற்கள் போன்றவை அதிகமாகக் கையாளப்படுகின்றன. மேலும், பெர்சிய, அரபி மொழிச் சொற்களும் காணப்படுகின்றன. பிறமொழிச் சொற்கள் பல படிநிலைகளில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. அவை,

பிறமொழிச் சொல்லை அப்படியே பயன்படுத்துதல்.

ஒலிபெயர்ப்புச் செய்து பயன்படுத்துதல்.

மொழிபெயர்ப்புச் செய்து பயன்படுத்துதல்.

பிறமொழிச் சொல்லைத் தமிழ்ச்சொல்லோடு இணைத்துப் பயன்படுத்துதல்.

பிறமொழிச் சொல்லோடு தமிழ் ஒட்டுக்களை இணைத்துப் பயன்படுத்துதல்.

பிறமொழிச் சொல்லோடு பிறமொழிச் சொல்லை இணைத்துப் பயன்படுத்துதல் என்பன.

**பிறமொழிச்சொற்பயன்பாடு**

*(எ.கா.)*

*இன்ஸ்டிடியூட், சர்ச்,*

*ஆப்செண்ட், இன்சூரன்ஸ்*

*ஆன்லைன், யூனிட்*

*போன்ற சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.*

**வடமொழிச் சொற்பயன்பாடு**

*பூஜை, வேஷ்டி,*

*துஷ்பிரயோகம், கஷ்டம்,*

*அதிர்ஷ்டம், சிருஷ்டி,*

*கோஷம், துரதிஷ்டம், கோஷ்டி*

**அரபிமொழிச் சொற்பயன்பாடு**

| | |
|---|---|
| *இலாகா,* | *ஜாமீன்,* |
| *மகசூல்,* | *வசூல்,* |
| *ரத்து,* | *ஆஜர்,* |
| *மாமூல்,* | *நகல், ஜப்தி* |

**ஆங்கிலச் சொல்லோடு பன்மை ஒட்டு இணைதல்**

| | | | | |
|---|---|---|---|---|
| *பார்* | + | *கள்* | ➢ | *பார்கள்* |
| *கார்டு* | + | *கள்* | ➢ | *கார்டுகள்* |
| *சேனல்* | + | *கள்* | ➢ | *சேனல்கள்* |

**தமிழ்ச்சொல்லோடு ஆங்கில ஒட்டு இணைதல்**

*குட்டீஸ்,*

*வாண்டுஸ் – போன்ற சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.*

**இரு ஆங்கிலச் சொற்களை இணைத்தல்**

**ஆங்கிலம்+ஆங்கிலம்**

| | | | |
|---|---|---|---|
| *ரூட்* | *+ சர்வர்* | ➢ | *ரூட் சர்வர்* |
| *செல்* | *+ போன்* | ➢ | *செல்போன்* |
| *டெலிகாம்* | *+ கார்டு* | ➢ | *டெலிகாம் கார்டு* |
| *கேபிள்* | *+ டீவி* | ➢ | *கேபிள் டீ.வி* |

**தமிழ் + வடமொழி**

| | | |
|---|---|---|
| *திருமணம்+கோஷ்டி* | ➢ | *திருமணகோஷ்டி* |
| *கந்த+சஷ்டி* | ➢ | *கந்தசஷ்டி* |

**வடமொழி + தமிழ்**

| | | | |
|---|---|---|---|
| *விஷ* | *+ வாயு* | ➢ | *விஷவாயு* |
| *அதிர்ஷ்ட* | *+ சாலி* | ➢ | *அதிர்ஷ்டசாலி* |

*கோஷம் + இட்டனர் ➢ கோஷமிட்டனர்*
*சிருஷ்டி + தொழில் ➢ சிருஷ்டித் தொழில்*

**ஆங்கிலம் + தமிழ்**

*பஸ் +நிலையம் ➢ பஸ்நிலையம்*
*காப்பர் +கம்பி ➢ காப்பர்கம்பி*
*கிரிமினல் +குற்றம் ➢ கிரிமினல்குற்றம்*
*டெஸ்ட் +போட்டி ➢ டெஸ்ட்போட்டி*
*ஸ்டேட் +வங்கி ➢ ஸ்டேட்வங்கி*

**ஒலிபெயர்ப்பு**

பிறமொழிச் சொற்களைத் தமிழில் எழுதும்போது அவற்றின் ஒலியை அப்படியே எழுதுவது ஒலிபெயர்ப்பு எனப்படும். ஆங்கிலக் கலைச்சொற்களை அவ்வாறே தமிழ் வரிவடிவத்தில் எழுதுவது ஒலி பெயர்ப்பாகும்.

*(எ.கா.)*

*பட்ஜெட், சாப்ட்வேர்,*
*ஸ்காலர்ஷிப், ஏர்கண்டிசன்,*
*பெலோஷிப், சீடி*

*போன்றன.*

**நேரடி மொழிபெயர்ப்பு**

சொல்லுக்குச் சொல் அப்படியே மொழிபெயர்ப்பது நேரடி மொழிபெயர்ப்பு (direct translation) ஆகும்.

*(எ.கா.)*

*கூடைப்பந்து* – basket ball
*கால்பந்து* – foot ball
*சுனாமி* – tsunami
*மின்வெட்டு* – power cut
*கறுப்புப் பணம்* – black money
*சுயநிதி* – self-finance

**கருத்து மொழிபெயர்ப்பு**

*தன்னாட்சி* – autonomous
*காவலர்* – police
*தேர்தல்* – election

**மொழியாக்கம்**

பிற மொழிச் சொற்களைத் தமிழில் மொழிபெயர்க்கும்போது தமிழ் மொழியின் மரபு பாதுகாக்கப்பட வேண்டியது அவசியம். அந்தவகையில் மொழிபெயர்த்தால்தான் அம் மொழியின் பண்பாட்டுக் கூறுகள் காக்கப்படும். வேற்று மொழிச் சொற்களை அடிப்படையாகக் கொண்டு புதியனவாக உருவாக்கப்படுவது மொழியாக்கம் எனலாம். (எ.கா.)

*ஆழிப் பேரலை* – tsunami

**எளிமையாக்கம்**

மொழிப்பயன்பாட்டில் எளிமையும் ஆற்றலும் கொண்ட சொற்கள், தொடர்கள் போன்றவை வாசகர்களை எளிதில் கவரக் கூடியவையாகும். எளிமையாக்கத்தை மனதில் கொண்டு தினமணி நாளிதழ் புதுச்சொற்களையும் புதுத்தொடர்களையும் பயன்படுத்தி யிருப்பதைக் காணலாம்.

**விரிவாக்கம்**

புதுமையாக்கத்தின் மற்றொரு பகுதியே விரிவாக்கம் எனலாம். மொழித் திட்டத்தை விளக்கும்போது மொழிக்கூறுகளைத் தேர்ந்தெடுக்கும் நிலையில் மொழிக் கூறுகளை விரிவுபடுத்தி அவற்றை மொழிப் பயன்பாட்டில் இடம்பெறச்செய்து பரவலாக்கம் பெறச்செய்வது விரிவாக்கமாகும். அவ்வாறு பரவலாக்கம் பெற்ற சிலவற்றைச் சமுதாயம் எடுத்துக் கொள்வது, சிலவற்றை ஒதுக்குவது அல்லது புறக்கணிப்பது போன்றவை மொழித் திட்டமிடுதலில் இடம்பெறும் செயல் முறைகளாகும்.

புதுச்சொற்களையும் புதுக்கருத்துக்களையும் கையாளும்போது அவை நிலைபேறடையும்வரை பிறமொழிச்சொல் துணையுடன் கையாள்வது அவசியமாகும். அறிவியல் மொழிநடையினைச் செம்மையாக்கம் செய்யவும், ஒருமொழியில் பல்துறைக் கருத்துக்களைச் செவ்வனே வெளிப்படுத்தவும் மொழிபெயர்ப்பும் புதுச்சொல்லாக்கமும் மிகவும் தேவையாகின்றன. இவைபோன்ற மொழிப் புதுமையாக்க (language modernization) முயற்சிகளே பின்னர் அறிவியல் மொழிக்கேற்ப ஒரு மொழியினை நிலைபேறாக்கம் செய்யத் துணைநிற்கின்றன.

புதுச்சொற்களையும் புதுக்கருத்துகளையும் கையாளும்போது அவை நிலைபேறடையும்வரை பிறமொழிச் சொல் துணையுடன் கையாளல் அவசியம் என்பதை உணர்ந்த நிலையில், மக்கள் எளிதில் புரிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகவும் விரிவான

விளக்கத்திற்காகவும் அடைப்புக்குறிக்குள் பிறமொழிச் சொல்லை ஒலிபெயர்ப்புச் செய்து கையாள்கிறது தினமணி நாளிதழ்.

*(எ.கா.)*

| | | | |
|---|---|---|---|
| *சேவைக் கட்டணம்* | – | *சர்வீஸ் டாக்ஸ்* | – Service Tax |
| *மதிப்புக்கூட்டுவரி* | – | *வேல்யு ஆடட் டாக்ஸ்* | – Value Added Tax |
| *மென்பொருள்* | – | *சாப்ட்வேர்* | – Software |
| *தொலை அமுக்கி* | – | *ரிமோட் கன்ட்ரோல்* | – Remote Control |
| *சிறப்புப் புலனாய்வுப் பிரிவு* | – | *ஸ்பெசல் இன்வெஸ்டிகேசன் டீம்* | – Special Insvestigation Team |

போன்றன.

### மொழிபெயர்ப்பில் சொல்பெயர்ப்பு

மொழிபெயர்ப்பில் சொற்களை மூலமொழியிலிருந்து (source language) குறிக்கோள் மொழிக்கு (target language) மாற்றிப் பயன்படுத்துவதன் மூலம் சொற்பெருக்கமும், மொழிவளர்ச்சியும் ஏற்படுகின்றன. மூலமொழியிலிருந்து கருத்துக்களைக் குறிக்கோள் மொழிக்கு மொழிபெயர்க்கும்பொழுது சொற்பெருக்கம் ஏற்படுகிறது. இத்தகைய செயல்களின் விளைவாகப் பின்வரும் வகையில் சொல்வளர்ச்சி ஏற்படுகின்றது.

சொற்களை நேரிடையாக அயல்மொழியிலிருந்து பெறுதல் அல்லது அச்சொற்களைத் தன்னினமாக்கிக் (nativization) கொள்ளுதல்.

கலப்புச் சொற்களை உருவாக்குதல்.

பழையசொல்லுக்குப் புதுப்பொருள் கொடுத்துப் பயன்படுத்துவதால் மொழியில் புதுப்புதுச் சொற்கள் உருவாக்கப்படுகின்றன. இதனால் மொழி வளர்ச்சியடையும். மேற்கூறப்பட்ட மூன்றுவிதச் சொற்பெருக்க வழிமுறைகளும் குறிக்கோள் மொழியில் வளர்ச்சிக் கூறுகள் ஏற்படுவதற்கு உதவிபுரிகின்றன. இவற்றின் பயனாய்ப் புதுப்புதுக் கருத்துக்களைக் கூற மொழியில் சொற்கள் உருவாக்கப்படுகின்றன.

பிறமொழிச் சொற்களைத் தமிழ் மொழியில் கூறுவதன் வாயிலாகப் புது ஒலிகள் மொழிக்குக் கிடைக்கின்றன. மொழி முதலில்வரும் ஒலிகளின் பட்டியல் நீண்டு மொழியமைப்பு விரிவுபடுகிறது. அனைத்து நாளிதழ்களிலும் இதுபோன்ற பயன்பாடு உள்ளது. தினமணி நாளிதழிலும் இப்பயன்பாடு காணப்படுகின்றது.

### கிரந்த எழுத்துப் பயன்பாடு

கிரந்த எழுத்துக்களான 'ஜ, ஸ, ஷ, க்ஷ, ஹ' ஆகியவை தமிழில் பிறமொழிச் சொற்களை எழுதப் பயன்படுத்தப்படுகின்றன.

தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்களை நீக்க முற்பட்டாலும், *ஜாமீன், கமிஷன், ஹார்டுவேர், மாஜிஸ்திரேட் போன்ற* கிரந்த எழுத்துக்கள் தமிழ்வயப்படுத்தாமல் அதன் அமைப்பிலேயே மற்ற நாளிதழ்களைப் போல் தினமணி நாளிதழிலும் பயன்படுத்தப்படுகின்றன.

**வாக்கிய அமைப்பு**

வாக்கியத்தை முற்றுத்தொடர் என்றும் கூறலாம். ஒரு முழுக்கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கும் சொற்றொடரை வாக்கியம் என்பர். இதில் மறைபொருள் (ambiquity) இல்லாமலும், ஒரேபொருளையுடைய எழுவாய், வினை என்ற உறுப்புகளைப் பெற்றும் வரவேண்டும். வாக்கியங்களை அமைப்பு அடிப்படையிலும், கருத்து அடிப்படையிலும் வகைப்படுத்தலாம். எழுவாய், செயப்படுபொருள், வினை என்ற அமைப்புகளைக் கொண்டு வாக்கியங்களை வகைப்படுத்துவர். அமைப்பு நிலை, கருத்துநிலை வாக்கியங்களை முறையே நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்.

இவ்வாறு கருத்து நிலையில் வாக்கியங்களைப் பல வடிவ வாக்கியங்களாக அமைத்து உணர்த்தும் பொழுது சுவைபயக்கும் மொழிநடையும் தெளிவும் உருவாவதற்கு வழிபிறக்கிறது. இவ்வாக்கியங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பயனைத் தரத்தக்கதாக அமைந்துள்ளன. மொழிப்பயன்பாட்டில் கருத்து நிலையில் வாக்கியங்கள் தினமணி நாளிதழில் எவ்வாறு கையாளப்பட்டுள்ளன என்று கூறப்பட்டுள்ளது.

**செய்தி வாக்கியம்**

மக்களுக்கு ஒரு செய்தியைத் தெரிவிக்கக்கூடிய, அறிவிக்கக்கூடிய வகையில் அமைக்கப்படும் வாக்கியம் செய்தி வாக்கியம் ஆகும்.

*(எ.கா.)*

*திருப்பூரில் அனுமதி பெறாமல் பதிக்கப்பட்ட கேபிள் துண்டிக்கப்படும்.* *21.11.2004,ப.5*

*தனியார் வங்கியில் கடன் பெறுவோருக்கு ஒப்பந்த நகல்* வழங்கவேண்டும். *29.12.2004,ப.2*

*ரத்து செய்யப்பட்ட "எச்" கார்டுகளை புதுப்பித்து தரக் கோரிக்கை.* *08.02.2005,ப.3*

**ஏவல் வாக்கியம்**

செய்தியில் இடம்பெறும் முன்னிலை வினைகள் ஏவல் மற்றும் வேண்டுகோள் பொருண்மையுடையதாக அமைகின்றன. இவ்வாறு

அமைகின்ற வினைகள் வாசகர்களைச் செயல்பட வேண்டி ஏவுதல்போல் வாக்கியங்கள் அமைக்கப்படுவதால் வாசகர்களை எளிதாக ஈர்த்துச் செய்தியைப் படிக்கத் தூண்டுகின்றன.

*(எ.கா.)*

*வன்முறையைக் கைவிடுங்கள் இளைஞர்களுக்குப் பிரதமர் வேண்டுகோள்.* 21.11.2004,ப.10

*காப்பாற்றுவீர்களா?* 08.09.2005,ப.11

*உலகம் அழைக்கிறது.*

*கொஞ்சம் கவனிங்க...*

*சவாரிக்கு வாரிகளா...?* 11.09.2005,ப.5

தினமணி நாளிதழில் ஏவல் வாக்கியம் அதிகமாகப் பயன்படுத்தப்படுவதில்லை. பரவலாகக் காணப்படுகின்றன.

**வினா வாக்கியம்**

படிப்பவரை நோக்கிக் கேள்விகேட்பது போன்று அமைந்திருக்கும் வாக்கியம் வினா வாக்கியம் (interrogative sentence) ஆகும். படிப்பவர்களின் சிந்தனையைத் தூண்டுவதாகவும் செய்தியை வாசகர்களின் மனதில் எளிதில் பதிய வைப்பது போலவும் இவ்வகை வாக்கியங்கள் இருப்பதால் வலிமைமிக்க நாளிதழ் உத்தியாகக் கையாளப்படுகிறது.

*(எ.கா.)*

*அப்துல்கலாம் வாழ்வில் பெருமைக்குரிய தருணம் எது?* 01.11.2004,ப.7

*கல்விக்கடன் பெறுவது எப்படி?*

*இந்தியா டெலிகாம் கார்டு பயன்படுத்தும் தொலைபேசி வைக்க விருப்பமா?* 01.02.2005,ப.6

*என்ன செய்யப் போகிறோம்?* 24.01.2012,ப.6

**உணர்ச்சி வாக்கியம்**

செய்தியைப் படிக்கக்கூடிய வாசகர்களின் மத்தியில் உணர்ச்சியை, வியப்பை ஏற்படுத்தக்கூடிய வகையில் அமையும் வாக்கியம் உணர்ச்சி வாக்கியம் (exclamatory sentence) ஆகும். இவ்வகை வாக்கியங்கள் படிப்பவர்களின் கவனத்தை ஈர்க்கக் கூடியதாக அமைக்கப்படுகின்றன.

*(எ.கா.)*

*கடைசி நேரப் பரபரப்பில் உயர்ந்தது சென்செக்ஸ்* 09.02.2005,ப.4

*ரோஜாப்பூ ஒன்று ரூ.15* *15.02.2005,ப.3*

*'வழி தெரியவில்லையே' பிரான்ஸ் கவலை* *26.11.2010,ப.9*

*திருப்பூர் அருகே கிராமங்களில் நில அதிர்வு!* *17.11.2011,ப.9*

இவைபோன்ற வாக்கிய அமைப்புகள் மற்ற நாளிதழ்களைப் போல் தினமணி நாளிதழும் பயன்படுத்துகிறது.

**அடைத்தொடர்**

தினமணி நாளிதழின் மொழிநடைப் பயன்பாட்டில் பலவிதமான நீண்ட அடைத் தொடர்களும் கையாளப்படுத்துகின்றன.

*(எ.கா.)* *02.08.2005,ப.8*

அன்பை வளர்க்க முடியாதபோது, அன்பு காய்ந்து, வாடி, வதங்கி, வறண்டுபோய் இறுதியில் மணமுறிவுக்கு இட்டுச் செல்கிறது.

விரோதிகளிடமிருந்து பாதுகாப்பதற்காகப் பெரிய வலுவான மூத்த ஆண் குரங்குகளைக் கொண்ட பாதுகாப்பு வளையத்தை அமைத்துக் கொள்வதுண்டு.

அப்பாவித்தனமான முகம் குழந்தைத்தனமான செயல்கள் பந்தா இல்லாத நடிகை...

விரிவான சரியான கட்டுப்பாடான சுற்றுப்புறச்சூழல் மேலாண்மைத் திட்டமும் இந்தக் கால்வாய்த் திட்டத்தின் முக்கியப் பகுதி.

**வர்ணனைத் தொடர்**

தினமணி நாளிதழ் செய்திப் பயன்பாட்டில் வர்ணனைகளையும் எடுத்துக் கையாண்டுள்ளது. காதலில் சிக்கித் தவிக்கும் இளைஞர்களின் பரிதாப நிலை வர்ணனையுடன் விளக்கப்பட்டுள்ளது.

(எ.கா.)

*ஊரெல்லாம் ரீங்காரமிட்டு ஓரிரு நாளிலேயே செத்துப்போகும் கொசுக் காதலால். கண்கள் இரண்டிலும் காதல் நதியை கசியவிடுகிற கண்ணீர் காதலால்... சிலர் கருவறையிலிருந்து கல்லறைக்கு அதிவேகப் பயணம் மேற் கொள்ளக் காரணமாய் அமைவது ஆட்கொல்லி நோய்போன்று வேகமாய்ப் பரவி வரும் காதலர் தினம் போன்ற மேலை நாட்டுக் கலாச்சாரங்களே. (12.02.2005,ப.8)*

இறந்த காலத்தில் காதலைத் தொலைத்துவிட்டு நிகழ்காலத்தில் நடைப்பிணமாக வாழ்ந்து கொண்டிருக்கிற ஏராளமான இளைஞர்களைச் சந்திக்கலாம்.

**குறைத்தொடர்**

சில தொடர்கள் தம்மளவில் முழுப் பொருளைத் தராமல் அம்முழுப்பொருளைத் தர வேறொரு பொருத்தமான சொல் அச்சொற்றொடரில் தொக்கி நிற்கும்படி அமைக்கப்படும் தொடர் குறைத் தொடர் எனலாம். இவ்வாறு ஏற்றதொரு சொல்லைத் தருவித்துப் படிக்காவிட்டால் இத்தொடரின் முழுப்பொருளையும் அறிந்துகொள்ள இயலாது.

இக்குறைத் தொடர்களில் தொக்கிநிற்கும் சொற்கள் பெயராகவோ, வினையாகவோ, அல்லது பெயர், வினை இரண்டுமாகவோ இருக்கலாம். அச்சொற்கள் பெரும்பாலும் தொடரின் இறுதியில் தொக்கி நிற்கின்றன. தினமணியில் கையாளப்பட்டுள்ள குறை வாக்கியகள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன. இதுபோன்ற பயன்பாடு மற்ற நாளிதழ்களிலும் காணப்படுகின்றது. இக் குறைவாக்கியங்கள் படிப்போரைக் கவர்ந்திழுக்கும் வலிமைமிக்க வாக்கிய அமைப்பாக விளங்குகின்றன.

*(எ.கா.)*

| | |
|---|---|
| *ஹிட்லரின் கடைசி 10 தினங்கள் ...* | *13.02.2004* |
| *இருப்பதை விட்டுவிட்டு ...* | *20.11.2004* |
| *எத்தனை வாகனங்கள் வந்தாலும் ...* | |
| *தலைமைத் தேர்தல் ஆணையரைச் சந்தித்துவிட்டு* | *31.11.2004* |
| *ஒலியும் ஒளியும் 60 ஆயிரம் பேர் வாழ்வில் ... காக்ளியா இம்பிளாண்ட்* | |
| *வேண்டாம் பயங்கரவாதம் ...* | *30.12.2008,பக்.6* |

**செயவெனும் எச்சம்**

வினைக்கருத்தினை எழுவாய்க்குப் (subject) பயனிலையாக்காமல் காட்டும் வினைவடிவம் செயவெனும் வெச்சம் (infinitive) எனலாம்.

*(எ.கா.)*

| | |
|---|---|
| *உலக அளவில் சிறகடிக்க...* | *01.11.2004* |
| *கைத்தறி தொழில்நுட்பம் பயில...* | |
| *ஆயுர்வேத மருத்துவம் பயில...* | *01.11.2004* |
| *சிரமங்களைத் தவிர்க்க ...* | *13.08.2005,ப.5* |

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் செயவெனுயெச்சங்களான "சிறகடிக்க" "பயில" "தவிர்க்க" போன்றவை முறையே சிறகடிப்பதற்கு, பயில்வதற்கு, தவிர்ப்பதற்கு என்ற நோக்கப் பொருண்மையில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இதுபோன்ற பயன்பாடு வாசகர்களுக்கு அந்த நாளிதழைப் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டுவதற்காகப் பயன்படுத்தும் உத்தியாகக் கையாளப்படுகிறது. தினமணி நாளிதழைப் போன்றே மற்ற நாளிதழ்களிலும் இப்பயன்பாடு காணப்படுகின்றது.

**சொல்வரிசை மாறுபாடு**

தமிழ்த்தொடர்கள் பொதுவாக எழுவாய், செயப்படுபொருள், பயனிலை என்ற அமைப்புடையன. ஆனால் இவ்வமைப்பு தினமணி நாளிதழில் மாற்றி அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இவ்வாறு பயன்படுத்துவதற்குக் காரணம் யார்? என்ன? எங்கு? எப்பொழுது? எப்படி? போன்ற வினாக்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வகையிலும் இவ்வாறு கையாளப்படுகின்றன. தினம்ணி நாளிதழில் பயன்படுத்தப்படுவது போன்றே மற்ற நாளிதழ்களிலும் இது போன்ற பயன்பாடு காணப்படுகின்றது.

*(எ.கா.)*

*விளையாடிக் கொண்டிருந்த மாணவன் சுருண்டு விழுந்து சாவு* *20.11.2003*

*கடத்தப்பட்ட இன்சூரன்ஸ் ஊழியர்கள் விடுவிப்பு*

விபத்தில் பெண் பலி

*குழந்தையை கொஞ்சி மகிழும் மன்மோகன்* *10.02.2005*

*அதிவேக இண்டர்நெட் இணைப்பு செய்வாபாய் பள்ளி துவக்கம்*

*மிகவும் விரும்பத்தக்க நாடு அந்தஸ்தை இந்தியாவுக்கு பாக். வழங்க கோரிக்கை*

*தொடங்கியது 64 லட்சம் மரக்கன்றுகள் நடும் திட்டம்...* *24.2.2012,ப.1*

**இரட்டைப்பொருள்**

எந்த ஒருதொடரும் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள் தருமாயின் அத்தொடரை மயக்கத்தொடர் (ambiquity) என்பர். மொழியில் வழங்கும் பெரும்பான்மையான சொற்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் இருக்கின்றன. இருந்தாலும் தகவல் பரிமாற்றத்தை நோக்கமாகக் கொண்டு எழுதப்படும் ஒரு வாக்கியத்தில் ஒருசொல் ஒரு

பொருளையே குறிப்பிடுகிறது. மற்ற பொருள்கள் நீக்கப்படுகின்றன. இந்த வசதி இருந்தும் செய்திகளில் பொருள் குழப்பம் ஏற்படுகிறது.

*(எ.கா.)*

*புலி., யுடன் பாலசிங்கம்* *23.01.2005*

இச்செய்தி இருபொருளைத் தருகின்றது. எவ்வாறெனில், ஒரு பொருள், குறிப்பிட்ட ஓர் அமைப்பைச் சார்ந்த பாலசிங்கமா? என்றும், மற்றொரு பொருள் காட்டில் வாழும் விலங்கினப் புலியுடன் பால சிங்கமா? (இளஞ்சிங்கம்) என்ற இருபொருள்பட உள்ளதால் குழப்பம் ஏற்படுத்துமளவிற்குப் புதுமையான தலைப்புச் செய்தி வெளியிடுகிறது.

தினமணி நாளிதழ் அறிவியல் துறை நுணுக்கச் செய்திகளை அருந்தமிழில் படைக்கின்றது. இதில் புதிய புதிய சொல்லாக்கங்களையும் காணலாம். தலையங்கமும் கட்டுரையும் பிறமொழிக் கலப்பின்றி நல்ல தமிழ்நடையில் இலக்கியச் சொற்களுடன் விரிவாகவும் விளக்கமாகவும் தினமணியில் வெளிவருகின்றன. பல இடங்களில் ஆங்கில மொழி, வடமொழி மற்றும் பிறமொழிக் கலப்பும் அப்படியே தமிழில் கொடுக்கப்பட்டுள்ளன.

மேலும், மொழிநடையில் ஒத்த பொருளுடைய பலசொற்கள் அவற்றின் சூழலுக்கு ஏற்ப இலக்கியச் சொற்கள், பழைய வழக்கிழந்த சொற்கள், புதுச்சொற்கள் என்ற வகையில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

புதுச்சொற்களையும், புதுக்கருத்துக்களையும் பயன்படுத்தும் போது அவை நிலைபேறடையும்வரை பிறமொழிச் சொற்களின் துணையுடன் கையாளுதல் அவசியம் என்பதை உணர்ந்த நிலையில் மக்கள் எளிதில் புரிந்து கொள்வதற்காகவும் விரிவான விளக்கத்திற்காகவும் அடைப்புக்குறிக்குள் பிறமொழிச் சொற்களைக் கையாளும் உத்திநிலை தினமணி நாளிதழுக்கே உரியதாகும்.

(எ.கா.)

*மதிப்புக்கூட்டுவரி* (வேல்யூ ஆடட் டாக்ஸ்)

*மென்பொருள்* (சாப்ட்வேர்)

போன்றன.

குறிப்பிட்ட செய்தியில் கையாளப்பட்டுள்ள உத்திகளான *இரட்டைக்கிளவி, எதுகைமோனை, உருவகம், பழமொழி, மரபுத்தொடர், ஒலிக் குறிப்புச் சொற்கள்* போன்ற உத்திகள் கையாளப்பட்டுள்ளன.

இதுபோன்ற பயன்பாடு தினமணி நாளிதழிலும் பரவலாக உள்ளது. சில இடங்களில் இலக்கண மரபு மீறப்பட்டுள்ளது.

(எ.கா.)

*"கல்லூரிகளுக்கு இடையே"* என்பதனைக் *"கல்லூரிகளிடை"*

எனப் பல இடங்களில் எழுதப்பட்டுள்ளது. வாசகரை ஈர்க்கும் உத்தியாக செய்தியின் வரிவடிவத்தை வழக்கத்திற்கு மாறாக மாற்றி எழுதும் போக்கும் காணப்படுகின்றது. சில இடங்களில் உண்மைப் பொருளிலிருந்து மாறுபட்ட பொருளைத் தலைப்புச் செய்திகளில் பயன் படுத்தியுள்ளதைக் காணலாம்.

(எ.கா.)

*வேலை வாய்ப்புத் திருவிழா*

*நீச்சல்தாரகை...*

போன்றன.

**புதுச்சொல்லாக்கம்**

| | |
|---|---|
| ரிமோட் கன்ட்ரோல் | – *தொலை அமுக்கி* |
| *சிம் கார்டு* | – *தொகுப்பி அட்டை* |
| *எய்ட்ஸ் நோய்* | – *தேய்வு நோய்* |

*இவைபோன்ற புதுச் சொல்லாக்கப் பயன்பாடு தினமணி நாளிதழில் காணப்படுகின்றது.*

சில இடங்களில் வர்ணனைத் தொடர்கள் கையாளப்படுகின்றன. செய்திகள் இலக்கண விதிகளின்படி சரியான புணர்ச்சி விதியுடன் எழுதப்படுகின்றன.

# தினத்தந்தி நாளிதழ் மொழிநடை

தமிழில் அனைத்துத் தரப்பு மக்களுக்கும் புரியும்படி எளிய நடையில் செய்திகளை எடுத்துச் சொல்வதைத் தம் குறிக்கோளாகக் கொண்ட இதழியல் ஜாம்பவான் எனப் போற்றப்படும் சி.பா. ஆதித்தனார் அவர்களால் தினத்தந்தி நாளிதழ் தொடங்கப்பட்டது. இவர் இந்நாளிதழைத் தொடங்குவதற்கு முன் மதுரை முரசு (1942), தமிழன் (1942) ஆகியவற்றை நடத்தித் தாம் பெற்ற அனுபவத்தின் அடிப்படையில் இலண்டன் மாநகரிலிருந்து வெளிவந்த டெய்லி மிரர் என்னும் நாளிதழை முன் மாதிரியாகக் கொண்டு தினத்தந்தி நாளிதழைத் தொடங்கினார்.

உலகில் தனக்கென்று தனித்தன்மையான ஓரிடம் பிடித்துள்ள நாளிதழ்களுள் தினத்தந்தியும் ஒன்று. தினத்தந்தி நாளிதழ் பதிப்பு 1942 அக்டோபர் 15 ஆம் நாள் முதல் தந்தி என்ற பெயரில் நாளிதழ் வெளியிடப் பதிவு செய்யப்பட்டது. நவம்பர் முதல் மதுரைப் பதிப்பு வெளியிடப்பட்டது. உள்நாட்டுச் செய்திகள், வெளிநாட்டுச் செய்திகள் அனைத்தும் தந்தி மூலமாகவே பெறப்பட்டதால் இந்நாளிதழுக்குத் "தந்தி" எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

நாளிதழை, அன்றாடம் படிக்கின்ற பழக்கத்தை மக்களிடையே ஏற்படுத்திய நாளிதழ் தினத்தந்தி என்ற பெருமையைப் பெற்றுள்ளது. மக்களுக்குப் புரியும் வண்ணம் எளிமையாகவும், தெளிவாகவும் செய்திகளை வெளியிடுகிற நாளிதழ் எனவும் தினத்தந்தி புகழப்படுகிறது. எளிய மொழி நடையால் பல நாளிதழ்கள் மக்களிடையே நிலையான வரவேற்பைப் பெற்றுள்ளபோதிலும், தினத்தந்தி குறிப்பிடத்தக்க அளவுக்குப் பெரும்பான்மையான மக்கள் நாளும் விரும்பிப் படிக்கும் நாளேடு என்ற பெருமையைப் பெற்றுள்ளது.

தினத்தந்தி நாளிதழின் தலைப்புச் செய்திகள் மற்ற நாளிதழ்களின் தலைப்பைப் போல அல்லாமல் விரிவாகப் பெரிய எழுத்துக்களில் உள்ளதால் இவ்விதழின் அமைப்பு அனைவரையும் கவரக்கூடிய தன்மை உடையதாக உள்ளது.

## மொழி நடை

தினத்தந்தியில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்களின் எளிமை, பத்தி அமைக்கப்பட்டுள்ள விதம், செய்தியை வெளிப்படுத்துவதில்

சொற்களின் நிலை, புதுச்சொல்லாக்கம், ஆங்கிலச் சொற்களைத் தமிழாக்கம் செய்து பயன்படுத்தும் விதம், வாக்கிய நிலையில் செய்தியை வெளிப்படுத்தும் திறன், செய்தியை வெளிப்படுத்துவதில் கையாளப்பட்டுள்ள உத்திகள் போன்றவை பற்றித் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளது.

### கருத்துப் புலப்பாட்டுத் திறன்

ஒரு கருத்தைத் திறன்மிக்கதாக வெளிப்படுத்தும் திறத்தைக் கருத்துப் புலப்பாட்டுத் திறன் என்பர். இத்திறன், மொழிப்பயன்பாட்டின் ஓர் உத்தி முறையேயாகும். ஆசிரியரின் மொழி ஆளுமை, அனுபவம் இவற்றிற்குத் தக்கவாறு செய்தியை வெளிப்படுத்தும் திறன் மாறுபடும். மொழிப் பயன்பாட்டைப் பொறுத்துத்தான் செய்தியை வெளிப்படுத்தும் பாங்கு அமையும். ஆசிரியர்கூறும் செய்திக்கும் கருத்திற்கும், பயன்படுத்தும் மொழிக்குமிடையில் ஒருமைப்பாடு தேவை. இல்லாவிடில் செய்தியை வெளிப்படுத்தும் திறன் சீராக அமையாது. செய்திப் படைப்புகளின் வெற்றிக்குக் காரணமாய் அமைவது செய்தி வெளிப்பாட்டுத் திறனேயாகும்.

### கருத்துப் புலப்பாட்டில் மொழியின் பங்கு

நடை உத்தியும் மொழிக்கூறும் ஒன்றுக்கொன்று இணைந்து செயல்பட வேண்டும். ஓர் ஆசிரியர் பயன்படுத்தும் மொழியில், ஒலி முதல் உரைக்கோவை வரை இடம்பெறும் கூறு, அமைப்பு அதன் பயன்பாடு மற்றும் பொருண்மை வெளிப்பாடு இவற்றிற்கேற்பக் கருத்துப் புலப்பாட்டுத் தன்மை அமையும். மொழியமைப்பின் ஆற்றலுக்கு மொழிக்கூறுகள் மட்டும் ஆதிக்கம் தந்துவிடா. அவற்றோடு இணைந்து பங்கேற்கும் நடையுத்திகளும் முக்கிய இடத்தினைப் பெற்றுள்ளன.

ஒரு மொழியில் ஒரே தொடரமைப்பினைக் கொண்ட வாக்கியம் ஒன்றுக்கு மேற்பட்ட பொருண்மைகளைத் தருகின்றது. இதற்கு அடிப்படையாக அமைவது அவ்வாக்கியம் ஒலிக்கப்படும் முறை மற்றும் அதற்குச் சமுதாயம் கொடுக்கும் சமுதாயப் பொருள் போன்றவையாகும்.

(எ.கா.)

கொடிமரம் இல்லாததால் தைப்பூச உற்சவம் இல்லை

என்ற தனி வாக்கியம்,

1. கொடிமரம் இருந்திருந்தால் தைப்பூச உற்சவம் இருந்திருக்குமோ?

அல்லது

2. கொடிமரம் இல்லாததால் தைப்பூச உற்சவம் இல்லையா?

இங்கு, ஐயம் எழக்கூடிய வேறுபட்ட பொருளை வெளிப் படுத்தக் கூடிய சொற்களைப் பயன்படுத்தியிருந்தாலும் அதன் கருத்துப் புலப்பாடு தெளிவாக உள்ளது. மொழியமைப்பின் ஆற்றலுக்குச் சொல் தேர்வு அடிப்படையானது. சரியான சொல் அமையாத வரையில் எடுத்துச் சொல்லப்படும் கருத்தின் அல்லது பொருண்மையின் முக்கியத்துவம் தெளிவாக இருப்பதில்லை. (கருணாகரன், கி., ஜெயா, வ., 1993:112). எனவே, ஆற்றல்மிக்க கருவியாகச் செயல்படும் சொற்களைச் செம்மையான முறையில் பிழையின்றிப் பயன்படுத்துதல் வேண்டும். அப்போதுதான் கருத்துப் புலப்பாடு சிறந்த முறையில் அமையும். அதற்குக் கருத்துக் கோவையின் அமைவுதான் மிக இன்றியமையாததாக அமைகின்றது.

கருத்தாடல் தளத்தில் கோர்வையாக ஒரு கருத்தை எவ்வாறு வெளிப்படுத்துவது என்பதை அடையாளப்படுத்தும் முகமாக உரையில் தெளிவாக எடுத்துக் கூறும் பாங்கே உரைக் கருத்து அல்லது கருத்துக்கோவை எனலாம். உரையின் புற வடிவமைப்பு உரைத் தொடர்களின் மூலமும், உரைத் தொடர்களின் அமைப்பிலக்கணம் மூலமும் நிலை நாட்டப்படுகிறது.

கருத்தின் வளர்ச்சி கருத்தாடல் அமைப்பில் எவ்வாறு கொண்டு செல்லப்படுகிறது என்பதைக் குறித்து அகவடிவமைப்பு என்றும், இவ்வகையில் ஒரு கருத்து எவ்வாறு கருத்தாடல் தளத்திற்குள் எடுத்துச் செல்லப்படுகிறது என்பதைப் பொறுத்து உரையின் புறவடிவமைப்பு என்றும், தினத்தந்தி நாளிதழில் செய்திகளின் கருத்தளிப்பு எவ்வாறு அமைந்துள்ளது என்று ஆராயும்போது கீழ்க்காணும் தலைப்புகளை வரிசைப்படுத்தலாம்.

(எ.கா.)

*ஐ.நா. வுக்கான உதவியை* 19.09.05, ப.16
குறைக்க ஜப்பான் திட்டம்
*நிரந்தர உறுப்பினர் பதவி கிடைக்காததால்*

மேற்கூறப்பட்ட செய்தியில் செய்திக் கட்டமைப்பின் தன்மையை ஆராயும் போது சில முடிவுகளைக் கண்டறிய இயலும்.

ஐ.நா. வுக்கான உதவியைக் குறைக்க ஜப்பான் திட்டம் என்பது தலைப்பு. இவற்றில் ஐ.நா.வுக்கான உதவியைக் குறைப்பதற்கான காரணம் துணைத்தலைப்பில் இடம் பெற்றுள்ளது. ஆக தலைப்பிலேயே முழுச்செய்தியும் அடங்கிவிட்டது.

## பத்தி அமைப்பு

தினத்தந்தி நாளிதழில் செய்திகள் விரிவான வடிவத்திலும் ஒவ்வொரு பத்திக்கும் சிறுசிறு தலைப்பிட்டு அதிகமான விளக்கங்களுடன் இடம்பெறுகின்றன.

மேலும், ஓரிரு சொற்றொடர்களில் சிறுசிறுபத்தியும் விரிவான பெரிய பத்தியும் அமைந்து காணப்படுகின்றன. செய்திகளுக்குச் சிறுசிறு தலைப்பிட்டு அத்தலைப்பே விளக்கமாக அமையும் வகையில் செய்திகளை வெளியிடுகின்றது. ஒவ்வொரு பத்தியிலும் ஒரே சீராகக் கருத்தை வெளிப்படுத்துவதிலும் இணைப்பு வார்த்தைகளை இட்டு ஒவ்வொரு பத்திக்குமிடையில் தொடர்ச்சி சரியாக அமையுமாறு உள்ளது.

(எ.கா.)

*விடுபட்ட வீடுகளுக்கு கதவு எண்*
*எழுதும் பணி தொடங்கியது.* 02.02.2005, ப.18

கோவை. பிப். 2–கோவை மாநகரில் ஏற்கனவே கதவு எண் போடாமல் விடுபட்ட வீடுகளுக்கும், புதிதாக கட்டப்பட்டுள்ள வீடுகளுக்கும் கதவு எண் எழுதும் பணி நடைபெற்று வருகிறது.

*வாக்காளர் பட்டியல்*
*கணக்கு எடுக்கும் பணி*

புதிய வாக்காளர்கள் பெயர் சேர்த்தல், விடுபட்ட வாக்காளர்களின் பெயர் சேர்த்தல், வாக்காளர் பட்டியலில் திருத்தங்கள் செய்தல் போன்ற பணிகள் விரைவில் தொடங்கப்பட உள்ளன. ஏற்கனவே நாடாளுமன்ற தேர்தலின்போது வாக்காளர் பட்டியலில் இடம்பெற்ற பெயர்கள் சில உள்ளாட்சி இடைத்தேர்தல் நடைபெற்ற பகுதிகளில் விடுபட்டு இருப்பது தேர்தல் கமிஷனின் கவனத்திற்கு கொண்டு செல்லப்பட்டது.

எனவே, விடுபட்ட வாக்காளர்களின் பெயர்ப் பட்டியலை கதவு எண் அடிப்படையில் சரி பார்க்க வேண்டும் என்று உள்ளாட்சி அமைப்புகளுக்கு உத்தரவிடப்பட்டுள்ளது.

*கதவு எண் இல்லை*

ஆனால் வாக்காளர் பட்டியலின் அடிப்படையில் வீடுகளில் வரிசையாக கதவு எண் போடப்படாமல் விடுபட்டுள்ளது. சில வீடுகளில் கதவு எண் போடப்பட்டும் அழிந்திருந்தது. புது வீடுகளுக்கும் கதவு எண் எழுதப்படவில்லை.

*உத்தரவு*

ஏற்கனவே விடுபட்ட வீடுகளுக்கு வாக்காளர் பட்டியலின் அடிப்படையில் கதவு எண் எழுத கோவை மாநகராட்சி

கமிஷனர் அனில்மேஷ்ரம் உத்தரவிட்டார்.

அதன்படி கோவை மாநகர பகுதியில் கதவு எண் போடும் பணி நேற்றுமுதல் தொடங்கியது.

இந்தச் செய்தியைப் படிக்குமுன்னே தலைப்புச் செய்தியைக் கொண்டு உள்ளடக்கச் செய்தியை எளிதில் இனங்கண்டு கொள்ள முடிகிறது.

**பேச்சுவழக்குச்சொற்கள்**

வாசகர்களின் நிலை மற்றும் செய்தியின் தன்மை இவற்றைப் பொறுத்துத் தினத்தந்தி நாளிதழில் பேச்சுவழக்குச் சொற்கள் ஆங்காங்கே பயன்படுத்தப்படுகின்றன. இவை மக்களின் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தும் பேச்சு வழக்குச் சொற்களாகவே உள்ளன. தற்போது நல்ல தமிழ்நடையில் செய்திகள் வெளிவருகின்றன. மக்கள்மேடை என்ற பகுதியில் கீழ்க்காணும் பேச்சுவழக்குச் சொற்கள் கையாளப்பட்டுள்ளன. பெரும்பாலும் மற்ற செய்திகளில் பேச்சு வழக்குச் சொற்களைக் காணமுடிவதில்லை.

(எ.கா.) மக்கள் மேடை

*குடிநீர் குழாய் போடுங்க* 10.2.04,ப.16
*தாகம் தீருமுங்க*

*பஸ் - ஸ்டாப்புல நிக்க முடியலங்க*

*ஆமை வேகத்தில் பாலம் கட்டுறாங்க.* 14.2.04,ப.17

*மெதுவாக போங்க*
*பயமா இருக்கு*

*புத்தாண்டு தினத்தில் துப்பாக்கியால் சுட்டு மர்ம நபர் ரகளை* *02.01.2012,ப.16*

**மாற்று வழக்கு**

மாற்று வழக்குகள் இருவகையுடையன. ஒன்று ஓரிரு எழுத்து வேறுபாட்டால் உண்டாகும் மாற்று வழக்கு. மற்றொன்று முற்றிலும் வேறுபட்ட ஒரே பொருளைத் தரக்கூடிய சொற்களால் ஆன மாற்று வழக்கு என இருவகையான மாற்று வழக்குகள் காணப்படுகின்றன. தினத்தந்தி நாளிதழ் மொழிநடையில் மாற்று வழக்குகள் இடம் பெறுகின்றன. மக்களின் அன்றாட வழக்கில் பயன்படுத்தும் வழக்குச் சொற்களையும், தனித்தமிழையும் செய்தித் தொடர்புக்கு ஏற்ற நடையாக மொழிப்பயன்பாட்டில் பயன்படுத்துவதில் தினத்தந்தி முதலிடம் வகிக்கிறது.

ஓரிரு எழுத்து வேறுபாட்டால் நாளிதழ்களில் பயன்படுத்தப்படும் மாற்று வழக்குச் சொற்கள்:
(எ.கா.)

| | |
|---|---|
| கோயில் | கோவில் |
| டெபாசிட் | டிபாசிட் |
| தில்லி | டெல்லி |
| டெண்டுல்கர் | தெண்டுல்கர் |
| அகாதெமி | அகாடமி |
| வழக்கறிஞர் | வழக்குரைஞர் |

ஒரே பொருளைத் தரக்கூடிய மாற்று வழக்குச்சொற்கள்.

குடமுழுக்கு / கும்பாபிஷேகம்

சீரமைப்பு / பனரமைப்பு

போன்ற சொற்பயன்பாடும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

**நிலைபேறாக்கச் சொற்கள்**

ஒரு சொல் அன்றாட நடைமுறை வழக்கிலோ படைப்புகளிலோ மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பயன்பாட்டில் பரவலாக ஈடுபடுத்தப்படுவதையே நிலைபேறாக்கம் என்கிறோம்.

சொற்களை அறிமுகப்படுத்தி அச்சொற்கள் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு நிலைபேறாக்கமடையச் செய்துள்ளது தினத்தந்தி. தமிழ்மொழியில் மொழிமுதல், மொழியிறுதியில் மெய்யெழுத்துக்கள் வரக்கூடாது என்பது இலக்கண மரபு. ஆகவே, பிறமொழிச் சொற்களின் இறுதியில் 'உ' என்ற உகரத்தைச் சேர்த்து தமிழ்மொழி மரபிற்கேற்ப மாற்றிப் பயன்படுத்துகிறது.
(எ.கா.)

கோர்ட்டு, நோட்டீசு,

போலீசு, லைசென்சு,

ஐக்கோர்ட்டு, சூப்பிரண்டு,

போன்றன.

**மூலமொழி வடிவத்தைத் தமிழ்ப்படுத்தி எழுதும் முறை**

பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கும்போது தினத்தந்தி நாளிதழ் கீழ்க்கண்ட முறையில் கடன் சொற்களைத் தமிழ்ப்படுத்திப் பயன்படுத்துகின்றது.

### மொழிமுதலில் அ, இ, உ சேர்த்தல்

மொழி முதலில் வராது எனக் குறித்த மெய்கள் கடன் சொற்களில் மொழிமுதலில் வந்தால் அத்துடன் சொற்களைத் தமிழ்ப்படுத்த அ, இ, உ ஆகிய உயிர் எழுத்துக்களை மொழிமுதலில் சேர்த்து எழுதும் இப்பயன்பாடு தினத்தந்தி நாளிதழில் பெரிதும் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

(எ.கா.)

| | | |
|---|---|---|
| *ரங்கன்* | > | *அரங்கன்* |
| *ரகசியம்* | > | *இரகசியம்* |
| *ரோமம்* | > | *உரோமம்* |

போன்றன.

### எழுத்துப்பெயர்ப்பு

கடன் சொற்களில் உள்ள கிரந்த எழுத்துக்களைத் தமிழ் எழுத்துக்களால் பெயர்த்து எழுதுவதும் தமிழ்ப்படுத்தும் முறைகளுள் ஒன்றாகும். இவ்வாறு எழுத்துப் பெயர்ப்புச் செய்து பயன்படுத்துகிறது தினத்தந்தி நாளிதழ்.

(எ.கா.)

| | | |
|---|---|---|
| *ஹிந்தி* | – | *இந்தி* |
| *ஹோட்டல்* | – | *ஓட்டல்* |
| *ஹிந்து* | – | *இந்து* |
| ஹிமாலயா | – | இமாலயா |

### துடிப்புச் சொல்

தலைப்புகள் விறுவிறுப்பாக இருக்கத் துடிப்புள்ள சொற்களைப் பயன்படுத்த வேண்டும் என்கிறது தினத்தந்தி மொழிநடைக் கையேடு. தினத்தந்தி நாளிதழில் துடிப்புள்ள சொற்களைப் பயன்படுத்திச் செய்தி வெளியிடப்பட்டிருப்பதைக் காணலாம்.

(எ.கா.)

*..... ....... பேச்சால் சட்டசபையில் "கூச்சல் குழப்பம்"*

*கோவையில் பூட்டு ஏற்படுத்திய "பரபரப்பு"*

*அடுத்தடுத்து "அதிரடித் திருப்பங்கள்"*

*..... .... காதலி "திடீர் நிபந்தனை"*

*காதலா? கடமையா? முடிவு செய்யுங்கள்.*

**சொல்லாட்சி**

(எ.கா.)

*'தீப்புண்ணுக்கு இறையானவர்களை உடனடியாக மருத்துவமனைக்கு அப்புறப்படுத்துவது அவசியம்'*

*25.2.2012, ப.14*

தீப்புண் ஏற்பட்டவர்களை உடனடியாக மருத்துவமனைக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்த மருத்துவமனைக்கு அப்புறப்படுத்துவது அவசியம் என்று எழுதப்பட்டுள்ளது. இவ்வகையான சொல்லாட்சி தினத்தந்தி நாளிதழில் பயன்படுத்தப்பட்டுள்ளமை சுட்டிக்காட்டத்தக்க ஒன்றாகும்.

**பிறமொழிச் சொல்**

தினத்தந்தியில் பிறமொழிச் சொற்கள் பல நிலைகளில் பின்வருமாறு பயன்படுத்தப்படுகின்றன.

1. பிறமொழிச் சொற்களை அப்படியே எழுதுதல்

(எ.கா.)

*ராஜினாமா,*

*வசூல்,*

*ஜெயில்,*

*ஜாமீன்*

2. பிறமொழிச் சொல்லைத் தமிழ்மொழிச் சொல்லோடு சேர்த்து எழுதுதல்.

**ஆங்கிலம் + தமிழ்**

| | | | | |
|---|---|---|---|---|
| *மில்* | + | *தொழிலாளர்* | = | *மில்தொழிலாளர்* |
| *கேப்டன்* | + | *பதவி* | = | *கேப்டன்பதவி* |
| *சீனியர்* | + | *அணி* | = | *சீனியர்அணி* |

**தமிழ்ச்சொல்லோடு பிறமொழிச் சொல் சேர்த்து எழுதுதல்**

**தமிழ் + ஆங்கிலம்**

| | | | | |
|---|---|---|---|---|
| *தேர்தல்* | + | *கமிஷன்* | = | *தேர்தல் கமிஷன்* |
| *பங்கு* | + | *மார்கெட்* | = | *பங்கு மார்கெட்* |
| *விசாரணை* | + | *கமிஷன்* | = | *விசாரணைக் கமிஷன்* |
| *புதிய* | + | *பர்னிச்சர்* | = | *புதிய பர்னிச்சர்* |

**ஆங்கிலச் சொல்லை ஆங்கிலச் சொல்லோடு சேர்த்து எழுதுதல்**

**ஆங்கிலம் + ஆங்கிலம்**

| | | |
|---|---|---|
| *டிரைவிங்* | + *லைசென்ஸ்* | = *டிரைவிங்லைசென்ஸ்* |
| *காலேஜ்* | + *ஹவுஸ்* | = *காலேஜ் ஹவுஸ்* |
| *ஆயில்* | + *மில்* | = *ஆயில் மில்* |
| *பர்னிச்சர்* | + *ஷோரூம்* | = *பர்னிச்சர் ஷோரூம்* |
| *டெஸ்ட்* | + *கிரிக்கெட்* | = *டெஸ்ட் கிரிக்கெட்* |
| *கியூ* | + *கூப்பன்* | = *கியூகூப்பன்* |

**தமிழ்ச்சொல்லோடு வடமொழிச் சொல் சேர்த்து எழுதுதல்**

***தமிழ் + வடமொழி***

| | | |
|---|---|---|
| *திருவிளக்கு* | + *பூஜை* | = *திருவிளக்குப்பூஜை* |
| *திருமண* | + *கோஷ்டி* | = *திருமணக்கோஷ்டி* |

**வடமொழிச்சொல்லைத் தமிழ்ச்சொல்லுடன் சேர்த்து எழுதுதல்**

***வடமொழி தமிழ்***

| | | |
|---|---|---|
| *விஷம்* | + *காய்ச்சல்* | = *விஷக்காய்ச்சல்* |
| *கோஷ்டி* | + *மோதல்* | = *கோஷ்டிமோதல்* |

**எதிரிடைச் சொல்**

வாசகர்கள் ஆர்வத்தைத் தூண்ட எதிரிடைச் சொற்களைப் பயன்படுத்திச் செய்தியை வெளியிடுகின்றது.

(எ.கா.)

*இந்திய மோட்டார் வாகனத்துறை*
*விற்று முதல் "அதிகரிப்பு", லாப விகிதம் "குறைவு"*
*13.02.2005,ப.6*

*சுனாமியால் "பிரிக்கப்பட்ட" குழந்தை*
*பெற்றோருடன் "இணைகிறது"* *15.02.2005,ப.11*
*பிரிவோம் சந்திப்போம்* *04.02.2012,ப.4*

**அடைச்சொல்**

அடை என்பதற்கு ஆங்கிலத்தில் (attribute) என்பர். அடைமொழியானது ஒன்றின் பண்பைத் தெரிவிக்கும் பொருட்டுப் பெயருக்கு முன்போ அல்லது வினைக்கு முன்போ வந்து அதன் குணாதிசயங்களைத் தெரிவிக்கும் சொல். அடைப்பெயர்கள் தினத்தந்தி நாளிதழில் காணப்படுகின்றன. அடைச்சொல் ஆங்கிலத்திலும் பெயர்ச்சொல் தமிழிலும் கலந்து பயன்படுத்தும் போக்கு காணப்படுகின்றது. மற்ற நாளிதழ்களிலும் இதுபோன்ற அடைச் சொல் பயன்பாடு காணப்படுகின்றது.

(எ.கா.)

**ஆங்கிலம் + தமிழ்**

*சூப்பர் + அம்மா = சூப்பர் அம்மா*
*சுப்ரீம் + பிள்ளை = சுப்ரீம் பிள்ளை*
*ஸ்பெஷல் + நகைகள் = ஸ்பெஷல் நகைகள்*

### ஒலிக்குறிப்புச் சொல்

சொற்களை, ஒலியை முறையாக அமைப்பது அவற்றிற்கு புதுமையும், நுட்பமான உணர்ச்சி ஆற்றலை வழங்குவதற்கும், தருவதற்கும், புதிய குறிப்புப் பொருள்களை உணர்த்துவதற்கும் ஒலிக் குறிப்புச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன, (ஞானமூர்த்தி.தா.ஏ., 1990:215). இவ்வகை ஒலிக்குறிப்புச் சொற்கள் தினத்தந்தியில் அதிகம் கையாளப்படுவதில்லை. மிகவும் பரவலாகக் காணப்படுகின்றன.

(எ.கா.)

*திடீர் உடல் நலக் குறைவு* 28.8.2004,ப.13
*பிரதமர் .... ....*
*சென்னை வருகை ரத்து*

*திருப்பத்தூர் அருகே* *15.2.2005,ப.13*
*பள்ளிக்கூட வகுப்பறையில்*
*திடீர் தீ விபத்து*
*அதிர்ஷ்டவசமாக மாணவர்கள் உயிர் தப்பினார்கள்*

*டெஸ்ட் கிரிக்கெட்டுக்கு திடீர் முழுக்கு* *31.1.2008,ப2*

*இரத்த அழுத்தம் அதிகமானதால்*
*ஆஸ்பத்திரியில் திடீர் அனுமதி* *08.02.2011,ப.9*

*நடுவானில் சிங்கப்பூர் விமானத்தில் பெண்ணுக்கு*
*திடீர் மயக்கம் சென்னையில் அவசரமாக தரை இறங்கியது*
09.02.2012,ப.5

### ஒத்திசைவுச் சொல்

(எ.கா.)

குண்டும் குழியுமான சாலை 20.2.2012,ப.13

### ஒலிபெயர்ப்பு

ஆங்கில வார்த்தைகளை அதன் ஒலியுடன் அப்படியே தமிழில் எழுதுவது ஒலிபெயர்ப்புச் சொல் எனலாம். தினத்தந்தி நாளிதழில் பெரும்பாலான ஒலிபெயர்ப்புச் சொற்கள் இடம்பெறுகின்றன.

(எ.கா.)

*ஐக்கோர்ட்டு* – *High Court* - *உயர் நீதிமன்றம்*
*சுப்ரீம் கோர்ட்டு* – *Supreme Court* - *உச்ச நீதிமன்றம்*
*லைப் இன்சூரன்ஸ்*
*கார்பரேஷன்* – *Life Insurance Corporation*
*ஆயுள் காப்பீட்டுக் கழகம்*

போன்ற சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் இருக்க அதைப் பயன்படுவதைத் தவிர்த்து அப்படியே, ஆங்கில ஒலிபெயர்ப்புச் சொற்களாகப் பயன்படுத்தும் போக்கும் காணப்படுகிறது. இவை தவிர,

*பட்ஜெட்* – *நிதி ஒதுக்கீடு*
*டெஸ்ட்* – *போட்டி*
*சஸ்பெண்ட்* – *இடைநீக்கம்*
*ஸ்டிரைக்* – *வேலை செய்ய மறுத்தல்*
*பேங்க்* – *வங்கி*

போன்ற எண்ணற்ற ஒலிபெயர்ப்புச் சொற்கள் தினத்தந்தி நாளிதழில் கையாளப்பட்டுள்ளன.

**மொழிபெயர்ப்புச் சொற்கள்**

தினத்தந்தி நாளிதழில் மொழிபெயர்ப்புச் சொற்கள் அன்றாடம் இடம்பெறுவதைக் காண முடிகிறது. பிறமொழிச்சொற்களை மொழிபெயர்த்துத் தாய் மொழியில் எழுதும்போது தமிழ்ச் சொற்கள் புழக்கத்திற்கு வரவாய்ப்பு ஏற்படும்.

(எ.கா.)

*மதுரை மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கி*
*நிர்வாக இயக்குநர் உத்தரவுக்குத் தடை* 25.11.03,ப.7

*மத்திய கூட்டுறவு வங்கி (Central Co-operative Bank )*

*நிர்வாக இயக்குநர் (Managing Director)*

*வாடிக்கையாளர் குறை தீர்க்க*
*இந்தியன் வங்கியில் புதிய சேவைத்திட்டம்* 26.08.2004,ப.11

*இந்தியன் வங்கி (Indian Bank)*
*சேவைத் திட்டம் (Service Scheme)*
*நிர்வாக இயக்குநர் (Managing Director)*

இவைபோன்று சரியாக மொழிபெயர்த்துப் பயன்படுத்தப்பட்டுள்ள தமிழ் மொழிச் சொற்களும் இடம்பெறுகின்றன.

**மொழியாக்கச் சொற்கள்**

மொழியாக்கம் என்பது மூலமொழியிலிருந்து கடன் வாங்கப்பட்ட சொற்களை மையமாகக் கொண்டு புதிதாக ஒரு கருத்தைச்சொல்ல இலக்கு மொழியில் உருவாக்குவதேயாகும். மொழித்திறனின் செம்மைக்கு மொழியாக்கம் மிகவும் தேவையானது. மொழியாக்கம் மொழி வளர்ச்சிக்கு உதவுவதோடு அறிதிறன் மேம்பாட்டிற்கும் உதவுகிறது. மேலும் கருத்தின் எளிமைக்கும் புரிந்துகொள்வதற்கு ஏற்ற வகையிலும் மொழியாக்கம் அமைந்துள்ளது. அவை,

*பாராளுமன்றம்*
*ஆயுள் காப்பீட்டுத் திட்டம்*
*சேவைக் கட்டணம்*
*அகண்ட அலை வரிசைச் சேனல்*
*குடிமைப்பணி*

*போன்றன.*

**உருபன் மரபு மீறல்**

தினத்தந்தியின் மொழிநடைப் பயன்பாட்டில் உருபு மயக்கங்கள் காணப்படுகின்றன. அதாவது ஒரு குறிப்பிட்ட பொருளில் பயன்படுத்தப்பட வேண்டிய உருபு வேறொரு பொருளில், (பொருண்மையில்) கையாளப்பட்டிருக்கிறது. இதனால் வாக்கியத்தின் அமைப்பு மாறுவதில்லை. ஆகவே, இம்மாற்றம் புரிந்துகொள்ளும் தன்மையைக் கெடுப்பதில்லை. மாறாக இத்தகைய பயன்பாடு செய்திக்கு மேலும் வலுச்சேர்ப்பதாக அமைகின்றது. இத்தகைய காரணங்களால் நாளிதழ் ஆசிரியர்களும் உருபு மயக்கங்களைச் செய்தியில் விரும்பிப் பயன்படுத்துகின்றனர்.

(எ.கா.)

*கல்லூரி மாணவர்களே வேலை வேண்டுமா? 11.09.2004*
*கோவையில் 12-ந் தேதி நடக்கும் -*
*வேலை வாய்ப்புத் திருவிழாவுக்கு வாங்க.*

*கேரள ரெயில்கள் நிரம்பி வழிந்தன 13.09.2004,ப.4*

*முதல் வெற்றியை ருசிக்க ... அணி முயற்சி*
*10.01.2005,ப.8*

*ஆய்வு அறிக்கையில் ருசிகர தகவல் 31.1.2008,ப.8*

*ஓவியம் இவரது தாகம்! 18.2.2012,ப.12*

*..... பல்கலைக்கழகத்தில்*
*'அறிவுத் திருவிழா'! 18.2.2012,*

*இணைய தளம் ஒரு தகவல் அரங்கம் 20.2.2012,ப.III*

*நேரத்துக்கு அதிக முக்கியத்துவம்*

*மகிழ்ச்சி கரையும்* *20.2.2012,ப.*III

மேலே கூறப்பட்டுள்ள "ருசிக்க" என்னும் சொல் உணவுப் பொருள்களைச் சுவைத்தல் என்னும் பொருண்மையில் வழக்கத்தில் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. ஆனால், தினத்தந்தி மொழி நடையில் வெற்றியை ருசிக்க என்னும் பொருண்மையில் பயன்படுத்தப் பட்டுள்ளது.

மேலும், "திருவிழா" என்ற சொல் தமிழ்ச் சமுதாயத்தில் கோயில் உற்சவம் என்று பொருள்படும். அதை, வேலை வாய்ப்பு என்ற செய்தியை வெளிப்படுத்தப் பயன்படுத்தியுள்ளது. "நிரம்பி வழிந்தன" என்பதற்கு நீர் நிரம்பி வழிந்தது, அணை நிரம்பி வழிந்தது போன்ற வழக்கில் பயன்படுத்தப்படுவது இயல்பு.

ஆனால், இங்கு ரெயில்களில் மக்கள் கூட்டம் நிறைந்திருந்தது என்ற பொருளுக்கு "நிரம்பி வழிந்தன" என மாற்றிப் பயன்படுத்தும் போக்கும் காணப்படுகின்றது. இதுபோல் ருசிக்க, ருசிகரத் தகவல், தாகம், அறிவுத் திருவிழா, மகிழ்ச்சி கரையும் போன்ற சொல்லாட்சி பயன்படுத்தப்படுவதைக் காணமுடிகிறது.

**தொடர் நிலையில் கருத்துப்புலப்பாடு**

தொடரியல் என்பது சொற்களை இணைத்துச் சொற்றொடர்களையும், சொற்றொடர்களை இணைத்து வாக்கியங்களையும் விளக்கும் மொழியியற் பிரிவாகும்.

*தொடர்களில் காணப்படும் சொற்களின் நிலை (linear structure)*

*சொற்களின் இலக்கண இணக்க நிலை (co-occurrence)*

*சொற்களின் இலக்கணக் கிளை அமைப்பு வடிவம் (hierarchical structure)*

*சொற்றொடர்களில் பங்கு பெறுகின்ற பெரிய மற்றும் சிறிய இலக்கணக் கூறுகள் (grammatical categories and their sub categories )*

*சொற்றொடர்களில் காணப்படும் சொற்களின் இலக்கணப் பயன்பாடுகள் (grammatical function).*

*சொற்றொடர்களின் அமைப்பியல் மயக்கத் தன்மை (grammatical structural ambiguity)*

*ஒரே பொருளைக் குறிக்கின்ற பலவகைச் சொற்றொடர்களின் அமைப்பு வேற்றுமை (paraphrase relation/structural dissimilarity)*

*சொற்றொடர்களின் இலக்கண வழுத்தன்மை (ungrammaticality)*

போன்ற சொற்றொடர் தொடர்பான செய்திகள் தொடரியலில் விளக்கப்படுகின்றன. இத்தொடர் மற்றும் வாக்கிய அமைப்புகளை ஆராயும்போது ஆங்கிலம் மற்றும் தமிழ், வடமொழி போன்ற சொற்கள் கலந்த தொடர் அமைப்புகளே தினத்தந்தியில் அதிகம் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

மொழி அமைப்பில் தொடர்களும் வாக்கியங்களும் இலக்கண முறைப்படி செய்தியில் இடம்பெற்றால்தான் கருத்துக்களைத் தெளிவான முறையில் பரிமாற்றம் செய்ய இயலும். ஆனால், நாளிதழில் சில இடங்களில் முன்னுக்குப்பின் முரணாகவும் குறைவாக்கியமாகவும் இடம் பெற்றுள்ளதைக் காணலாம். வாக்கிய அமைப்பில் எழுவாய் இல்லாத வாக்கியங்களையும் காணமுடிகின்றது.

இதற்குக் காரணம் ஆங்கிலச் சொற்களை அதிகமாகப் பயன்படுத்தித் தொடர்களையும் வாக்கியங்களையும் உருவாக்குவதேயாகும். இதனால் பெருமளவில் பொருள் குழப்பம் ஏற்படாவிடினும் உயர்கல்வி படித்தவர்கள் மட்டுமே புரிந்துகொள்ளும் விதத்தில் அச்சொற்றொடர்கள் காணப்படுகின்றன. சாதாரணமாக, அதன் பொருளை உணர்ந்து கொள்வது கடினமாகும்.

ஒரு குறிப்பிட்ட கருத்துப் பற்றிய விளக்கம் கோர்வையாகக் கூறப்படும்போது எழுவாய் திரும்பத் திரும்பப் பயன்படுத்தப்பட்டும் சில இடங்களில் பதிலீடு பெயர்களும் இன்னும் சில இடங்களில் எழுவாய், பதிலீடு பெயர்கள் இல்லாமலும் வாக்கியம் அமைந்துள்ளது.

மேலும் ஆங்கிலச் சொற்களை வாக்கியங்களில் பயன்படுத்தும்போது மொழிபெயர்த்தும் கூட்டுச்சொற்களாக இருப்பின் மொழி பெயர்க்கப்படாமல் அப்படியே பயன்படுத்துகிற நிலையினையும் காணமுடிகிறது.

**வாக்கிய நிலையில் கருத்துப்புலப்பாடு**

பொருள் முடிவு பெற்றிருக்கும் சொற்றொடர் வாக்கியம் எனப்படும். தினத்தந்தி நாளிதழில் பல்வேறு வகையான வாக்கியங்கள் இடம்பெற்றுள்ளன.

**செய்தி வாக்கியம்**

செய்திக்கருவைத் தெளிவாகத் தெரிவிக்கும் வாக்கியம் செய்தி வாக்கியமாகும்.

(எ.கா.)

*தமிழக அரசு தொழில் நுட்பத் துறைக்கு*
*கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்துடன் வர்த்தக கல்வி ஒப்பந்தம்*
*...... ........ முன்னிலையில் கையெழுத்தானது*

*26.08.2004,ப.17*

*சட்டக்கல்லூரியில் சேர கவுன்சிலிங் தொடங்கியது.*
*29.08.2004,ப.20*

**வினா வாக்கியம்**

கருத்தைத் தெளிவாக உணர்த்துவதற்கு வினாவினை எழுப்பி அதன்பின் அதற்கேற்றவாறு விடையை விளக்கிக் கூறும்போது கருத்துப் புலப்பாடு எளிதில் கிடைக்கும் என்பதால் இதுபோன்ற வாக்கியங்களைப் பயன்படுத்திச் செய்தி வெளியிடப்படுகின்றன.

(எ.கா.)

*ஏற்றுமதியாளர்களுக்கு ஏமாற்றம் அளிக்குமா? 13.02.2005*

*சேலம் மேட்டூருக்கு மீண்டும்*
*ரெயில் போக்குவரத்து தொடங்குமா?*
*... .... பேட்டி 15.02.2005*

*காந்தி உயிர் பிரியும் போது 'ஹே ராம்' என்று சொன்னாரா?*
*31.1.2008,ப.7*

*ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ்., தேர்வு எழுத விரும்புகிறீர்களா?*
*06.02.2012,ப.2*

*பெர்சனாலிட்டியை வளர்த்துக் கொள்வது எப்படி?*
*06.02.2012,ப.3*

*உங்கள் பொன்னான பாதம் புண்ணாகலாமா?*

*25.2.2012,ப.II*

**எதிர்மறை வாக்கியம்**

உடன்பாட்டு வாக்கியத்திற்கு நேர்மாறானது எதிர்மறை வாக்கியம். இத்தகைய வாக்கியங்கள் பரவலாகக் காணப்படுகின்றன.

(எ.கா.)

*வருமான வரி விலக்கு வரம்பு*
*உயர்த்தப்படமாட்டாது*
*மத்திய பட்ஜெட் பற்றித் தகவல்* 15.02.2005,ப.4

**ஏவல் வாக்கியம்**

படிப்பவரின் உணர்வைத் தூண்டி ஏவும் தன்மையில் அமைந்திருக்கும். இவ்வாக்கியங்கள் தினத்தந்தி நாளிதழில் பரவலாகக் கையாளப்பட்டுள்ளன.

(எ.கா.)

*ஏழை எளிய மக்களுக்கு* 14.02.2005,ப.1
*உதவிப் பொருள் வழங்குங்கள்*

***வேண்டுகோள் வாக்கியம்***

*'அச்சுப்பணி தடை ஆணையை ரத்து செய்ய வேண்டும்*
*31.1.12,ப.3*

*"நாங்கள் எழுந்து நிற்கும்வரை கல்விச் செலவை அரசே ஏற்கவேண்டும்"*
*07.02.2012,ப.8*

*'மாணவர்களிடையே அறிவியல் வேட்கையை வளர்க்க பள்ளிக் கூடங்களில் அறிவியல் கண்காட்சி நடத்துங்கள். தொடக்க கல்வி இயக்குநர் வேண்டுகோள்'*
*27.02.2012,ப.18*

இதுபோன்ற பயன்பாடு தினமலர், தினமணி, நாளிதழ்களிலும் பயன்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது.

**கூற்று வாக்கியம்**

கூற்று, நேர்கூற்று, அயற்கூற்று என இருவகைப்படும். ஒருவர் நேரில் கூறியதை அப்படியே எழுதுவது நேர்கூற்று. ஒருவர் கூறியதை அப்படியே எழுதாமல் அவர் கூறியதாக எழுதுவது அயற்கூற்று. தினத்தந்தி நாளிதழில் நேர்கூற்று, அயற்கூற்று வாக்கியங்கள் இடம் பெறுகின்றன. அயற்கூற்றைவிட நேர்கூற்று வாக்கியங்களே அதிகமாக உள்ளன. இக்கூற்று மற்ற நாளிதழ்களிலும் இடம் பெறுகிறது.

**நேர் கூற்று**

(எ.கா.)

*வாழ்க்கையை அடையாளம் காட்டும் நூல் திருக்குறள் .... ... பேச்சு*
*16.2.2012,ப.9*

**அயற் கூற்று**

*..... ..... சுயநிதி என்ஜினியரிங்கல்லூரிகள் கூட்டமைப்பு சார்பில் மனு கொடுக்கப்பட்டது.*

*ஐ.டி.ஐ. போன்ற கல்வி நிறுவனங்களில் மாணவர்களை அரசு நிறுவனங்கள் நேரடியாக தேர்வு செய்யக்கூடாது. ஐக்கோர்ட் உத்தரவு.*
*22.2.2012,ப.7*

**உருவகத் தொடர்**

உவமானத்தையும் உவமேயத்தையும் வேற்றுமைப்படுத்தாமல் ஒற்றுமைப்படுத்திக்கூறும் முறை உருவகம் எனப்படும். தினத்தந்தி மொழிநடையில் உருவகப்படுத்தப்பட்ட செய்திகள் இடம் பெறுகின்றன.

(எ.கா.)

*"காதல் கடலில்" கண்ணதாசன் அலைகள்* 08.10.2004

*... கால்பந்து அணி "கோல்மழை"* 10.02.2005,ப.11

*வேதனையை வென்ற சாதனை அம்மாக்கள்...* 5.2.2012,ப.1

*... தீவிர ஓட்டு வேட்டை* 6.2.2012,ப.3

*... குண்டு மழை பொழிகிறது* 18.2.2012,ப.15

*... மக்கள் வெள்ளத்தில் பிரச்சார வேன்*
*மிதந்து வந்ததை படத்தில் காணலாம்* 15.3.2012,ப.4

**குறைத் தொடர்**

சில தொடர்கள் தன்னளவில் முழுப்பொருளைத் தராமல் அம்முழுப்பொருளைத்தர வேறொரு பொருத்தமான சொல் அச்சொற்றொடரில் தொக்கி நிற்கும். இத்தொடர் குறைத்தொடர் எனப்படும். இத்தகைய தொடர்களும் தினத்தந்தி நாளிதழில் இடம் பெறுகின்றன.

(எ.கா.)

*லாரிகள் வழக்கம் போல் ....* 09.01.2004,ப.4

*மன அழுத்தம் அதிகமானால்.* 08.05.2004

*டெல்லியில் நாளை ....* 28.11.2006,ப.3

*கசடறக் கற்க கற்பிக்க ....* 06.02.2012,ப.7

உயிரே உனக்காக .... 08.02.2012,ப.16

*படபடப்பா .... ?*

*நடக்கும்போது ...* 19.2.2012,ப.4

*இப்படியே போனால் ...* 19.2.2012,ப.4

*கூடுகள் சிதைந்த போது ....* 22.2.2012,ப.13

*இறை வார்த்தைக்குக் கீழ்ப்படியாவிட்டால்...!* 24.2.2012,ப.3

*தீக்காயம் ஏற்பட்டால் ...* 25.2.2012,ப.14

*போன்றன.* மேற்கூறபபட்ட வாக்கியாங்களைத் தவிரக் கூட்டு வாக்கியம், நிறை வாக்கியம், பிறமொழிக் கலப்பு வாக்கியம் ஆகியன இடம் பெறுகின்றன. மேற்கூறப்பட்ட வாக்கியங்கள் மற்ற தமிழ் முன்னணி நாளிதழ்களிலும் இடம்பெறுகின்றன.

**அடுக்குத் தொடர்**

ஒரு சொல் விரைவு, தெளிவு, அச்சம், உவமை முதலியவற்றின் காரணமாக இரண்டு அல்லது மூன்று முறை அடுக்கி வருவது

அடுக்குத்தொடர் எனப்படும். இதனைப் பிரித்தாலும் பொருள் தரும். இத்தகைய அடுக்குத் தொடர்ச்சொற்கள் தினத்தந்தி நாளிதழில் பரவலாகக் கையாளப்படுகின்றன.

(எ.கா.)

*தோண்டத் தோண்ட புதுப் புது தகவல்கள்* 26.08.2004,ப.9

*சிரித்து சிரித்து மற்றவர்களை சிறைப்படுத்த இந்த உடைந்த பற்களுக்கு நவீன சிகிச்சை மிக அவசியம்.* 29.08.2005,ப.20

**செயவெனு எச்சம்**

உங்கள் எடையை
குறைக்க!
அதிகரிக்க!!
கட்டுப்படுத்த!!! 25.2.2012,ப.6

போன்ற இவ்வகைப் பயன்பாடு தினத்தந்தி நாளிதழில் வாசகரைக் கவருவதற்காகக் கையாளப்பட்டுள்ளது.

**வினைமுற்றுத் தொடர்**

(எ.கா.) *வந்தார்கள் ...*
*வணங்கினார்கள் ...*
*மகிழ்ந்தார்கள் ...* *05.05.2012,ப.*IV

*விளையாடினார்கள் ...*
*விழுந்தார்கள் ....*
*வென்றார்கள் ...* *19.2.2012,ப.IV*

*முந்துங்கள் !*
*அதிரடி விற்பனை ...!*
*இரட்டை ஆதாயம் ... !*
*சர்வீஸ் மற்றும் எக்சேஞ்ச் திருவிழா...!* *27.2.2012,ப.20*

**மரபுத் தொடர்**

(எ.கா.)

*நள்ளிரவில் மர்ம நபர்கள் கைவரிசை ....* *22.2.2012,ப.5*

*கைவரிசை காட்டிய 2 கொள்ளையர்கள் கைது,*
*27.2.2012,ப.14*

**மொழித்தாவல் / கலப்புத் தொடர்**

ஆங்கிலத் தொடரும் தமிழ்த் தொடரும் கலந்த கலப்புத் தொடர் தினத்தந்தி நாளிதழில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

(எ.கா.)

புகைக்குக் 'குட்பை' சொன்னால்
லைப்டைம் கூடும் 10.01.2009,ப.11

சபரி மலை தரிசனத்திற்குக் 'கியூ கூப்பன்' முன்பதிவு
ஆன்லைன் மூலம் பதிவு செய்யலாம் 03.01.2012,ப.14

லோக்கலோ STD யோ 30 p/min.
29 க்கு ரீசார்ஜ் செய்யங்க வேலிடிட்டி 30 நாட்கள்
04.02.2012,ப.1

## இரட்டைக் கிளவி

அடுக்குத்தொடரைப் போன்றே இருசொற்கள் சேர்ந்துவந்து பொருள் தருவது இரட்டைக்கிளவியாகும். இதனைப் பிரித்தால் பொருள்தராது. இரு சொற்கள் சேர்ந்துவந்தால் மட்டுமே பொருள்தரும். தினத்தந்தி நாளிதழில் இரட்டைக்கிளவிப் பயன்பாடும் காணப்படுகின்றது.

(எ.கா.)

*'பளபளக்கும்' பிளாட்பாரம்* 06.11.2004,ப.3
*'மளமள' சரிவு*

*ஓட்டுப்பதிவு*
*மாலையில் மந்தமாகத் தொடங்கி விறுவிறுப்பாக முடிந்தது*
*09.02.2012,ப.3*

*கலகலப்பான அனுபவங்கள்* *18.2.2012,ப.15*

*கலகல திருமணம்*
*சலசலத்த மொய்ப்பணம்!* *19.2.2012,ப.3*

*கள்ளநோட்டுகளாக வந்ததாக பரபரப்பு* *22.2.2012,ப.7*

## செய்தி வெளியிடும் உத்தி

எந்த ஒரு செய்திப்படைப்பும் வெற்றிபெற வேண்டுமானால் படிக்கின்ற வாசகர்களைக் கவரக்கூடிய உத்திகள் சிறந்த முறையில் அப்படைப்பில் அமைந்திருக்க வேண்டும். அதன் அடிப்படையில் தினத்தந்தி நாளிதழை எடுத்துக்கொண்டு உற்று நோக்கும்போது, படித்தவர், படிக்காதவர், பெரியவர், சிறியவர் ஆகிய பாகுபாடின்றி அனைத்துத் தரப்பினருக்கும் ஏற்றவகையில் கருத்தைப் புலப்படுத்துவதில் பல உத்திகள் தினத்தந்தி நாளிதழில் கையாளப்பட்டுள்ளன.

**வரிவடிவமைப்பு உத்தி**

செய்தி எழுதும்போது வரிவடிவத்தை வழக்கத்திற்கு மாறாக வளைத்து எழுதுவது வரிவடிவ உத்தியாகும். இதுபோன்ற பயன்பாடு தினத்தந்தி நாளிதழில் காணப்படுகின்றது. வாசகர்களைக் கவரும் உத்தியாகக் கையாளப்படுகின்றது.

**இயைபு அணி உத்தி**

இயைபு அணி உத்தி தினத்தந்தி நாளிதழின் மொழிநடைப் பயன்பாட்டில் கையாளப்படுகின்றது. இது பெரும்பாலும் கவிதைகளில் மட்டுமே ஒரு காலத்தில் பயன்படுத்தப்பட்டது. அந்நிலைமாறி இன்று நாளிதழ்களிலும் பயன்படுத்தப்படுகின்றது. இவ்வியைபு பெரும்பாலும் தலைப்பு மற்றும் துணைத்தலைப்பு, ஈர்ப்புத்தொடர்கள் ஆகியவற்றை ஆற்றல்மிக்கதாக ஆக்குவதற்குப் பயன்படுத்தப்படுகிறது. இது வாசகர்களை ஈர்க்கும் தன்மையுடையதாகவும் அமைகின்றது.

(எ.கா.)

*திருடர்களுக்கு "காப்பு"*
*ஜனங்களுக்கு "பாதுகாப்பு"* *29.08.2004*

*இந்தியத் "திருமகள்"*
*இலங்கையின் "மருமகள்"* *13.02.2005,ப.31*

**சுவை கூட்டும் உத்தி**

"மனிதன் சிரிக்கும் ஜந்து" என்பார் அரிஸ்டாட்டில். நகைச்சுவையே மக்களின் கவலையைப் போக்கும் அருமருந்து. வாசகர்களது மனதை மகிழ்விக்கும் பொருட்டுச் சுவை உத்தியை நாள்தோறும் கையாண்டு செய்தி வெளியிடுகிறது தினத்தந்தி நாளிதழ்.

(எ.கா.)

*ஆண்டியார் சிரிப்பு*

*துணுக்குச் செய்திகள்*

இவற்றில் எழுத்து மூலம் செய்தியையும் கருத்துப்படங்களையும் இணைத்து வெளியிடுவதால் செய்திகள் அனைவரும் புரிந்து கொள்ளும்படி எளிமையாக விளங்குகிறது. மேலும், ஆற்றல்மிக்க கருத்துப் பரிமாற்றத்திற்கு மிகவும் துணைபுரிகின்றன.

**கதைப்படம் மூலம் கருத்தை வெளிப்படுத்தும் உத்தி**

இவ்வுத்தியைத் தினத்தந்தி நாளிதழ் குழந்தைகளுக்குப் பயன்படும் நோக்கில் கையாளுகின்றது. இவ்வுத்தியைக் கையாளுவதால்

குழந்தைகளுக்கும் நாளிதழைப் படிக்க ஆர்வம் ஏற்படுகிறது. இவற்றில் பயன்படுத்தப்படும் மொழி, பிறமொழிக் கலப்பின்றி உரையாடல் வடிவில் மொழிநடையில் தெளிவாக அமைகின்றது. இவ்வுத்தி தினத்தந்திக்கேயுரிய தனித்தன்மையாகும்.

(எ.கா.) *கன்னித்தீவு தொடர்கதை*

**அறிவுரை கூறும் உத்தி**

மனிதன் மனிதனாக வாழக் கருத்துக்கு முதலிடம் தந்து அறிவுறுத்தி, சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் உத்தியைக் கையாளுகின்றது. நல்ல தமிழில் தெளிவாக இச்செய்தி கூறப்பட்டுள்ளது. தினத்தந்தியில் மட்டுமே இதுபோன்ற உத்தி பயன்படுத்தப்படுகின்றது.

(எ.கா.)

*சாணக்கியன் சொல்*

*'தண்டனை தராத சட்டங்கள்*
*முட்கள் இல்லாத கடிகாரத்தை*
*போன்றது என்பான் புத்திசாலி'* *06.03.2012,ப.3*

இதுபோன்ற எதிர்மறைக் கருத்தை நேர்மறையான தத்துவமாக எடுத்துக் கூற முற்படும்போது அதன் இறுதியில் 'என்பான் புத்திசாலி' என்று முடிப்பதனால் அதனை எவரும் ஒதுக்காமல் ஏற்றுக் கொள்வார்கள் என்ற நிலையில் நாசுக்காக அறிவுரை வழங்குவது தினத்தந்தி நாளிதழுக்கே உரிய தனிச் சிறப்பு எனலாம்.

**வண்ணப் படங்களைக் கையாளும் உத்தி**

வண்ணப்படங்கள் வாசகர்களின் மனதை அச்செய்தியின்பால் உடனடியாக ஈர்ப்பதாய் இருக்கின்றது. செய்தியுடன் நிகழ்ச்சி நடந்த இடங்களை வண்ணப்படங்களுடன் வெளியிடுவதால் அதைப் படிக்கின்ற வாசகர்களுக்கு அந்நிகழ்ச்சியை நேரில் பார்த்த மன நிறைவைத் தருகின்றது.

மேலும், அச்செய்தி மனதில் நிலைத்து நிற்கும்படி செய்யும் ஆற்றலையும் பெற்றுள்ளது. ஆகவே, வாசகர்களை நாளிதழின்பால் ஈர்ப்பதற்கும் இவ்வுத்தி கையாளப்பட்டுள்ளது. மற்ற நாளிதழ்களிலும் வண்ணப்படங்களுடன் செய்திகள் இடம்பெறுகின்றன.

**தினத்தந்தி நாளிதழ் மொழிநடை**

தினத்தந்தி மொழிநடைப் பயன்பாட்டில் அதன் மொழி நடையைக் கூர்ந்து நோக்கும்போது அந்தந்தச் சமுதாயப் பிரிவினரின்

கல்வி மற்றும் பிற சமுதாயப் பாகுபாட்டு நிலைகளுக்கேற்ப மொழி பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. சில இடங்களில் பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கிப் பயன்படுத்தும்போது அவற்றை தமிழ்ப்படுத்திப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மொழி முதலில் வராது என வரையறுத்த மெய் எழுத்துக்கள் அயல்மொழிச் சொற்களில் மொழி முதலில் வந்தால், அச்சொற்களைத் தமிழ்ப்படுத்த அ, இ, உ ஆகிய உயிர் எழுத்துக்களை மொழி முதலில் சேர்த்துப் பயன்படுத்தும் போக்கும் காணப்படுகின்றது.

கடன் சொற்களில் உள்ள கிரந்த எழுத்துக்களைத் தமிழ் எழுத்துக்களால் பெயர்த்தும் எழுதப்பட்டுள்ளது. ஆய்த எழுத்தைத் (ஃ) தவிர்த்து எழுத வேண்டும் என்கிறது தினத்தந்தி நாளிதழ் கையேடு. காரணம், இவ்வெழுத்து தமிழில் பெரும்பான்மையாக இடம் பெறுவது இல்லை. இவ்வெழுத்து இடம்பெறும் சொற்களும் குறைந்தே காணப்படுகின்றன. இவ்வெழுத்து உச்சரிப்பதற்குக் கடினமாக இருக்கின்றது என்பதற்காகவும் தினத்தந்தி நாளிதழ் இவ்வெழுத்தைத் தவிர்த்து இவ்வெழுத்து இடம்பெறும் சொல்லுக்குப் பதிலாக வேறு சொல்லைப் பயன்படுத்தியும் எழுதுகின்றது.

# ஒப்பாய்வு

மொழியை அதன் நடையியற் கூறுகளில் நோக்கும்போது பலவகை ஒப்பீடுகளை மேற்கொள்ள வேண்டியது அவசியம். எடுத்துக்கொண்ட பொருளை அல்லது படைப்பை ஒத்த பொருளோடு அல்லது படைப்போடு ஒப்பிட்டுப் பார்ப்பது ஒப்பாய்வு எனலாம். ஒப்பீட்டு முறையே எந்தவகைக் கூறுகள் எந்தக் காலக் கட்டத்தில் முதன் முறையாகப் பயன்படுத்தப்பட்டன என்பதனை எடுத்துரைக்கவல்லன. இவ்வொப்பீடு காலத்தோடு காலம் என்று மட்டுமல்லாமல் பல்வேறு வகையிலும் நடைபெறும். பழைய இலக்கியத்தோடு தற்கால இலக்கியத்தை ஒப்பிடுதல், கவிதையோடு உரைநடையை ஒப்பிடுதல், படைப்பிலக்கியத்தோடு பிறவற்றை ஒப்பிடுதல், ஓர் இலக்கிய வகையோடு மற்றொரு வகையை ஒப்பிடுதல், ஓர் ஆசிரியரோடு மற்றொரு ஆசிரியரை ஒப்பிடுதல் என்ற வகைகளில் ஒப்பீடு செய்யலாம். இங்குத் தமிழ் நாளிதழ்களான தினமணி, தினமலர், தினத்தந்தி ஆகிய நாளிதழ்களின் மொழிநடை ஒப்பீடு செய்யப்பட்டுள்ளது. ஒரு நாளிதழை மற்றொரு நாளிதழோடு ஒப்பிடும் போது நடையியற் கூறுகளில் வேறுபாடுகள் வெளிப்படுகின்றன.

நடையியற் கூறுகளை மூன்று நிலைகளில் இனங்காண முடியும். மொழியியலை ஒட்டியே இவை விளக்கப்படுகின்றன. ஒலி நிலை, சொல் நிலை, தொடர் நிலை. இவை ஒவ்வொன்றிலும் காணப்படுகின்ற கூறுகள் மொழி மற்றும் ஆசிரியர் என்ற நிலையில் விளக்கப் படுகின்றன. ஆனால், இவ்விரண்டும் முற்றிலும் வேறுபட்டனவாகக் கோடிட்டுப் பிரித்தறிய முடியாதவை. மொழிநடையின் கூறாகக் கருதப்படுவது ஆசிரியரது நடைக்கூறாகவும், ஆசிரியரது கூறாகக் கருதப்படுவது மொழியின் கூறாகவும் இருக்கலாம்.

நடையியற் கூறுகளை ஒப்பீட்டு அடிப்படையிலேயே விளக்க முடியும். ஒரு குறிப்பிட்ட கூறு ஒரு குறிப்பிட்ட ஆசிரியருடையதாக எண்ணப்பட வேண்டுமானால் அக்கூறு பிறரிடம் காணப்படவில்லை என்பதும் விளக்கப்பட வேண்டும். அது போன்றே ஒரு குறிப்பிட்ட நாளிதழில் காணப்படும் கூறுகளும் பிற நாளிதழ்களின் செய்திகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டப்பட வேண்டும். மொழி

மாறுதலுக்குள்ளாவதைப் போன்றே நடையியற் கூறுகளும் மாறுதலுக்குள்ளாகின்றன. மொழி மீண்டும் பழைய நிலைக்குச் செல்வதில்லை. ஆனால் சில நடையியற் கூறுகளைக் காலப் போக்கில் மீண்டும் எடுத்தாள இயலும்.

ஒவ்வொரு ஆசிரியரின் மொழிப்பயன்பாட்டில் குறிப்பிட்ட சொற்கள், தொடர் அமைப்புகள், ஒலிக்கோலங்கள் ஆகியவற்றை திரும்பத் திரும்பப் பயன்படுத்திக் கொண்டிருப்பது உண்மையாகும். இக்கூறுகள் அடிக்கடி அவருடைய செய்திகளில் பயின்று வந்துகொண்டேயிருக்கும். அதேபோன்று சிலகூறுகள் பயின்று வராவிடினும் விருப்பக்கூறுகளாக விளங்கும். இவ்விருவகைக் கூறுகளால் ஆசிரியரை இனங்காண முடியும். இங்குத் தினமணி, தினமலர், தினத்தந்தி ஆகிய நாளிதழ்களின் மொழிநடை அவற்றின் பல்வேறு நிலைகளில் ஒப்பீடு செய்யப்பட்டுள்ளது.

### ஒலி

உலகின் பல்வேறு இடங்களில் நடக்கும் நிகழ்ச்சிகளோடு தொடர்புகொண்ட மனித இனம் பற்றிய செய்திகளைத் தருவதே நாளிதழ்களின் முக்கியப் பணிகளுள் ஒன்று. அவ்வாறு வெளியிடப்படும் செய்திகளில் வரும் இடப்பெயர், மனிதப் பெயர், பொருட்களின் பெயர் இவற்றை ஒலிபெயர்த்து எழுத வேண்டிய கட்டாயச் சூழ்நிலை நாளிதழ் ஆசிரியர்களுக்கு ஏற்படுகின்றது.

ஆகவே, தமிழ் இலக்கணத்திற்குப் புறம்பான தமிழ் நெடுங்கணக்கில் சேராத பிற ஒலிகளும் செய்திகளில் இடம் பெறுகின்றன. செய்திகளை மொழிபெயர்த்துச் செம்மையாக்கம் செய்து வெளியிடும் நாளிதழாசிரியர்களுக்கு அவ்வொலிகளைத் தமிழ் ஒலியின் கட்டுப்பாட்டிற்கு மாறாக எழுதவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிடுகின்றது. உள்நாட்டு, வெளிநாட்டுச் செய்திகளை மொழிபெயர்த்து வெளியிடும் தினமணி, தினமலர், தினத்தந்தி ஆகிய மூன்று நாளிதழ்களிலும் பொதுவாக இந்நிலை காணப்படுகின்றது.

வடமொழி, உருது, ஆங்கிலம் போன்ற பிற மொழிச் சொற்களின் பயன்பாட்டில் வரும் 'ஜ, ஸ, ஷ, ஹ ஆகிய ஒலிகளைக் குறிக்கத் தமிழ் மொழியில் குறியீடுகள் இல்லை. மரபிலக்கணங்கள் சொல் முதல், சொல் இடை, சொல் இறுதி ஆகிய மூன்று நிலைகளில் தமிழ் ஒலிகளின் வரன்முறைகள் அமைகின்றன. ஆனால், ஒலிபெயர்ப்பு ஒலிகளும், மொழிபெயர்ப்பு ஒலிகளும் இந்த வரன்முறைக்குள் அடங்குவதில்லை.

### கிரந்த எழுத்து

தமிழ் வரிவடிவங்களற்ற 'ஜ, ஸ, ஷ, ஹ ஆகிய ஒலிகள் நாளிதழ் மொழியில், தமிழ் ஒலிகள் போலவே பயன்படுத்தப்பட்டு

வருகின்றன. நாளிதழ்கள் இவ்வொலிகளைத் தமிழ் ஒலிகளாகவே ஏற்றுக் கொண்டுவிட்டன. இவை தமிழ் மெய்யொலிகளைப் போன்று இயங்கி உயிரொலியுடன் புணர்கின்றன. மாற்ற முடியாத ஒலியமைப்பினைக் கொண்ட பிறமொழிச் சொற்களை எழுதும்போது இவ்வொலிகளைச் சேர்த்து எழுதவேண்டிய கட்டாயச் சூழ்நிலை ஏற்படுகின்றது. இக்காரணத்தால் கிரந்த எழுத்துக்கள் தமிழில் புகுந்தன. இவ்வெழுத்துக்கள் இலக்கண நூலாசிரியர் நன்னூலாராலேயே ஏற்றுக் கொள்ளப்பட்டனவாகும் (மணிமாறன்.ப., 1999:19.)

பொதுவாக, மேற்கண்ட மூன்று நாளிதழ்களிலும் சொல் முதல், சொல் இடை, சொல் இறுதி என்ற நிலைகளிலும் கிரந்த ஒலிகளின் பயன்பாட்டைக் காணலாம்.

**சொல்முதல்**

'ஜ' கர சொல் முதல் ஒலிபெயர்ப்புச் சொற்கள்.

| *பிறமொழிச் சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *டெமாக்கிரடிக்*<br>*ஜனதா*<br>*ஜூனியர்*<br>*பெயில் (bail)* | *ஜனநாயகம்*<br>*ஜனதா*<br>*ஜூனியர்*<br>*ஜாமின்* | *ஜனநாயகம்*<br>*ஜனதா*<br>*ஜூனியர்*<br>*ஜாமின்* | *ஜனநாயகம்*<br>*ஜனதா*<br>*ஜூனியர்*<br>*ஜாமின்* |

இவ்வெடுத்துக்காட்டுகளில் உள்ள ஒலிபெயர்ப்புச் சொற்களில் 'ஜ' என்னும் ஒலி சொல் முதலில் வருகின்றது.

'ஸ்' என்ற ஒலி சொல்லின் முதலில் மெய்யுடன் இணைந்து சொல் முதல் நிலையில் பயன்படுத்தப்படுவதைக் காணலாம்.

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *ஸ்கோர்*<br>*ஸ்டாம்ப்* | *ஸ்கோர்*<br>*ஸ்டாம்ப்* | *ஸ்கோர்*<br>*ஸ்டாம்ப்* | *ஸ்கோர்*<br>*ஸ்டாம்ப்* |

'ஷ' கர ஒலி சொல் முதலில் ஒலி பெயர்ப்புச் சொல்

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *ஷஷ்டி* | *ஷஷ்டி* | *ஷஷ்டி* | *ஷஷ்டி* |

'ஹ'கர ஒலி சொல் முதலில் மொழிபெயர்ப்புச் சொற்கள்

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *ஹைக்கோர்ட்* | *ஹைக்கோர்ட* | *உச்சநீதிமன்றம்* | *ஐக்கோர்ட்* |
| *ஹோட்டல்* | *ஹோட்டல்* | *ஹோட்டல்* | *ஹோட்டல்* |

சொல்லிடையில் 'ஜ்' என்னும் கிரந்த மெய் 'ட்' எனும் மெய்யுடன் மயங்கி வருகிறது.

*ட்ஜ் – பட்ஜெட்*
- *பட்ஜெட்* *(தினமலர்)*
- *பட்ஜெட்* *(தினமணி)*
- *பட்ஜெட்* *(தினத்தந்தி)*

சொல்லிடையில் 'ஸ்' என்னும் கிரந்த மெய் 'ட்' என்னும் வல்லின (வல்லொலியுடன்) ஒலிகளுடன் மயங்கி வருகிறது.

*டெஸ்ட்*
- *டெஸ்ட்* *(தினமலர்)*
- *டெஸ்ட்* *(தினமணி)*
- *டெஸ்ட்டு* *(தினத்தந்தி)*

*போஸ்ட் மாஸ்டர்*
- *போஸ்ட் மாஸ்டர்* *(தினமலர்)*
- *போஸ்ட் மாஸ்டர்* *(தினமணி)*
- *போஸ்ட் மாஸ்டர்* *(தினத்தந்தி)*

சொல்லிடையில் 'ஸ்' எனும் கிரந்த மெய் 'ட' எனும் வல்லொலியுடன் மயங்கி வருகின்றது.

*பார்ட்டி*
- *கோஸ்டி* *(தினமலர்)*
- *கோஸ்டி* *(தினமணி)*
- *கோஸ்டி* *(தினத்தந்தி)*

சொல்லிடையில் 'ஷ' என்னும் கிரந்த மெய் 'ன்' என்னும் மூக்கொலியுடன் (Nasal Sound) மயங்கி வருகிறது.

*பென்ஷன்*
- *பென்ஷன்* *(தினமலர்)*
- *பென்ஷன்* *(தினமணி)*
- *பென்ஷன்* *(தினத்தந்தி)*

**சொல் இறுதியில் ஸ்**

ஸ் என்னும் மெய்யீற்றைக் கொண்டு முடியும் சொற்கள் நாளிதழ்களில் அதிகமாகக் காணப்படுகின்றன.

*(எ.கா.)* *பஸ்*

*போலீஸ்*

*போனஸ்*

*போலீஸ்* — *போலீஸ்* *(தினமலர்)*
— *போலீஸ்* *(தினமணி)*
— *போலீஸ்* *(தினத்தந்தி)*

**சொல் முதல், இறுதி மெய்ம் மயக்கம்**

மரபிலக்கண விதிப்படி தமிழில் மெய்ம் மயக்கங்கள் சொல் முதலில் வருதல்கூடாது. ஆனால் நாளிதழ் மொழியில் இவ்விதி பின்பற்றப்படவில்லை. கடன்சொற்களை நாளிதழ்கள் பயன்படுத்துவதால் சொல் முதல் மயக்கங்கள் தவிர்க்க முடியாதனவாகின்றன.

*ஸ்கோர்* — *ஸ்கோர்* *(தினமலர்)*
— *ஸ்கோர்* *(தினமணி)*
— *ஸ்கோர்* *(தினத்தந்தி)*

சொல் இறுதியில் மெய்ம் மயக்கங்கள் இடம்பெறக் கூடாது என்பது தமிழியல் நெறி. நாளிதழ்கள் இந்நெறியைப் பின்பற்றுவதில்லை. தினமணி, தினமலர், தினத்தந்தி ஆகிய மூன்று நாளிதழ்களிலும் 'ஸ' என்னும் மெய்யுடன் சேர்ந்து சொல்லிறுதியில் மெய் மயக்கங்கள் வருகின்றன. பிற கிரந்த மெய்கள் சொல் இறுதியில் மெய்மயக்கங்களாக வருவதில்லை.

***இன்னிங்ஸ், லைசென்ஸ்*** — ***இன்னிங்ஸ், லைசென்ஸ்*** *(தினமலர்)*
— ***இன்னிங்ஸ், லைசென்ஸ்*** *(தினமணி)*
— ***இன்னிங்ஸ், லைசென்ஸ்*** *(தினத்தந்தி)*

தமிழ் இலக்கண நெறிக்கு மாறாகச் சொல்லிறுதியில் வல்லின மெய்களும் கிரந்த எழுத்துக்களும் கடன் சொற்களில் இடம் பெறுவதைக் காணலாம்.

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *வாரண்ட்* | *வாரண்ட்* | *வாரண்ட்* | *வாரண்ட்* |
| *பேக்ஸ்* | *பேக்ஸ்* | *பேக்ஸ்* | *பேக்ஸ்* |
| *பேங்க்* | *வங்கி* | *பேங்க்* | *பேங்க்,வங்கி* |
| *கோர்ட்* | *கோர்ட்* | *கோர்ட்* | *கோர்ட்டு* |

சொல்லுக்கு முதலில் வரக்கூடாத ஆய்த எழுத்து (ஃ) சொல்லுக்கு முதலில் கடன்சொற்களில் பயன்படுத்தப்படுகின்றது.

ஃபைபர்ஸ் → ஃ பைபர்ஸ் (தினமலர்)
→ ஃபைபர்ஸ் (தினமணி)
→ ஃபைபர்ஸ் (தினத்தந்தி)

சொல் முதலில் தமிழ் மெய் ஒலியன்கள் கடன் சொற்களில் முதலில் வருகின்றன.

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| மிலிட்டரி<br>கேன்சல்<br>பிளட் | ராணுவம்<br>ரத்து<br>ரத்தம் | ராணுவம்<br>ரத்து<br>ரத்தம் | ராணுவம்<br>ரத்து<br>இரத்தம் |

நாளிதழ் ஆசிரியர்கள் வேற்று மொழிச் சொற்களைக் கடன் வாங்கிப் பயன்படுத்தும்போது எவ்வித மாற்றமும் இன்றிக்கடன் வாங்கிக் கொள்கின்றனர். அதாவது மூல மொழியில் எவ்வாறு ஒலிக்கப்படுகின்றனவோ அவ்வாறே கடன் வாங்கிக் கொள்கின்றனர்.

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| நோபல்<br>போர்டு<br>கலெக்டர்<br>டாக்டர் | நோபல்<br>போர்டு<br>கலெக்டர்<br>டாக்டர் | நோபல்<br>போர்டு<br>ஆட்சியர்<br>டாக்டர் | நோபல்<br>போர்டு<br>கலெக்டர்<br>டாக்டர் |

நாளிதழ் ஆசிரியர்கள் வேற்று மொழிச் சொற்களைப் பயன்படுத்தும் போது தமிழ் மொழி மரபிற்கு ஏற்ப மாற்றிப் பயன்படுத்துகின்றனர்.

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| போலீஸ்<br>பேங்க்<br>நக்சலைட்ஸ் | போலீசார்<br>பேங்க்<br>நக்சலைட்டுகள்,<br>நக்சல்கள் | போலீசார்<br>வங்கி<br>நக்சலைட்டுகள் | போலீசார்<br>பேங்க், வங்கி<br>நக்சலைட்டுகள் |

சில அயல்மொழிச் சொற்கள் இரண்டு அயல்மொழிச் சொற்களாலான புதுச் சொல்லாகக் காணப்படுகிறது.

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| கோல் கீப்பர்<br>டேபிள் டென்னிஸ்<br>கிரிக்கெட் டெஸ்ட்<br>இந்தியக்<br>கிரிக்கெட் | கோல் கீப்பர்<br>டேபிள் டென்னிஸ்<br>கிரிக்கெட் டெஸ்ட்<br>இந்தியக்<br>கிரிக்கெட் | கோல் கீப்பர்<br>டேபிள் டென்னிஸ்<br>கிரிக்கெட் டெஸ்ட்<br>இந்தியக்<br>கிரிக்கெட் | கோல் கீப்பர்<br>டேபிள் டென்னிஸ்<br>கிரிக்கெட் டெஸ்ட்<br>இந்தியக்<br>கிரிக்கெட் |

## ஒலிப்புடை, ஒலிப்பில்லா ஒலிகள்

தினமலர், தினமணி, தினத்தந்தி ஆகிய தமிழ் நாளிதழ்களில் ஏற்கெனவே உள்ள குறியீடுகளைக் கொண்டே ஒலிப்புடை (Voiced) ஒலிகளும் உரசொலிகளும் (Fricative sound) எழுதப்படுகின்றன. தமிழ் ஒலிப்பிலா (Voiceless) ஒலிகளுக்குரிய குறியீடு ஆங்கிலச் சொற்களில் வரும் ஒலிப்புடை ஒலிகளையும் உரசொலிகளையும், எழுதுகின்றனர். (சொற்களுக்குரிய உச்சரிப்புமுறை டேனியல் ஜோன்சின் உச்சரிப்பு அகராதியிலிருந்து எடுத்துப் பயன்படுத்தப்பட்டுள்ளது).

'k' என்னும் கடை நா கடையண்ண ஒலிப்பிலா வெடிப்பொலி 'g', 'h' என்னும் பிற ஒலிகளையும் குறித்து வருகின்றது. 'g', 'h' ஒலிப்புடை ஒலிகளாகும்.

*கவர்னர்* →
- *கவர்னர்* *(தினமலர்)*
- *ஆளுநர்* *(தினமணி)*
- *கவர்னர்* *(தினத்தந்தி)*

'ட' எனும் நாமடி (Retroflex) ஒலிப்பொலி வெடிப்பொலி 'd' எனும் ஒலிப்புடை ஒலியைக் குறித்து வருகிறது.

*டாக்டர்* →
- *டாக்டர்* *(தினமலர்)*
- *டாக்டர்* *(தினமணி)*
- *டாக்டர்* *(தினத்தந்தி)*

## சொல்முதல் வருகை மாற்றம்

தமிழ் நெடுங்கணக்கில் ட, ர, ல எனும் ஒலிகள் உள்ளன. இவை சொல் முதலில் வரா என்று மரபிலக்கணம் கூறுகின்றது. எனினும் காலப் போக்கில் இவ்வொலிகள் சொல்லுக்கு முதலில் வருகின்றன. இப்புது வழக்காற்றைத் தமிழ் நாளிதழ்கள் ஏற்றுக் கொண்டன எனலாம்.

'ட' கர சொல் முதல் சொற்கள்

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| டிக்கட்<br>டிரைவர்<br>டிடர்ஜெண்ட் | டிக்கட்<br>டிரைவர்<br>டிடர்ஜெண்ட் | டிக்கட்<br>டிரைவர்<br>டிடர்ஜெண்ட் | டிக்கட்<br>டிரைவர்<br>டிடர்ஜெண்ட் |

'ர' கர சொல்முதல் சொற்கள்

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| ரிசைன்<br>ரத்து | ராஜினாமா<br>ரத்து | ராஜினாமா<br>ரத்து | ராஜினாமா<br>ரத்து |

**சொல்லிடை வருகை மாற்றம்**

சொல் இடையில் மெய்கள் மயங்கும் போது தமிழியல்புக்கு ஏற்பச் சொல் மயக்கங்கள் வருகின்றன. பிறமொழிச் சொற்களில் உள்ள சில மெய்ம் மயக்கங்கள் தமிழ் மெய் மயக்கங்களிலிருந்து மாறி வருகின்றன. உதாரணமாக 'ட' 'க' என்ற மயக்கம் வருவது மரபு. இது பிறமொழிச் சொற்கள் சிலவற்றில் 'க' 'ட' என்று மாறி வருகின்றது.

இங்ஙனம் மெய்ம் மயக்கங்களில் இடம்பெறும் இரண்டு ஒலிகள் தமிழ் மரபுக்கு முரணாக முன்பின் மாறிவருவது 'முறை மாற்றம்' (transferred system) என்றுஅழைக்கப்படுகிறது (மணிமாறன், ப., 1999:33).

*கலெக்டர்* —
- *கலெக்டர்* *(தினமலர்)*
- *ஆட்சியர்* *(தினமணி)*
- *கலெக்டர்* *(தினத்தந்தி)*

**சொல் இறுதி மெய்ம் மயக்கங்கள்**

'சொல் முதலில் மெய்ம் மயக்கங்கள் இடம்பெறக் கூடாது என்பதனைப் போலவே சொல்லிறுதியிலும் மெய்ம் மயக்கங்கள் இடம் பெறக்கூடாது என்பது தமிழியல் நெறி'. ஆனால் நாளிதழ்களின் மொழிநடைப் பயன்பாட்டில் பிற மொழிச் சொற்களைத் தமிழ் மொழி அமைப்பிற்கேற்ப மொழி பெயர்த்து எழுதுகின்ற காரணத்தால் சொல்லுக்கு இறுதியில் மெய்ம் மயக்கங்கள் வருகின்றன.

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *டெஸ்ட்* | *டெஸ்ட்* | *டெஸ்ட்* | *டெஸ்ட்* |
| *பட்ஜெட்* | *பட்ஜெட்* | *பட்ஜெட்* | *பட்ஜெட்* |
| *கோர்ட்* | *கோர்ட்* | *கோர்ட்* | *கோர்டு* |
| *வாரண்ட்* | *வாரண்ட்* | *வாரண்ட்* | *வாரண்ட்* |
| *பேங்க்* | *பேங்க்* | *வங்கி* | *வங்கி, பேங்க்* |
| *பார்க்* | *பார்க்* | *பார்க்* | *பார்க்* |

**தமிழ்ப்படுத்தும் நெறிகள்**

தமிழ்ப்படுத்தும் முறைகளை இருவகையாகப் பிரிக்கலாம்.

1. சொல்லுக்கு முதலில் வரும் மெய்ம் மயக்கங்களைத் தவிர்த்து 'இ'கரத்தைக் கூட்டி எழுதுதல்
2. சொல்லுக்கு இறுதியில் வரும் மெய்ம் மயக்கங்களைத் தவிர்த்து 'உ' கரத்தைச் சேர்த்து எழுதுதல்.

## சொல் இறுதியில் "உ" கரம் சேர்த்தல்

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *நோட்டீஸ்* | *நோட்டீஸ்* | *நோட்டீஸ்* | *நோட்டீசு* |
| *கோர்ட்* | *கோர்ட்* | *கோர்ட்* | *கோர்டு* |
| *லைசென்ஸ்* | *லைசென்ஸ்* | *லைசென்ஸ்* | *லைசென்சு* |
| *ஹைகோர்ட்* | *ஐக்கோர்ட்டு* | *உயர் நீதிமன்றம்* | *ஐக்கோர்ட்டு* |
| *கம்யூனிஸ்ட்* | *கம்யூனிஸ்ட்* | *கம்யூனிஸ்ட்* | *கம்யூனிஸ்டு* |
| *சூப்பிரண்ட்* | *சூப்பிரண்ட்* | *சூப்பிரண்ட்* | *சூப்பிரண்டு* |

கிரந்த மெய்களைச் சேர்த்துக் கொள்வதாலும் மரபு மாற்றங்களாலும் தினமலர், தினமணி, தினத்தந்தி ஆகிய நாளிதழ்களில் சொற்களில் நடைபெறும் மொழிபெயர்ப்புச் சிக்கல்கள் குறைகின்றன. ஆனால் எழுத்துருவாக்கத்தை ஏற்றுக் கொள்வதாலும், தமிழ்ப்படுத்தும் முறைகளில் ஒழுங்கினைப் பேணுவதாலும் மொழிபெயர்ப்பு, ஒலி பெயர்ப்பு மேலும் எளிமையாகின்றன.

1. கிரந்த ஒலிகளான 'ஜ், ஸ், ஷ்'; ஆகியவை சொல் மூவிடங்களில் வருகின்றன.
2. 'ஜ' என்னும் கிரந்த மெய் சொல்லுக்கு முதலில் வருகின்றது.
3. 'ஷ'எனும் கிரந்த மெய் சொல்லுக்கு முதலில் வருகின்றது.
4. ஒலிப்புடை ஒலிகளும் ஒலிப்பிலா ஒலிகளும் ஒரே குறியீட்டால் குறிக்கப்படுகின்றன.
5. 'ட, ர, ல' எனும் மெய்கள் சொல்லுக்கு முதலில் வருகின்றன.
6. சொல் இடை மெய்ம் மயக்கத்தில் முறை மாற்றம் ஏற்படுகின்றது.
7. சொல் இறுதியில் 'க், ட், ப்' எனும் மெய்கள் வருகின்றன.
8. சொல்லுக்கு முதலில் 'இ' கரம் சேர்த்தும் சொல்லுக்கு இறுதியில் 'உ'கரம் சேர்த்தும் தமிழ்ப்படுத்தும் முறை காணப்படுகின்றது.
9. ஆங்கிலத்திலுள்ள அனைத்து ஒலிகளுக்கும் தமிழில் குறியீடு இல்லாத காரணத்தால் பல ஆங்கில ஒலிகளுக்கு ஒரே தமிழ் ஒலியும் பயன்படுத்தப்படுகின்றது.

## சொற்கள்

தினமலர், தினமணி, தினத்தந்தி ஆகிய நாளிதழ்களில் சொற்கள் பல நிலைகளில் மொழிபெயர்த்துப் பயன்படுத்தப் படுகின்றன.

## தொடரியல் அமைப்பு

தினமலரில் காணப்படும் வாக்கியங்களில் மொழிநடைப் பயன்பாட்டில் பலவகையான எழுவாய்ப் பெயர்த் தொடர்களும் வினைத்

தொடர்களும் வேற்றுமைத் தொடர்களும் காணப்படுகின்றன. மேலும் வாக்கியத்தில் சில விளிச் சொற்களும் உணர்ச்சி வெளியீட்டுச் சொற்களும் காணப்படுகின்றன.

**சொல் மொழிபெயர்ப்பின் வகைகள்**

1. சொல்லை நேரடியாக மொழிபெயர்த்தல் (Direct translation)
2. ஆங்கிலக் கூட்டுச் சொல்லில் ஒரு பகுதியை மட்டும் மொழிபெயர்த்தல் (Partial translation)
3. ஆற்றல்மிகு நிகரன்களாக மொழிபெயர்த்தல் (Dynamic translation)
4. ஆங்கிலச் சொல்லைப் பிறமொழிச் சொல்லால் மொழிபெயர்த்தல்.

**நேரடி மொழிபெயர்ப்பு**

ஆங்கிலத்திலுள்ள தனிவடிவச் சொற்கள், கூட்டு வடிவச் சொற்களைச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்து எழுதும் முறை நேரடி மொழிபெயர்ப்பு ஆகும்.

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *வேல்யூ ஆடட் டாக்ஸ்* | *வாட்வரி* | *மதிப்புக்கூட்டுவரி* | *வாட் வரி* |
| *சர்வீஸ் டாக்ஸ்* | *சேவைக் கட்டணம்* | *சேவைக்கட்டணம்* | *சேவைக் கட்டணம்* |
| *பவர் கட்* | *மின் வெட்டு* | *மின் வெட்டு* | *மின் வெட்டு* |
| *புட் பால்* | *கால் பந்து* | *கால் பந்து* | *கால் பந்து* |
| *பேஸ்கட் பால்* | *கூடைப்பந்து* | *கூடைப்பந்து* | *கூடைப்பந்து* |

**பகுதி மொழிபெயர்ப்பு**

மூல மொழியிலுள்ள கூட்டுச் சொற்களில் ஒரு பகுதியை மட்டும் மொழிபெயர்த்துப் பயன்படுத்துவது, மீதமுள்ள சொல்லை அப்படியே பயன்படுத்துவது இம்முறையைப் பகுதி மொழிபெயர்ப்பு எனக் கொள்ளலாம். இவை முன்பகுதியை மொழிபெயர்த்தல், பின்பகுதியை மொழிபெயர்த்தல் என இருவகைகளில் காணப்படுகின்றன.

**முன்பகுதி மொழிபெயர்த்தல்**

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| கரண்ட் சப்ளை | மின்சார சப்ளை | மின்சார சப்ளை | மின்சார சப்ளை |
| சதர்ன் ரயில்வே | தெற்கு ரயில்வே | தெற்கு ரயில்வே | தெற்கு ரயில்வே |
| எலக்ஷன் கமிஷன் | தேர்தல் கமிஷன் | தேர்தல் கமிஷன் | தேர்தல் கமிஷன் |
| வாரண்ட் | பிடிவாரண்ட் | பிடிவாரண்ட் | பிடிவாரண்ட் |

மேற்கூறப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகளில் முன்பகுதி மட்டும் மொழிபெயர்க்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**பின்பகுதி மொழிபெயர்த்தல்**

கூட்டு வடிவச் சொற்களில் பின்பகுதி மட்டும் மொழி பெயர்க்கப்பட்டு முன்பகுதியை அப்படியே எழுதும் வழக்கம் மூன்று நாளிதழ்களிலும் காணப்படுகின்றது.

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| போலீஸ் ஸ்டேஷன்<br>நோபல் ப்ரைஸ்<br>கிரிக்கெட் டீம்<br>பஸ்ஸ்டாப் | போலீஸ் நிலையம்<br>நோபல் பரிசு<br>கிரிக்கெட் அணி<br>பஸ்நிலையம் | போலீஸ் நிலையம்<br>நோபல் பரிசு<br>கிரிக்கெட் அணி<br>பஸ் நிலையம் | போலீஸ் நிலையம்<br>நோபல் பரிசு<br>கிரிக்கெட் அணி<br>பஸ் நிலையம் |

**ஆற்றல்மிகு நிகரன்களாக மொழிபெயர்த்தல்**

மொழிபெயர்ப்பில், மூலத்தின் பொருளுக்கு முதன்மையிடம் அளித்து அப்பொருளை ஆற்றலுடன் இலக்குமொழி வாசகரின் மனதில் பதியக்கூடிய நிகரன்களாக, மொழிபெயர்ப்பில் கையாளும்முறையே ஆற்றல்மிகு நிகரன்கள் எனலாம்.

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| ரிப்போர்டர்<br>எலக்ஷன் | நிருபர்<br>தேர்தல் | நிருபர்<br>தேர்தல் | நிருபர்<br>தேர்தல் |

**ஆங்கிலச் சொல்லை அப்படியே மொழிபெயர்த்தல்**

ஆங்கிலச் சொல்லை மொழிபெயர்க்காமல், ஆங்கிலத்தில் எப்படி உள்ளதோ அதை அப்படியே தமிழில் ஒலிபெயர்த்து எழுதும் முறை, மொழிபெயர்ப்பில் ஆங்கிலச் சொல்லை அப்படியே ஒலிபெயர்த்து எழுதும் முறையாகும். தினமணி, தினமலர், தினத்தந்தி நாளிதழ்களில் பல்வேறு துறைகள் சார்ந்த சொற்களை அப்படியே ஒலிபெயர்த்துப் பயன்படுத்தும் போக்கு காணப்படுகின்றது.

**கல்வித்துறை–சொற்கள்**

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *டிப்ளமா<br>டிகிரி<br>பிளஸ் டு* | *டிப்ளமா<br>டிகிரி<br>பிளஸ் டு* | *டிப்ளமா<br>டிகிரி<br>பிளஸ் டு* | *டிப்ளமா<br>டிகிரி<br>பிளஸ் டு* |

**வங்கித்துறை – சொற்கள்**

| *மூலமொழிச்சொல்* | *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|---|
| *பேங்க்<br>மேனேஜர்* | *பேங்க்<br>மேனேஜர்* | *பேங்க், வங்கி<br>மேனேஜர்* | *பேங்க்<br>மேனேஜர்* |

நீதித்துறை – சொற்கள்

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| கோர்ட் | கோர்ட் | நீதிமன்றம் | கோர்ட்டு |
| ஆஜர் | ஆஜர் | ஆஜர் | ஆஜர் |
| வாரண்ட் | வாரண்ட் | வாரண்ட் | வாரண்ட் |

போக்குவரத்துத்துறை – சொற்கள்

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| பஸ் | பஸ் | பஸ் | பஸ் |
| கார் | கார் | கார் | கார் |
| சைக்கிள் | சைக்கிள் | சைக்கிள் | சைக்கிள் |

விளையாட்டுத்துறை – சொற்கள்

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| கிரிக்கெட் | கிரிக்கெட் | கிரிக்கெட் | கிரிக்கெட் |
| கோல் | கோல் | கோல் | கோல் |
| விக்கெட் | விக்கெட் | விக்கெட் | விக்கெட் |
| கேப்டன் | கேப்டன் | கேப்டன் | கேப்டன் |

அரசுத்துறை – சொற்கள்

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| டாக்டர் | டாக்டர் | டாக்டர் | டாக்டர் |
| இன்ஜினியர் | இன்ஜினியர் | இன்ஜினியர் | இன்ஜினியர் |
| கலெக்டர் | கலெக்டர் | ஆட்சியர் | கலெக்டர் |
| கவர்னர் | கவர்னர் | ஆளுநர் | கவர்னர் |
| பிரசிடண்ட் | ஜனாதிபதி | குடியரசுத் தலைவர் | ஜனாதிபதி |

காவல்துறை – சொற்கள்

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| போலீஸ் | போலீஸ் | போலீஸ் | போலீசு |
| இன்ஸ்பெக்டர் | இன்ஸ்பெக்டர் | இன்ஸ்பெக்டர் | இன்ஸ்பெக்டர் |

அஞ்சல்துறை – சொற்கள்

| மூலமொழிச்சொல் | தினமலர் | தினமணி | தினத்தந்தி |
|---|---|---|---|
| ரெவின்யூ ஸ்டாம்ப் | ரெவின்யூ ஸ்டாம்ப் | ரெவின்யூ ஸ்டாம்ப் | ரெவின்யூ ஸ்டாம்ப் |
| போஸ்ட்மேன் | போஸ்ட்மேன் | போஸ்ட்மேன் | போஸ்ட்மேன் |

இவ் எடுத்துக்காட்டுகளில் உள்ள துறைச்சொற்கள் பெரும்பாலும் ஒலிபெயர்ப்புச் சொற்களாகவும் சில மொழிபெயர்ப்புச் சொற்களாகவும் காணப்படுகின்றன.

சொற்களை மொழிபெயர்த்துப் பயன்படுத்தும்போது நேரடி மொழிபெயர்ப்பில் தமிழ்ச்சொற்களோடு பிற மொழிச்சொற்கள் கலந்து பயன்படுகின்றன. கூட்டு வடிவச் சொற்களில் முன்பகுதி, பின்பகுதி எனத் தமிழில் மொழி பெயர்த்து எழுதப்படுகிறது. ஆற்றல்மிகு நிகரன்களில் சொல் நேர் பொருள் சாராத மொழி பெயர்ப்பாகவும், அதன் கருத்திற்கேற்பக் கருத்துப் பதிலீடாகவும் (substitute) விளங்குகிறது. இக்காரணங்களால் நாளிதழ்களில் பிறமொழிச் சொற்களின் கலப்பு அதிகமாகக் காணப்படுகின்றது.

**ஒலிப்பு முறை**

ஒலிப்பு முறை வேறுபாட்டால் கீழ்க்கண்ட சொற்கள் நாளிதழ்களில் இரண்டு விதமாகப் பயன்படுத்தப்படுகின்றன.

(எ.கா.)

| *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|
| *காஸ்* | *கேஸ்* | *கியாஸ், காஸ்* |
| *காஷியர்* | *கேஷியர்* | *காஷியர்* |

மேற்கூறிய கடன்சொற்களில் இடம்பெற்றுள்ள உயிர் ஒலி (æ) என்பதாகும். இவ்வொலி தமிழ் மொழிக்கு வேற்று ஒலியும் தமிழில் இல்லாத ஒலியும் ஆகும். ஆகவே, பத்திரிக்கையாளர்களில் ஒருவர் இவ்வொலியை 'ஏ' என்றும் வேறு ஒருவர் 'ஆ' என்றும் ஒலிப்பர்.

இவ்வாறு வேறு வேறுவிதமாக ஒலிக்கும் மேற்கண்ட சொற்களை ஒலிபெயர்ப்புச் செய்யும்போது அவரவர் ஒலிப்பு முறைக்கு ஏற்ப ஒலிபெயர்ப்புச் செய்கின்றனர். இதனால் நாழிதள்களில் மாற்று வழக்குகள் காணப்படுகின்றன.

ஓரிரு எழுத்து வேறுபாட்டால் உண்டாகும் மாற்று வழக்குகள்.

(எ.கா.)

| *தினமலர்* | *தினமணி* | *தினத்தந்தி* |
|---|---|---|
| *கோயில்* | *கோயில்* | *கோவில்* |
| *டிபாசிட்* | *டிபாசிட்* | *டிபாசிட்* |
| *டெல்லி* | *தில்லி* | *டெல்லி* |
| *டெண்டுல்கர்* | *டெண்டுல்கர்* | *தெண்டுல்கர்* |
| *அகாடமி* | *அகாதெமி* | *அகாடமி* |
| *வழக்கறிஞர்* | *வழக்கறிஞர்* | *வழக்குரைஞர்* |

இவைபோன்ற ஓரிரு எழுத்து வேறுபாட்டாலும் பத்திரிக்கைகளில் மாற்று வழக்குகள் காணப்படுகின்றன.

**முற்றிலும் வேறுபட்ட ஆனால் ஒரே பொருளைத் தரக்கூடிய சொற்களால் ஆன மாற்று வழக்குகள்:**

(எ.கா.) *சீரமைப்பு / புனரமைப்பு*

*குடமுழுக்கு / கும்பாபிஷேகம்*

*ஆளுநர் / கவர்னர்*

*பாண்டிச்சேரி / புதுச்சேரி*

*சாவு / பலி / இறப்பு*

போன்ற பயன்பாடும் மாற்று வழக்கிற்குக் காரணம் ஆகின்றது.

**தமிழாக்கம்**

சில கடன்சொற்களில் இடம்பெற்றுள்ள 'ஹ' என்னும் கிரந்த எழுத்தை நீக்கிப் பயன்படுத்துவதும் ஒருவகைத் தமிழ்ப்படுத்துதல் முறையேயாகும். தினத்தந்தி ஒரு சில இடங்களில் இம்முறையைப் பின்பற்றுகிறது. மற்ற நாளிதழ்கள் இம்முறையைப் பின்பற்றாது கடன்சொற்களை அப்படியே எழுதுகின்றன.

(எ.கா.)

| | | |
|---|---|---|
| *ஹைக்கோர்ட்* | > | *ஐக்கோர்ட்* |
| *ஹோட்டல்* | > | *ஓட்டல்* |
| *ஹோமியோபதி* | > | *ஓமியோபதி* |
| *ஹிமாலயா* | > | *இமாலயா* |

**மொழிபெயர்ப்பு**

மாற்று வழக்கிற்கு மொழிபெயர்ப்பும் ஒரு காரணமாகும். மொழிபெயர்ப்பு இரண்டு விதமாகும். ஒன்று கடன்சொல்லை நேரடியாக மொழிபெயர்த்தல், மற்றொன்று கடன்சொல்லிற்கேற்ற புதுச்சொல்லை உருவாக்குதல். தமிழ்மொழி மீதுள்ள பற்றின் காரணமாகத் தினமணி நாளிதழில் கடன் சொல்லிற்கேற்ற புதிய சொல்லை உருவாக்கிப் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

(எ.க.)

*ரிமோட் கண்ட்ரோல் – தொலை அழுக்கி*

மேலும் கடன்சொல்லின் பொருளுக்கேற்பப் புதுச்சொற்களை உருவாக்குதல், கடன்சொற்களையும் புதுச்சொற்களையும் பயன்படுத்துவதால் நாளிதழ்களில் மாற்று வழக்குகள் காணப்படுகின்றன.

### நாளிதழ்களில் பேச்சுமொழிப் பயன்பாடு

தினமணி, தினத்தந்தி நாளிதழ்கள் பேச்சு மொழியை அதிகம் பயன்படுத்துவதில்லை. செய்தியின் தன்மைக்கு ஏற்ப ஓரிரு இடங்களில் பேச்சு மொழியைக் கையாள்கின்றன. ஆனால், தினமலர் நாளிதழ் அதிகமான பேச்சு வழக்குச் சொற்களையும் ஓரிரு இடங்களில் பண்பற்ற (கொச்சை) மொழியையும் பயன்படுத்துகின்றது.

### நாளிதழ்களில் தலைப்புச் செய்தி அமைப்பு

தினமலர் நாளிதழில் ஒரே ஒரு சொல்லை மட்டும் கொண்டு தலைப்பு அமைக்கப்படுகின்றது. அது பெயர்ச்சொல்லாகவோ, வினைச் சொல்லாகவோ அமைந்துள்ளது. வியப்புக்குறியிட்டு அத்தலைப்பு அமைந்துள்ளது. தற்போது அத்தகைய பயன்பாடு காணப்படவில்லை. மேலும், தினமலர் நாளிதழில் முதல் பக்கத்தில் செய்தியை முழுவதும் கொடுக்க இடம் போதாதபோது இரண்டாவது முதல் பக்கம் (செகண்ட் பிரண்ட் பேஜ்) எனத் தலைப்பிட்டும் எஞ்சிய செய்திகள் எட்டாவது பக்கத்திலும் கொடுக்கப்பட்டன. அத்தகைய பயன்பாடு தற்போது காணப்படவில்லை.

தினத்தந்தி நாளிதழின் தலைப்புச் செய்திகள் அளவானதாக இல்லாமல் பேனர் தலைப்பாக அமைக்கப்பட்டுள்ளன. தலைப்புச் செய்தியிலேயே முழுச் செய்தியையும் விளக்குவது போன்று தெளிவாகவும், விளக்கமாகவும் செய்தி அமைக்கப்பட்டுள்ளது.

### கருத்துப்படம், கேலிச்சித்திரம்

கருத்துப்படமும் கேலிச்சித்திரமும் அரசியல் மற்றும் சமுதாய நிகழ்ச்சிகளைப் படங்களாக வரைந்து, ஒரு சில வரிகளில் கருத்தையும் விளக்கி மக்களைச் சிரிக்கவும் சிந்திக்கவும் வைக்கின்றன. தினத்தந்தி நாளிதழில் கருத்துப்படமோ கேலிச்சித்திரமோ இடம்பெறுவதில்லை.

கருத்துப்படங்களை வெளியிடும் முறையின் அடிப்படையில் சொல் சார்ந்த கருத்துப்படம், சொல் சாராத கருத்துப்படம் என இரு வகையாகப் பிரிக்கலாம். செய்தியை எளிமையாக விளக்குவதற்கும், ஆற்றல்மிக்க கருத்துப் பரிமாற்றமாக விளங்குவதற்கும் சொல் சார்ந்த கருத்துப்படங்கள் பயன்படுத்தப்படுகின்றன. மாறாக, சொல்சாராக் கருத்துப்படம் அன்றைய சூழலுக்கேற்ப மாறுபடலாம். தினமலரில் சொல் சார்ந்த கருத்துப் படங்களே அதிகமாக வெளியிடப்படுகின்றன.

கருத்துப்படத் தொடரில் அதே பாத்திரம்தான் மாறாமல் ஒவ்வொரு இதழிலும் வெளிவந்து கொண்டிருக்கும். இவற்றில் பலவித வட்டார மொழி நடையையும், பேச்சு வழக்கு மற்றும் பிறமொழிச்

சொற்கள் கலந்த நடையில் செய்திகள் காணப்படும். இச்செய்தி சமுதாய விழிப்புணர்வை மக்களுக்கு ஊட்டக் கூடியதாக அமைந்திருக்கிறது. இப்பகுதி தினமலருக்கே உரிய தனிச்சிறப்பாகும். வாசகர் கருத்துக்களை வெளியிட 'இது உங்கள் இடம்' என்னும் பகுதி தினமலர் நாளிதழில் இடம்பெறுகின்றது.

**நாளிதழ்களில் சிறப்புச் செய்திகள்**

தினமலர் பயன்படுத்தியுள்ள தொடர்களில் காணப்படும் சொற்களின் வரிசை நிலை (lineal structure), சொற்களின் இணக்க நிலை (co-occurrence), சொற்றொடர்களின் இலக்கணக் கிளை அமைப்பு வடிவம் (hierarchial structure), சொற்றொடர்களில் பங்குபெறும் பெரிய மற்றும் சிறிய இலக்கணக் கூறுகள் (grammatical categories and their sub-categories), சொற்றொடர்களில் காணப்படும் சொற்களின் இலக்கணப் பயன்பாடுகள், சொற்றொடரின் அமைப்பியல் மயக்கம் (structural ambiguity) போன்ற பல வகையான சொற்றொடர் தொடர்பான செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

கருத்துச் சொல்ல வாங்க என்ற பகுதி தினமலர் நாளிதழில் மட்டுமே இடம்பெறுகின்றது. இப்பகுதியில் அரசியல் செய்திகளைப் பற்றியோ, சமுதாய நிகழ்ச்சிகளைப் பற்றியோ கேள்விகளைக் கேட்டு அவற்றிற்கு மக்களின் கருத்துக் கணிப்பைப் பெற்றுத் துல்லியமாக வெளியிடுகிறது இந்நாளிதழ். இப்பகுதி தினமலர் நாளிதழில் மட்டுமே இடம்பெறுகின்றது.

டீக்கடை பெஞ்சு என்ற செய்தி தினமலர் நாளிதழில் நாள்தோறும் வெளிவருகிற பகுதியாகும். இத்தலைப்பு கலப்புத் தொடரில் அமைந்துள்ளது. "டீக்கடை பெஞ்ச்" என்னும் பகுதியில் ஒரு குறிப்பிட்ட செய்தியைத் தொடர்ச்சியாக ஒவ்வொரு நாளும் இடம் பெறச்செய்து பேச்சுமொழிச் சொற்களால் ஒரு கருத்தை சமுதாயத்திற்கு எடுத்துக் கூறுகிறது.

இப்பகுதியில் இந்து, கிறித்துவர், இசுலாமியர் ஆகிய மதத்தைச் சார்ந்த பெரியசாமி அண்ணாச்சி, அக்பர் பாய், குப்பண்ணா, அந்தோணிசாமி ஆகியோர் பங்குபெறுவதாக அமைத்து, நான்கு பேரும் டீக்கடை பெஞ்சில் அமர்ந்து ஒவ்வொரு நாளும் நாட்டில் நடக்கக்கூடிய முக்கிய அரசியல், செய்திகள், சமூகச் சிக்கல்கள் குறித்து உரையாடுவது போன்று கருத்துக்களை வெளிப்படுத்த முனைவதால் சமூக மதநல்லிணக்கத்தை வலியுறுத்துவது வெளிப்படையாகிறது.

இதன் வாயிலாக, நம் நாடு பின்பற்றும் மதச்சார்பற்ற கொள்கையைத் தினமலர் நாளிதழ் நாளும் போற்றி வரவேற்று அதைப் பெரிதும் வலியுறுத்துகிறது என்று கூறினால் அது மிகையாகாது. இவ்வுரையாடல் பேச்சுமொழி மற்றும் பிறமொழிகளான ஆங்கிலம், வடமொழி மற்றும் அவரவர் வட்டாரப் பேச்சு வழக்கினைப் பயன்படுத்தி உரையாடுவது போன்று உள்ளது. ஆசிரியரின் வழக்குமொழித் தாக்கமும் இப்பகுதியில் ஆங்காங்கே காணப்படுவது இயல்பே.

மேலும், நாளிதழ் வெளியாகும் மாவட்ட மக்களின் குறைகளை வெளியிடத் தனிப்பகுதி உள்ளது. இப்பகுதியில் சிறுசிறு தலைப்பிட்டுச் செய்தி வெளியிடப்படுகிறது. அத்தலைப்புக்கள் முழுக்க முழுக்க மக்கள் அன்றாடம் பயன்படுத்தக் கூடிய பேச்சு மொழியிலேயே அமைந்துள்ளன.

**தினமணி நாளிதழ்**

தினமணி நாளிதழில் தலையங்கம் என்னும் பகுதி தினந்தோறும் தவறாமல் இடம்பெறுகின்றது. தலையங்கம் தலையங்கப் பொறுப்பு ஆசிரியரால் வெளியிடப்படுகின்றது. அரசியல் பிரச்சினைகளும், சமுதாயச் சீர்கேடுகளும் அரசினர் போக்கும் தலையங்கத்திற்குக் கருப்பொருள்களாவதுண்டு. முந்தைய நாள்களின் முதன்மைச் செய்திகளும் தலையங்கப் பொருள்கள் ஆவதும் உண்டு.

*"நிமிர்ந்த நன்னடை நேர் கொண்ட பார்வை*
*நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகள்"*

என்ற பாரதியாரின் கூற்றிற்கேற்பத் தினமணி நாளிதழின் தலையங்கம் அமைந்துள்ளது.

இதன் நோக்கம் ஆதரவு தெரிவித்தல், விமர்சனம் செய்தல், தன் கருத்திற்கு ஆதரவு திரட்டுதல், மகிழ்ச்சியூட்டுதல், உண்மையை வெளிக்கொணர்தல், செயலுக்குத் தூண்டுதல், ஊழல்களை எதிர்த்துப் போராடுதல் போன்ற பலவகை நோக்கங்களைக் கொண்டு தலையங்கம் எழுதப்படுகின்றது.

தலையங்கப் பகுதி சிக்கலை விவரிக்க ஏதுவாக அதனை விளக்குதல், அச்சிக்கலுக்கான அடிப்படைக் காரணத்தைச் சுட்டிக்காட்டி அதற்குத் தீர்வு காணுதல் என்ற மூன்று நிலைகளைக் கொண்டிருக்கிறது. முதலில் சிக்கலை மக்கள் முன்னிலையில் எடுத்துரைப்பதாகத் தலையங்கம் அமைந்திருக்கிறது. எந்தக் கருத்தை வலியுறுத்தி எழுதப்படுகிறது என்பதைத் தலையங்கத்தின் தொடக்க வரிகள் உணர்த்துகின்றன. அச்சிக்கலின் பின்புலத்திற்கான விளக்கம் பின்பு தரப்படுகிறது. இறுதியில் தீர்வுகளை எடுத்துச் சொல்லுமளவிற்குத்

தலையங்கம் எழுதப்படுகிறது. பொதுவாக, தலையங்கத்தில் பிறமொழிச் சொற்கள், பேச்சு வழக்குச் சொற்கள், வழக்குச் சொற்கள் போன்ற கலப்பு நடையில்லாத தனித்தமிழ் நடையில் இலக்கியச் சொற்களுடன் செய்திகளைத் தெளிவாக விளக்கமாக வெளியிடுகின்றது தினமணி நாளிதழ்.

நாளிதழின் ஒரு பகுதியைக் கட்டுரைக்காக ஒதுக்குகின்றது தினமணி நாளிதழ். சிறப்புக் கட்டுரைகளைப் பத்திரிக்கைத் துறைகளில் பணியாற்றுவோர் அல்லது சுதந்திரமாகச் செயற்படும் பத்திரிக்கையாளர்கள் எழுதுவார்கள். சில நேரங்களில் குறிப்பிட்ட துறையில் நிபுணராக இருப்பவர் சிறப்புக் கட்டுரையை எழுதுவார்.

பொதுக்கட்டுரை, சிறப்புக்கட்டுரை என்பதைச் சான்று கொண்டு விளக்கலாம். இந்தியாவின் பொருளாதாரப் பிரச்சினைகள் பற்றி எழுதுவது பொதுக்கட்டுரை. பொருளாதாரப் பிரச்சினைகளில் தொழில் துறை பற்றியோ, வேளாண்மை பற்றியோ எழுதுவது சிறப்புக் கட்டுரையாகலாம்.

**தினத்தந்தி நாளிதழ்**

தினத்தந்தி நாளிதழில் ‘மக்கள் மேடை’ என்னும் தலைப்பிட்டு மக்களின் குறைகள் வெளியாகின்றன. பெரும்பாலும் தினத்தந்தி நாளிதழ் இப்பகுதியில் மட்டுமே பேச்சு மொழியைக் கையாள்கிறது எனலாம். மக்கள் மேடை எனும் தலைப்பில் வரும் செய்திகளில் மட்டும் ஓரிரு இடங்களில் பேச்சு மொழியைத் தவிர்த்து முற்றிலும் எழுத்து மொழியிலேயே பிற மொழிக் கலப்பின்றிச் செய்திகள் வெளிவருகின்றன. மேலும் தினத்தந்தி நாளிதழிலும் தலையங்கம் வெளிவருகிறது. பிற மொழிக் கலப்பின்றித் தனித்தமிழில் தெளிவாகத் தலையங்கம் வெளிவருகிறது.

**நாளிதழ்களில் சுருக்கமுறைப் பயன்பாடு**

இடச்சுருக்கத்தைக் கருத்தில் கொண்டும் விரைவாகச் செய்தியைக் கூறி முடிப்பதற்கும் சொற்களைச் சுருக்கிப் பயன்படுத்துகின்றன நாளிதழ்கள். இதுபோன்ற பயன்பாடு மூன்று நாளிதழ்களிலும் காணப்படுகின்றது.

**பத்தி அமைப்பு**

வாசகர்கள் செய்திகளைப் படிக்கும்போது சோர்வடையாமல் இருக்கச்செய்திகளைச் சிறு சிறு பத்திகளாக வெளியிடுகின்றன நாளிதழ்கள். பத்திகள் பல வாக்கியங்களில் மட்டுமின்றி ஓரிரு வாக்கியங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. தினமலர் நாளிதழில் செய்திகள் பெரிய பெரிய பத்திகளாகப் பிரிக்கப்பட்டு, செய்தி

அமைக்கப்பட்டுள்ளது. தினமணி நாளிதழில் சிறு சிறு பத்திகளாகக் காணப்படுகின்றன. தினத்தந்தி நாளிதழின் ஒவ்வொரு பத்திக்கும் சிறு சிறு தலைப்பிட்டுச் செய்தி அமைக்கப்பட்டுள்ளது.

**கையாளப்பட்டுள்ள உத்தி**

நாளிதழ் ஆசிரியர்கள் தமது இதழ்கள் தனித்தன்மையுடன் விளங்கினால்தான், வாசகர்களிடம் செல்வாக்கைப் பெறமுடியும் என்ற அளவில் செய்திகளை எளிதாக மக்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக உத்திகளைப் பயன்படுத்துகின்றனர். அந்தவகையில் பெரும்பாலான மக்களின் எண்ணத்தைக் கவரக்கூடிய நாளிதழ்களே விற்பனையைக் கூட்டுவதோடு, நிலையான வாசகர் வட்டத்தையும் பெறுகின்றன.

அந்தவகையில் தமது கருத்துப் பரிமாற்றத்தை நிறைவுசெய்யப் பல்வேறு வகையான உத்திகளை நாளிதழ்கள் கையாளுகின்றன. இருப்பினும் தினமலர் மொழிநடைப் பயன்பாட்டில் மட்டுமே இவ்வுத்திகள் அதிகமாகக் கையாளப்பட்டுள்ளன. தினமணி, தினத்தந்தி நாளிதழ்களில் இவ்வுத்திகள் பரவலாகக் கையாளப்பட்டுள்ளன.

மொழிப்பயன்பாட்டுச் சூழல், நிலைபேறாக்கப் பயன்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப மேற்கொள்ளப்பட்டு, செயல்படுத்தப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. அதாவது, பத்திரிக்கை மொழியின் பயன்பாட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட நிலைபேறு வழக்குகள் இருக்கக் கூடிய சூழல் ஏற்பட்டு வருகிறது. மொழிப்பயன்பாட்டுக் களங்களின் விரிவாக்கத்திற்கு ஏற்ப அந்தந்தத் துறை சார்ந்த சொற்கள் உருவாக்கப்பட்டு, தன்னினமாக்கப்பட்டு (nativization), செயல்படுத்தப்பட்டு வருவதால் தமிழில் சொற்பெருக்கம் ஏற்படும் நிலையையும் அதன்வழி, தமிழ்ச் சொற்களஞ்சியத்தின் வளர்ச்சியையும் அறியலாம்.

மொழியின் கூறுகளில் அதிகமான மாற்றத்திற்கு உள்ளாகுபவை சொற்களே ஆகும். சொல்லாக்கத்தில் புது முறைகள் குறிப்பாக முன்னொட்டு, பின்னொட்டு, பிறமொழிச் சொல்லிணைப்பு முறை போன்றவை பயன்படுத்தப்படுகின்றன. நாளிதழ்களில் பயன்படுத்தப்படும் புதுமையாக்கத்தால் அவற்றின் மொழிநடையில் பல நிலைகளில் குறிப்பாக, சொல்லாட்சி தோன்றி வருவதைக் காணமுடிகிறது.

**தொடர் எளிமை**

தினமலர் நாளிதழில் தொடர் எளிமையும் ஓரளவு இடம்பெறுகிறது. வினைமுற்றுத் தொடருக்குப் பதிலாக வினைமுற்றுகளை மட்டும் பயன்படுத்துவதும் கூட்டுத் தொடருக்குப் பதிலாகப் பிற

தொடர்களைப் பயன்படுத்துவதும் தொடர் எளிமையாக்க முறையாகக் கொண்டுள்ளது. குறைத்தொடர், கூட்டுத்தொடர், தொழில் பெயராக்கத் தொடர் போன்றனவும் ஏராளமாகப் பயன்படுத்தப் படுகின்றன.

நாளிதழ் மொழிப்பயன்பாட்டில் எளிமையாக்கமும் விரிவாக்கமும் குறிப்பிடத்தக்க அளவில் பின்பற்றப்பட்டு வருவது புலனாகிறது. மேற்கண்ட நாளிதழ்களில் ஆங்கிலச் சொற்களின் பயன்பாடு சற்று அதிகமாகக் காணப்படுகின்றது.

பிறமொழிச் சொற்களைக் கையாளும்போது அவற்றினைத் தமிழாக்கம் செய்வதில் ஏற்படக்கூடிய காலதாமதத்தையும், அவ்வாறு முயன்று மொழிபெயர்த்தாலும் அதனை எளிதில் புரிந்துகொள்ளவியலாத புழக்கத்தில் இல்லாத சொற்களாக அமைகின்றன. எனவே, அச்சொற்கள் அப்படியே எழுதப்பட்டிருக்கலாம். அதாவது மூலமொழியில் அயல்மொழிச் சொற்கள் எவ்வாறு ஒலிக்கப்படுகின்றனவோ அவ்வாறே எழுதப்படுகின்றது. தமிழ்ச்சொற்களுக்கு நிகராக ஆங்கிலமொழிச் சொற்கள் கையாளப்படுகின்றன.

**தினமலர் நாளிதழ் மொழிநடை**

தினமலர் நாளிதழ் அதிகம் படிக்காத பாமரரும் செய்தியைப் படித்து அல்லது கேட்டுப் புரிந்துகொள்ளவேண்டும் என்பதற்காகப் பேச்சுமொழி, பிறமொழிச் சொற்கள் மற்றும் வட்டார வழக்குச் சொற்கள் பயன்படுத்தப்படுவதால் இலக்கண முறைப்படி செய்தி வாக்கியங்கள் அமைய வாய்ப்பில்லை. மேலும், தனித்தமிழ் நடையில் செய்தியை வெளியிட்டால் அச்செய்தியின் தன்மையை உணர்த்த இயலாமல் போகலாம்.

எனவே, மக்கள் அன்றாடம் பயன்படுத்தும் பேச்சுமொழியைக் கலந்து செய்தி வெளியிடும் பாங்கு புலப்படுகிறது. இவற்றோடல்லாமல் சில இடங்களில் பண்பற்ற மொழியும் பயன்படுத்தப்பட்டுள்ளது. பல இடங்களில் செய்தியின் உண்மைத் தன்மை மாறாமல் இருக்க வேண்டும் என்பதற்காகச் சொல், தொடர் ஆகிய மொழிக்கூறுகளில் இலக்கணமரபு மீறப்பட்டிருப்பதும் தெரியவருகிறது.

மேலும், தனித்தமிழ் நடையைப் பின்பற்றிச் செய்தி வெளியிட்டால் சமுதாயத்தை முழுமையாகப் படம்பிடித்துக் காட்ட முடியாது என்பதற்காக மக்கள் பயன்படுத்தும் பேச்சு மொழியை அதிகமாகப் பயன்படுத்துகிறது. மக்கள் வழக்கில் உள்ள வட்டார வழக்குச் சொற்கள், பிறமொழிச் சொற்கள், ஆங்கிலச் சொற்கள் அனைத்தும் கலந்த ஒரு கலப்பு மொழி நடையைப் பயன்படுத்துகிறது என்றால் மிகையாகாது.

சந்தி நீக்கம் எளிமையாக்கத்தின் ஒரு பிரிவாகக் கருதப்படுகின்றது. தினமலர் புணர்ச்சி நெறியைப் பின்பற்றாமல் சந்தி நீக்கி எழுதுவதால் படிப்பவர்கள் சொல்லின் பொருளை எளிமையாகவும் குழப்பமின்றியும் புரிந்துகொள்கிறார்கள் என்கிற காரணத்தால் சந்தி நீக்கிப் பயன்படுத்தப்படுகிறது.

இந்நாளிதழில் பயன்படுத்தப்படும் தலைப்பில் கையாண்டுள்ள உத்திகள், இலக்கண மரபு மீறல்கள், பொருண்மை மாறுபாடு, பழமொழி, உவமை, உருவகப் பயன்பாடு, பேச்சுமொழி மற்றும் அயல்மொழிச் சொற்கள், வேற்றுமை உருபுகள், எதுகை, மோனைப் பயன்பாடு, இரட்டைக்கிளவிப் பயன்பாடு, இயைபுச்சொற்கள், சுருக்கக் குறியீடு, புதுச் சொற்களின் பயன்பாடு, சொல் எளிமை, வாக்கிய எளிமை ஆகியன தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

## மொழிப்பயன்பாடும் நடையமைப்பும்

ஒரு குறிப்பிட்ட ஆசிரியரின் படைப்பில் அனைத்து நிலைகளிலும் காணப்படும் இத்தகைய வேறுபாடுகளை உற்று நோக்கி அவற்றின் நடையியல் தன்மையை விவரித்துக் கூறமுடியும். அந்தவகையில் தினமலர் நாளிதழ் மொழி அமைப்பில் பல்வேறு நிலைகளில் நடையியல் முக்கியத்துவமுடைய வேறுபாடுகளைக் கண்டறிந்து விளக்குகிறது.

தினமலர் மொழிநடையில் புதுமையாக்கம் (modernization) நிலைபேறாக்கம் (standardization), தன்னினமாக்கம் (nativization) ஆகியவற்றின் மூலம் செய்திகள் எளிய நடையிலும் விறுவிறுப்பான நடையிலும் விளக்கப்பட்டுள்ளன.

## தினமணி நாளிதழ் மொழிநடை

தினமணி நாளிதழ் மொழிப்பயன்பாட்டில் புதுப்புதுச் சொல்லாக்கமும் காணப்படுகின்றது. தலையங்கமும் கட்டுரையும் பிறமொழிக் கலப்பின்றி நல்ல தமிழ் இலக்கிய நடையில் விரிவாகவும் விளக்கமாகவும் எழுதப்பட்டுள்ளன. பல இடங்களில் ஒரே பொருளுக்குப் பல சொற்கள் சூழலுக்கு ஏற்றவாறு பயன்படுத்தப் படுகின்றன. புதுச்சொற்களை உருவாக்க முற்படுகிறது. இதுபோன்ற பயன்பாடு தினமணி நாளிதழில் மட்டுமே காணப்படுகின்றது.

## தினத்தந்தி நாளிதழ் மொழிநடை

தினத்தந்தி நாளிதழ் மொழிநடைப் பயன்பாட்டில் பேச்சுமொழிச் சொற்கள் அதிகம் கையாளப்படுவதில்லை. தற்போது ஓரளவுக்கு நல்ல தமிழ்நடையில் செய்திகள் வெளிவருகின்றன. அயல்மொழிச் சொற்களைப் பயன்படுத்தும் நிலையில் அவற்றைத் தமிழ்ப்படுத்திப் பயன்படுத்துகிறது.

குறிப்பாக, மெய்யெழுத்துக்கள் மொழி முதலிலோ இறுதியிலோ அயல்மொழிச் சொற்களில் வரும் பொழுது அவற்றை அ,இ,உ ஆகிய தமிழ் உயிர் எழுத்துக்களை இணைத்துத் தமிழ்ப்படுத்தி வெளியிடுகிறது. மேலும், அயல்மொழிச் சொற்களில் உள்ள கிரந்த எழுத்துக்களைத் தமிழ் எழுத்துக்களால் பெயர்த்தும் எழுதுகிறது. ஆய்த எழுத்தைத் தவிர்த்து அச்சொல்லுக்குப் பதிலாக வேறு சொல்லைப் பயன்படுத்தியும் எழுதுகிறது.

பொதுவாக நாளிதழ்கள் எளிமையாகச் செய்தியைக் கொடுக்க வேண்டுமென்ற நோக்கில் பேச்சு மொழிக்கும் எழுத்து மொழிக்கும் உள்ள இடைவெளியைக் குறைக்க முயல்வதாகக் கருதலாம். தமிழ் மொழியில் மொழிபெயர்ப்பதில் எழும் சிக்கலைத் தவிர்க்க ஆங்கிலம், சமஸ்கிருதம், இந்தி, உருது, பெர்சிய, அரபி மொழிச்சொற்களைப் பயன்படுத்திச் செய்தியை வெளியிடுகின்றன.

## மொழியமைப்பு

நாளிதழ்களின் மொழிநடைப் பயன்பாட்டில் வடமொழி எழுத்துக்களான ஜ, ஸ, ஷ, ஹ போன்றவற்றின் வருகைமுறையானது சொற்களின் முதல், இடை, இறுதி எனும் மூன்று இடங்களிலும் அமைந்து வருகிறது.

இலக்கணமுறைப்படி மொழிமுதல், மொழியிறுதியில் வரக்கூடாத எழுத்துக்கள் நாளிதழ்களின் மொழிப்பயன்பாட்டில் இடம்பெற்று வருவதைக் காணமுடிகிறது. பேச்சு வழக்கில் உள்ள உருபன்கள் இக்காலத் தமிழில் நிலைபேறு செய்யப்பட்டு எழுத்து வழக்கில் இயல்பாக இடம்பெற்றுக் கொண்டிருக்கின்றன என்பது தெரியவருகின்றது.

பிறமொழி வேர்ச் சொற்களுடன் தமிழ் உருபன்களும், தமிழ்வேர்ச் சொற்களுடன் பிறமொழி உருபன்களும் இடம்பெற்றுப் புதிய சொற்கள், சொல்லமைப்புகளை உருவாக்கி நாளிதழ்களில் பயன்படுத்தப்படுகின்றன. கருத்துச் சார்புடைய வாக்கியங்கள் பயன்பாட்டுத் தன்மைக்கு ஏற்ப விரிவடைந்துள்ளன. பலவகையான தொடர்கள் புதிய முறையில் அமைதல் தெரியவருகிறது.

## அயல்மொழிக் கலப்பு

தமிழில் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் இருந்த போதிலும் அவற்றைப் பயன்படுத்தாமல் ஆங்கிலச் சொற்களையே பயன்படுத்தும் போக்கு காணப்படுகின்றது. இதனால் தமிழ்மொழியின் சொற்களஞ்சியத்தில் பெரும் மாற்றம் ஏற்படும் வாய்ப்பு உள்ளது.

நாளிதழ் செய்தியில், தமிழ் மொழிக்கு அடுத்த நிலையில் ஆங்கில மொழிக் கலப்பு அதிகமாக இருக்குமளவிற்குச் செய்தியில் மொழிக்கலத்தலும் (code mixing), மொழித்தாவலும் (code switching) அதிகமாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஒலி அளவில், கருத்தளவில், தொடர் அளவில் என்று கலப்பு நிகழ்ந்து வருகிறது. கலப்புமொழி, மொழிக்கு வளர்ச்சியைத் தருவதாக அமைவது மொழிவளர்ச்சிக்கு வழிவகுக்கும். அவ்வாறு வளர்ச்சி தராத மொழிக்கலப்பு பயனற்றதாகிவிடும். இதனால் நல்ல பல தமிழ்ச் சொற்கள் வழக்கிழந்து போகவும் வாய்ப்பு உண்டு. ஒரு மொழியை அடையாளம் காண ஒவ்வொரு மொழிக்கும் தனியானதொரு மொழிக்கட்டமைப்பு உண்டு.

அயல்மொழிச் சொற்பயன்பாடு மொழி வல்லுநர்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டாலும் அதன் மொழிக் கட்டமைப்பு தமிழ் மொழி வளர்ச்சிக்கு இடையூறின்றி அமைதல் அவசியம். அந்தவகையில், அயல் மொழிச் சொற்களைப் பயன்படுத்துவதில் மேற்கண்ட மூன்று நாளிதழ்களையும் ஒரே தரத்தின் கீழக் கொண்டுவர முடியும். பொதுவாக, தமிழ் நாளிதழ்கள் முழுமையான கருத்துப் பரிமாற்றத்திற்குப் பல்வேறு உத்திகளைப் பயன்படுத்திச் செய்திகளை வெளியிடுகின்றன.

## நிறைவுரை

நாளிதழ்களின் மொழிநடை குறிப்பிடத்தக்க, வியத்தகு அளவுக்கு மொழிக்கு வளம்சேர்க்கிறது. இன்றைய மொழியின் உண்மை நிலையை மக்களிடம் அன்றாடம் புழக்கத்தில் உள்ள நாளிதழ்கள் வாயிலாக அறிந்துகொள்ளலாம்.

இலக்கியம், இலக்கணம், மொழியமைப்பு, சமுதாய மொழியியல், கோட்பாடு மற்றும் கிளைமொழி எனும் பல்வேறு தலைப்புகளில் நடைபெறும் நிகழ்வுகளை விவரிக்கத் தக்க வகையில் நாளிதழ்களில் எழுதப்படும் மொழிநடை, மொழிப்பயன்பாடு இவற்றை ஒருங்கிணைத்து விரிவாக விளக்கப்படவேண்டியது அவசியம். நாளிதழ்களில் பயன்படுத்தப்படும் மொழிபெயர்ப்பு, அதன் மொழிநடை, அயல்மொழிக் கலப்புப்பயன்பாடு இவை தொடர்பாகச் சில நூல்களே வெளிவந்துள்ளன. மொழிப் பயன்பாட்டில் உள்ள சிக்கலுக்குத் தீர்வு காண்பதில் நாளிதழ் ஆசிரியருக்கு அன்றாடம் ஏற்படும் மனப்போராட்டத்தின் விளைவாக அச்செய்தியை எடுத்துக்கூற ஆசிரியரால் கையாளப்படும் உத்திகள் இன்றைய மொழியை, அதன் வளத்தினைப் பெரிதும் பிரதிபலிப்பதாக அமைகின்றன. ஒரு நிலைபேற்று மொழியை உருவாக்குவதில் நாளிதழுக்கும் சிறந்த பங்குண்டு. இருப்பினும், பிறமொழிச் செய்தியை மொழிபெயர்த்தல், அதன் கருத்திற்கேற்பப் புதுச்சொற்களை உருவாக்கல் போன்றவைகளில் நாளிதழ் ஆசிரியரின் பங்கு குறிப்பிடத்தக்கதாக அமைகிறது.

இரட்டை வழக்கில் எழுத்து வழக்கு மற்றும் பேச்சு வழக்கின் பொதுமைக்கூறுகள், சிறப்புக்கூறுகள் ஆகியவற்றை எடுத்துக்காட்டவும், இருவழக்குகளும் பயன்பாட்டில் ஒருமித்துவரும் நிலைகளை உறுதிப்படுத்தவும் மேற்கொண்டு விரிவான நோக்கில் கருதப்பட வேண்டியது அவசியம். இத்தகைய விரிவான விளக்கங்கள் மொழி வளர்ச்சிக்கும், மொழிப்பயன்பாட்டின் ஆற்றல் மேம்பாட்டிற்கும், கருத்துப் புலப்பாட்டுத்திறன் வளர்ச்சிக்கும் உதவிடும் வகையில் அமையும்.

புதுச்சொற்களையும் புதுக்கருத்துகளையும் செய்தியில் எடுத்தாளும்போது, அவை நிலைபேறடையும்வரை பிறமொழிச் சொற்களின் துணையுடன் கையாள வேண்டும் என்ற அவசியத்தை உணர்ந்து, மக்களுக்குச் செய்தி எளிதில் புரிய வேண்டும்

என்பதற்காகவும் விரிவான விளக்கத்திற்காகவும் அடைப்புக்குறிக்குள் பிறமொழிச் சொற்களைக் கையாள்கின்றன. இப்பயன்பாடு தினமணிக்கேயுரிய தனித்தன்மையாகும்.

தினமலர், தினமணி, தினத்தந்தி ஆகிய நாளிதழ்களின் மொழிநடையை இனம்காண்பதன் வாயிலாக, இந்நாளிதழ்களின் மொழிநடையில் இரட்டை வழக்கு (diaglossia) மற்றும் பிறமொழிக் கலப்புப் பயன்பாடு தொடர்ந்து இருந்து வருவதைக் காணமுடிகிறது. மேலும், குறிப்பிட்ட சில செய்திச் சூழலால் இவ்விரு வழக்கும் அல்லாத, நாளிதழ் பயன்பாட்டிலுள்ள பேச்சு வழக்கு, எழுத்து வழக்கு மற்றும் பிறமொழிக் கலப்பு போன்றன கலந்த (triglossia) மூன்றாவது வழக்கும் பயன்படுத்தப்படுவதைக் காணமுடிகிறது.

அனைத்துத் தரப்பினரும் படித்துப் புரிந்துகொள்ளும் வகையில் எழுத்து வழக்கு, பேச்சு வழக்கு இரண்டிலும் எளிமையாக்கமும் நிலைபேறாக்கமும் எழுத்துச் சீர்த்திருத்தமும் ஏற்பட்டுள்ளன. கலைச்சொல் உருவாக்கத்தில் ஒலிபெயர்ப்பு, மொழிபெயர்ப்பு, தன்னினமாக்கம் ஆகியவற்றோடு புதுச் சொல்லாக்கமும் காணப்படுகின்றது.

பல்வேறு சமுதாயப் பிரிவினருக்கும் ஏற்றவகையில் நாளிதழின் மொழிப்பயன்பாட்டில் எளிமையாக்கமும் தன்னினமாக்கமும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இது மொழியின் கருத்துப் புலப்பாட்டுத்திறன் வளர்ச்சிக்குத் துணைபுரிவதாக அமைகிறது. பொதுவாக மக்களது கருத்துகளை வெளியிடும்போது எளிமையான நடையில் வாசகர் எழுதுவதால் அதை அப்படியே நாளிதழில் வெளியிடும் போக்கு காணப்படுகிறது. இதனால் வாசகர் கருத்துக்கு முக்கியத்துவம் அளிப்பதோடு அவர்களின் உணர்வினைப் புலப்படுத்த நாளிதழ்கள் கருவிகளாக அமைகின்றன என்றால் அது மிகையாகாது.

நாளிதழ் மொழிநடை பெரும்பாலும் பேச்சுமொழி நடையாகவே உள்ளது. பிறமொழிச் சொற்கள், பேச்சுமொழிச் சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள் அனைத்தும் கலந்த ஒரு கலப்பு மொழிநடையைப் பயன்படுத்துகிறது என்றால் அது மிகையாகாது.

தினமலர் நாளிதழ் அதிகமான ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்திச் செய்தி வெளியிடுகின்றது. பிறமொழிச் சொற்களைக் கடன்வாங்கும்போது எவ்வித மாற்றமும் இன்றி மூலமொழியில் (source language) கடன்சொற்கள் எவ்வாறு ஒலிக்கப்படுகின்றனவோ அவ்வாறே எழுதப்படுகின்றன. இந்நாளிதழில் தனித்தமிழ் என்ற நோக்கில் சொற்கள் கையாளப்படுவதில்லை.

தமிழ் மொழிச் சொற்களுக்கு நிகராக ஆங்கில மொழிச்சொற்கள் கையாளப்படுகின்றன. அனைவரும் செய்தியைப்

படித்து அல்லது கேட்டுப் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகப் பேச்சுமொழி மற்றும் பிறமொழிச் சொற்கள் மேலும் வழக்குச் சொற்களைப் பயன்படுத்திச் செய்தி அமைக்கப்பட்டுள்ளது. தமிழ்ப் பெயர்களை எழுதும்போதுகூட ஆங்கில எழுத்துக்களை இணைத்து எழுதுகின்றது.

தினமலர் நாளிதழ் வாக்கிய அமைப்பில் பல இடங்களில் எழுவாய், செயப்படுபொருள், பயனிலை என்ற இலக்கண அடிப்படையில் தொடர்கள் காணப்படுவதில்லை. சுவை மற்றும் எளிமை ஆகியவற்றிற்காக இவ்வாறு அமைக்கப்படுகின்றது. அயல்மொழிச் சொற்களையும் பேச்சுமொழிச் சொற்களையும் பயன்படுத்துவதன் மூலம் தமிழ் மொழி வளத்துக்குத் தினமலர் உரமூட்டுகிறது. பெரும்பாலான தலைப்புச் செய்திகளில் உண்மைப் பொருளிலிருந்து மாறுபட்ட சொற்களைப் பயன்படுத்தித் தலைப்புச் செய்தி இடம்பெற்றிருப்பதைக் காணமுடிகிறது.

மரபுத்தொடர், எதுகை மோனையுடன் சொற்கள் மற்றும் சொல்லமைப்புகள், செய்தியை விவரித்து அதை வெளியிடக் கையாளும் உத்திகள் போன்றவற்றால் இந்நாளிதழின் நடை மற்ற நாளிதழிலிருந்து வேறுபட்டு அமைகிறது. நம்நாட்டுச் செய்திகளை அதிகமாக உள்ளடக்கிய தனித்தன்மையுடைய தமிழ் நாளிதழாகத் தினமலர் நாளிதழ் உள்ளது.

தினமலர் நாளிதழில் எழுது முறை மரபு மீறல், உருபன் மரபு மீறல், பொருண்மை மரபு மீறல், உண்மைப் பொருளிலிருந்து மாறுபட்ட சொற்களை வாக்கியங்களில் (தலைப்புச் செய்திகளில்) பயன் படுத்துதல், சொல்வரிசை மாறுபாடு போன்ற இலக்கண மரபு மீறல்கள் சில காணப்படினும், விரிவான செய்திகளை உள்ளடக்கிய மக்கள் நாளிதழாக விளங்குவது குறிப்பிடத்தக்கதாகும்.

தினமணி நாளிதழில் புதுச் சொற்களும், புதுக் கருத்துக்களும் இடம்பெறுகின்றன. சில இடங்களில் தமிழ்மொழி மரபிற்கு ஏற்ப அயல்மொழிச் சொற்களை மொழிபெயர்த்தும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தினமணி நாளிதழ் புதுச் சொற்களையும், புதுக்கருத்துக்களையும் கையாளும்போது அவை நிலைபேறடையும் வரை பிறமொழிச் சொற்களின் துணையுடன் கையாளுதல் அவசியம் என்பதை உணர்ந்துள்ளது. இந்நிலையில் புதுச்சொற்களையும் புதுக்கருத்துக்களையும் கையாளும்போது பிறமொழிச் சொற்களை அடைப்புக் குறிக்குள் எழுதிச் செய்தியை வெளியிடுகின்றது. இவ்வாறு பயன்படுத்தும் நிலையில் அப் புதுச்சொற்கள், புதுக்கருத்துக்கள் மக்கள் மனதில் எளிதில் பதியும் என்பதாலும் மொழி வளர்ச்சியினைக் கருத்தில் கொண்டும் பயன்படுத்துகின்றது.

தினமணி நாளிதழின் ஒவ்வொரு இதழிலும் சிறப்புக் கட்டுரைகள் பொதுக் கட்டுரைகள் என இரு வகையான கட்டுரைகள் வெளிவருகின்றன. இவ்வாறு வெளிவரக்கூடிய கட்டுரைகள் பிறமொழிக் கலப்பின்றி இலக்கிய நடையில் வெளிவருகின்றன. இக்கட்டுரைகளில் ஓரிரு இடங்களில் புதுச்சொற்களும் பல இடங்களில் பழைய வழக்கிழந்த சொற்களும் எடுத்தாளப்படுகின்றன. ஆங்கில நாளிதழ்களுக்கு இணையாகக் கட்டுரைகள் தமிழில் தினமணி நாளிதழில் மட்டுமே வெளியிடப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

தினத்தந்தி நாளிதழில் கருத்தை வெளிப்படுத்தும் ஆற்றல் குறித்து விரிவாக நோக்கினால், ஆங்கிலச் சொற்களின் பயன்பாடு அதிகமாகக் காணப்படுகின்றது என்று கூறலாம். எழுத்து வழக்குகள் தமிழ் மரபை ஒட்டியே அமைந்துள்ளன. பேச்சுமொழிச் சொற்கள் அதிகம் கையாளப்படுவதில்லை. தற்போது நல்ல தமிழ் நடையில் செய்திகள் வெளிவருகின்றன. அயல் மொழிச் சொற்களைப் பயன்படுத்தும் நிலையில் அவற்றைத் தமிழ்ப்படுத்திப் பயன் படுத்துகிறது.

மொழி முதலில், மொழி இறுதியில் வருவது மரபாகாத மெய்யெழுத்துக்கள் சொற்களில் வரும்பொழுது அவற்றை அ,இ,உ ஆகிய தமிழ் எழுத்துக்களை மொழி முதலிலும் மொழி இறுதியிலும் இணைத்துத் தமிழ்படுத்திப் பயன்படுத்துகிறது. மேலும், வெளிநாட்டுச் செய்தியைப் பெருமளவில் வெளியிடுகிறது தினத்தந்தி நாளிதழ்.

ஆங்கிலம் மற்றும் வடமொழிச் சொற்களைப் பயன்படுத்துவதற்குச் செய்திகளை விரைவாகக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணமே ஒரு காரணமாக இருக்கலாம். சில செய்தித் தலைப்புகளில் உருபன் மரபு மீறப்பட்டுள்ளது. அதாவது ஒரு குறிப்பிட்ட பொருளில் பயன்படுத்தப்பட வேண்டிய உருபு வேறொரு பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளதையும் தலைப்புகளில் காணமுடிகின்றது. ஆங்கிலமும் தமிழும் கலந்த அடைச்சொற்கள் கையாளப்பட்டுள்ளன. மேலும் தினத்தந்தி நாளிதழின் மொழிநடையில் பேச்சு வழக்குச் சொற்கள் அதிகம் கையாளப்படுவதில்லை.

மற்ற நாளிதழ்களைக் காட்டிலும் தினத்தந்தி நாளிதழில் சொற்களையும், வாக்கிய அமைப்புகளையும் எளிமையாக்கம் செய்து வெளியிடுகின்றது. பொதுவாக இந்நாளிதழ் மொழிநடை அனைவரும் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் எழுதப்பட்டுள்ளது.

**இலக்கண மரபு மீறல்**

மொழிக்கே உரிய இலக்கண விதிகளை மீறி, ஆசிரியர் செய்திகளில் மொழியைப் பயன்படுத்துவதால் அச்செய்தி ஆற்றல்

மிக்கதாக விளங்குகின்றது. மொழியின் ஒலியன், உருபன், தொடர், பொருள் போன்ற அனைத்து நிலைகளிலும் இலக்கண மரபு மீறல் காணப்படுகிறது. இவ்வகை மரபுமீறல் படிப்போரைக் கவர்வதற்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

ஒரு குறிப்பிட்ட பொருளில் பயன்படுத்த வேண்டிய உருபை வேறொரு பொருளில் நாளிதழ்கள் கையாளுகின்றன. அப்புதுச்சொல் வலிமையுடையதாகவும், வாசகர்களுக்கு உற்சாகத்தை ஏற்படுத்துவதற் காகவும், வாசகர்கள் விரும்பிப் படிக்க வேண்டும் என்பதற்காகவும் அமைக்கப்படும் சொற்கள் கவர்ச்சியாக இருப்பதோடு, அச்சொல்லாக்கம் ஏற்றவகையில் அமையவும், மொழியில் ஒழுங்கின்மையைக் குறைக்கவும் போன்ற இத்தகைய காரணங்களுக்காகத் தமிழ் நாளிதழ்களில் உருபன் மரபு மீறப்பட்டிருக்கலாம்.

**எளிமையாக்கம்**

மொழிப் பயன்பாட்டில் எளிமைக்காக அயல்மொழிச் சொற்கள் அதிக அளவில் பயன்படுத்தப்படுகின்றன. நாளிதழ்கள் வாயிலாகத் தமிழ் மொழியில் ஏராளமான புதுச்சொற்கள் உருவாக்கப்பட்டிருப்பதை அறிய முடிகின்றது. இருப்பினும், இன்னும் ஏராளமான புதுச்சொற்கள் உருவாக்கப்பட வேண்டியது அவசியம்.

ஆங்கில மொழி அகராதியில் அன்றாடம் புதுப்புதுச் சொற்கள் சேர்க்கப்பட்டு வருகின்றன. அதனால் ஆங்கில மொழி விரிவடைகிறது. அதுபோல் தமிழ் அகராதியிலும் ஏராளமான சொற்கள் சேர்க்கப்பட வேண்டிய அவசியம் உணரப்படும் தருணம் ஏற்பட்டுள்ளது. மொழியில் அதன் பயன்பாட்டில் காலத்திற்கேற்பப் புது இலக்கணம் உருவாக்கப்பட வேண்டும். அந்தவகையில், தமிழ் மொழி மென்மேலும் வளர்ச்சியடையும் நிலை உருவாகும்.

தமிழ் நாளிதழில் வரும் செய்தியின் தரம், செய்தியை வெளிப்படுத்தும் பாங்கு, கையாளப்படும் உத்தி ஆகியவை விளக்கமாகவும், விரிவாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. நாளிதழ் மொழிநடை, அதன் பயன்பாட்டு உத்திகள், நடையியற்கூறுகள் ஆகியவற்றை இணைத்துப்பார்த்து ஒப்பாய்வு செய்து அதன்வாயிலாக வெளிப்பட்ட உண்மைகள் இங்கு எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

நாளிதழ் மொழிநடைப் பயன்பாட்டில், சொல்லிலும் பொருளிலும் பல குறிப்பிடத்தகுந்த மாற்றங்கள் எவ்வாறு ஏற்பட்டுள்ளன என்பதும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. நாளிதழ் மொழிநடையை ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் கொண்டு வருதல் இயலாததாகும். இருப்பினும், நாளிதழ் மொழியமைப்பு குறிப்பிடத்தக்க பல சிறப்பியல்புகளைப் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. நாளிதழ் மொழி

நடையை உற்று நோக்கியதன் வாயிலாக அவற்றின் சிறப்பியல்புகளை ஓரளவு வெளிப்படுத்த முடிந்தது.

நாளிதழ்களில் பயன்படுத்தப்படும் மொழிக்கூறுகளை ஒருங்கே தொகுத்து அவற்றின் வழியாக மொழியமைப்பு நிலை, மொழிநடைப் பயன்பாட்டுநிலை குறித்த விளக்கம் செம்மையான முறையில் தரப்படுத்தப்பட்டுள்ளன. மேலும், இரட்டை வழக்கு இடம்பெறும் சூழல்கள் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளன. ஒப்பாய்வு அணுகுமுறை மூலம் கொள்கைகளின் அடிப்படையில் மொழி அமைப்பு விளக்கப்பட்டுள்ளது. மொழிப்பயன்பாட்டுத் தன்மை, நாளிதழ் மொழிநடையின் பயன்பாட்டுவழி விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. மாறிவரும் சமுதாயச் சூழலுக்கு ஏற்ப எவ்வாறு மொழிப்பயன்பாடும் மாறுகிறது என்பது தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

அந்த வகையில் பயனாக்கமொழியியல் நோக்கில் பார்க்கும்போது நாளிதழ்களில் பயன்படுத்தப்பட்டுள்ள மொழிநடை, மொழிப்பயன்பாடு, மொழி அமைப்பு இவற்றில் குறிப்பிடத்தக்க மாற்றத்தைக் காணமுடிகிறது.

சமுதாயத்தால் மொழியும் அதன் பயன்பாடும் மாறுகின்றன. மொழிப்பயன்பாட்டில் ஏற்படும் மாற்றம் அம்மொழியின் வளர்ச்சியில் மாற்றத்தை உருவாக்குகிறது. மொழியைப் பயன்படுத்தும் சமுதாயத்தினரிடையே பயன்பாட்டுச் சூழல் வேறுபடுகின்றது. இந்நிலையில் இதழ் ஆசிரியர்கள் மொழியை எவ்வாறு கையாளுகின்றனர் என்பதை அறிந்துகொள்வதற்கும் எவ்வாறெல்லாம் சொற்பெருக்கத்தையும் சொல்லாக்கங்களையும் கையாண்டுள்ளனர் என்பதை அறிந்து கொள்ளவும் முடியும். இத்தகைய சொற்பெருக்கமும், சொல்லாக்கமும் இன்று மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் துணைநிற்பன. மொழிநடை மற்றும் மொழி வளர்ச்சிக்குத் துணைபுரியும் வகையில் இந்நூல் வடிவம் பெற்றுள்ளது.

தினமணி, தினமலர், தினத்தந்தி ஆகிய நாளிதழ்களில் சூழலுக்கேற்பப் பயன்படுத்தப்படும் மொழி நடை, மொழிப்பயன்பாட்டு உத்தி ஆகியவற்றையும் இனங்கண்டு நாளிதழ்கள் மொழிப்பயன்பாட்டின் முன்மாதிரிகளாக விளங்கும் சூழலில் அவை மொழியை எவ்வாறு பயன்படுத்தலாம் என்பதை எடுத்துரைக்கும்விதமாக இந்நூல் அமைந்துள்ளது.

கீழ்க்குறிப்பிட்ட மூன்று நாளிதழ்களின் மொழிநடை, மொழிப்பயன்பாட்டை விளக்குவதன் மூலமாக ஒவ்வொரு நாளிதழும் எவ்வகையில் ஒன்றுகொன்று வேறுபடுகின்றன என்பதைக் கண்டறிய முடிகிறது.

மொழியைப் பயன்படுத்தும்விதம், மொழிநடை உத்திகள் ஆகியன மொழியைப்பயன்படுத்துவோரால் பின்பற்றக்கூடும் என்பதால் அவற்றின் அமைப்பை அறிந்து கொள்வதற்கு இந்நூல் பயன்தருவதாக அமையும்.

**கருத்துரை**

அயல்மொழிச் சொற்களைக் கையாளுவதில் தினமலர் தினமணி தினத்தந்தி ஆகிய மூன்று நாளிதழ்களையும் ஒரே தரத்தின் கீழ்க்கொண்டு வரலாம். அச்சொற்களை மொழிபெயர்த்துப் பயன்படுத்தும்போது அதிகமாக வரும் அயல்மொழிச் சொற்களை சில இடங்களில் தவிர்க்க முற்படலாம். மக்கள் வழக்கில் பயன்படுத்தப்பட்டுவரும் தமிழ்ச் சொற்களை, பிறமொழிச் சொற்களுக்குப் பதிலாக எழுதலாம்.

தமிழ் மொழியில் காலத்தின் கட்டாயத்தால் பல கலைச் சொற்கள் அன்றாடம் உருவாக்கப்பட்டு வருகின்றன. அக்கலைச் சொற்களை வகைப்படுத்தி, முறைப்படுத்தி, முறையாகத் தரப்படுத்தப்பட வேண்டியது அவசியமாகிறது. அதற்கேற்பத் தமிழ் மொழி வளர்ச்சியடையும். அப்போதுதான் மொழி வளர்ச்சி முறையானதோர் இலக்கை நோக்கிப் பயணிக்கும்.

எனவே, ஒரு சமுதாய வளர்ச்சியினை எடுத்துக்காட்ட முக்கியக் கருவியாக உள்ள மொழியினை அதன் இன்றைய பயன்பாட்டிற்கு ஈடுகொடுக்கும் வண்ணம் வளப்படுத்த வேண்டியது அவசியமான ஒன்று என்றால் அது மிகையாகாது. அதற்குப் பல்வேறு அமைப்புகளும் நிறுவனங்களும் ஒருங்கிணைந்து முனைப்போடு நாளும் செயல்பட வேண்டும். குறிப்பாக, ஆங்கில மொழியில் பலப்பல புதுச் சொற்கள் நாளும் வந்துகொண்டே இருப்பதுபோல, தமிழ் மொழிக்கு வளம் சேர்க்கும் வகையில் புதுச்சொல் நாளும் உருவாக்கப்பட வேண்டும். தமிழ் நாளிதழ்கள் எண்ணற்ற புதுச்சொற்களை உருவாக்குவதனால் அவற்றின் பயன்பாடு மக்களிடையே அதிகமாக வாய்ப்புள்ளது. அதன் காரணமாகத் தமிழ் மொழியில் பெரிய அளவில் சொல்லகராதி உருவாகும்.

மொழி வளர்ச்சியைக் கணக்கிட நாளிதழ் மொழி நடையை ஓர் அளவு கோலாகக் கொள்ளமுடியும். இவற்றைக் கருத்தில் கொண்டு நாளும் தமிழ் நாளிதழ்கள் தமிழ் மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் உறுதுணையாகச் செயல்படுகின்றன என்று கூறினால் அது மிகையல்ல. எனவே, தமிழ் மொழியை நாளும் வளர்ச்சிப் பாதையில் முன்னோக்கி இட்டுச் செல்லும் முக்கியப் பணியில் தமிழ் நாளிதழ்கள் செயற்பட்டு வருகின்றன. தமிழ் மொழி வளர்ந்து வருவதை நாம் நாளிதழ் வாயிலாகக் கண்டு உணரும் தருணம் ஏற்பட்டுள்ளது.

நாளிதழ்கள் மொழிப்பயன்பாட்டின் முன்மாதிரியாக விளங்கும் சூழலில், அந்நாளிதழ்கள் பயன்படுத்தும் மொழியில், பிறமொழிச் சொற்களின் பயன்பாட்டைக் குறைத்தும் பேச்சுவழக்கு மற்றும் பண்பற்ற சொற்களைத் தவிர்த்தும் எழுத வேண்டும். மேலும், நாளிதழ்களின் மொழிநடைப் பயன்பாட்டில் இலக்கண மரபுமீறல்களைத் தவிர்க்க வேண்டும். ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச்சொற்களையும் கலைச்சொற்களையும் உருவாக்குவதோடு மட்டுமல்லாமல் ஆங்கிலச் சொற்களுக்கு நிகராக இருக்கும் தமிழ்ச் சொற்களைத் தவிர்க்காமல் அவற்றைப் பயன்படுத்துவதற்கு நாளிதழ்கள் முன்வரவேண்டும்.

அந்தவகையில், தமிழ் மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் உறுதுணையாக உள்ள தமிழ் நாளிதழ்கள் நாட்டின் வளர்ச்சிக்கும் பெரிதும் உறுதுணையாக இருந்து வருகின்றன. எனவே, தமிழ் நாளிதழ்கள் நாட்டின் வளர்ச்சிப் பாதையைப் பெரிதும் கணிக்கும் கருவியாகவும் உள்ளன. மொழி அதன் பயன்பாட்டிற்கேற்ப வளம்பெறும். மொழிக்கு வளம்சேர்க்கும் முகமாகப் பெரும்பாலான மக்களின் அன்றாட பயன்பாட்டில் இருந்துவரும் நாளிதழ்கள் நாளும் பல மொழிநடை உத்திகளை உருவாக்குவதன் வாயிலாகத் தமிழ் மொழி வளரப் பெரும் பங்காற்றி வருவது நாளிதழ்களே என்றால் அது மிகையாகாது.

தமிழ் நாளிதழ்ப் பணி வளர்க!

நாளும் நற்றமிழ் ஓங்குக உலகமெலாம்.

## துணைநூல்கள்


1. அரங்கசாமி, பழநி. **செய்தி உலகம்,** முத்தமிழ் நிலையம், மதுரை, 1975.
2. ஆதித்தனார்., சி.பா. **பத்திரிக்கை எழுத்தாளர் கையேடு,** ராணி முத்து வெளியீடு, சென்னை, 1978.
3. இராதா செல்லப்பன், **கலைச் சொல்லாக்கம்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.
4. இராதா செல்லப்பன், **கலைச் சொல்லாக்கம்,** அறிவுப் பதிப்பகம், சென்னை, 2006.
5. இராஜேஸ்வரி சற்குணன் &கிருஷ்ணன் இராமசாமி, "பன்மொழிச்சூழலில் புதினத்தில் காணப்படும் நடையியல் வேறுபாடுகள்: ஒரு சமுதாய மொழியியல் நோக்கு", மலேசியப் பண்மொழிச் சூழலில் தமிழ், (தொ.ஆ.) கருணாகரன், கி. மற்றும் பலர், மலயாப் பல்கலைக்கழகம், கோலாம்பூர், 2011.
6. கருணாகரன், கி. **மொழி வளர்ச்சி,** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1981.
7. கருணாகரன், கி. **அறிவியல் உருவாக்கத் தமிழ்,** மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1989.
8. கருணாகரன், கி. & ஜெயா,வ. **குறள் மொழியும் நெறியும்,** மணியம் பதிப்பகம், குறிஞ்சிப்பாடி, 1993.
9. கலைவாணி, சோ. **பத்திரிக்கை கலை,** சாரதா வெளியீடு, வேலூர், 1988.
10. குருசாமி, மா.பா. **இதழியல் கலை,** ஸ்ரீ சக்தி பைன் ஆர்ட்ஸ், சிவகாசி, 1988.
11. சண்முகம், செ. **கருத்தாடல் கருவும் உருவும்,** மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2002.
12. சண்முகம், செ.வை. **'பேச்சும் எழுத்தும்'** மொழியியல், 1989:3.
13. சண்முகம், சி. "அறிவியல் உரைக்கோவை சில குறிப்புகள்" **அறிவியல் உருவாக்கத் தமிழ்,** மாணிக்க வாசகர் பதிப்பகம், சென்னை, 1989.
14. சாமி, அ.மா. **தமிழ் இதழ்கள் தோற்றம்–வளர்ச்சி,** நவமணி பதிப்பகம், சென்னை, 1987.

15. சிதம்பரம், கு. இரம்யாராஜு, இரா. "பழமொழிகளும் மொழி பெயர்ப்புச் சிக்கல்களும்", **பிறதுறை தமிழியல்,** (பதி.) காசிராாசன், இரா. மற்றும் பலர், ஞாலத்தமிழ் பண்பாட்டு ஆய்வு மன்றம், மதுரை, 2004.

16. சுப்பிரமணியன், சா.வே. **இளங்கோவின் இலக்கிய உத்திகள்,** மோகன் பதிப்பகம், சென்னை, 1984.

17. சேகர்.க, **தமிழ் வாரஇதழ்களில் பிறமொழிக்கலப்பு,** பாரதிபாலா பதிப்பகம், காரைக்கால், 2001.

18. சேதுமணியன், **மொழிபெயர்ப்பியல் கோட்பாடுகளும் உத்திகளும்,** சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1990.

19. ஞானமூர்த்தி, தா.ஏ. **இலக்கியத் திறனாய்வியல்,** ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1990.

20. தங்க.மணியன், **பத்திரிக்கை மொழிநடை,** மாணிக்கம் பதிப்பகம், திருச்சி, 1986.

21. தங்க.மணியன், **பத்திரிக்கையியல்,** மாணிக்கம் பதிப்பகம், திருச்சி, 1986.

22. சுப்பிரமணியன், பா.ரா. **தமிழ் நடைக் கையேடு,** மொழி வெளியீடு, சென்னை, 2001.

23. நீதிவாணன, ஜெ. **நடையியல்,** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983.

24. மணிமாறன், ப. **தமிழ் நாளிதழ்களில் மொழிபெயர்ப்புக் கலை,** அருக்கன் பதிப்பகம், தசாவூர், 1999.

25. மீனாட்சி சுந்தரம், கா. "தமிழ் மொழிபெயர்ப்பில் ஒலி பெயர்ப்பு தேவையா?", **ஆய்வுக்கோவை** – அறிவியல் தமிழாக்க முதல் கருத்தருங்கு கட்டுரை, பூசாகோ கலைக்கல்லூரி, கோவை, 1973.

26. முகம்மது உசேன், மு.க. **தமிழ் இதழியல்,** அற்புதா பதிப்பகம், கும்பகோணம், 1989.

27. முத்துராசன், கு. **இதழியல் வளர்ச்சியும் மொழிபெயர்ப்பும்,** முல்லை அரசன் பதிப்பகம், திருவண்ணாமலை, 1994.

28. மோகன், இரா. **இலக்கியச் சுடர்,** ஓரியண்ட் லாங்மேன் லிட், சென்னை, 1992.

29. ஜெயா, வ. பாரதி மொழிநடை, ஜெயா பதிப்பகம், மதுரை, 1989.

30. ஜெயா.வ. "அண்ணாவின் குறும்பு தினங்களின் மொழிநடை" **மொழியியலும் இலக்கியமும்,** (பதி.) சி. சிவசண்முகம் மற்றும்

பலர், மொழியியல் துறை, பாரதியார் பல்கலைக்கழகம், கோவை, 2010.

அகராதி

1. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, (தமிழ்-தமிழ்-ஆங்கிலம்) மொழி வெளியீடு, சென்னை, 1992.

ஆய்வேடுகள்

1. பாலகிருஷ்ணன், ஓ. "அறிவியல் தமிழ் மொழியாக்க நெறிமுறைகள்" முனைவர்பட்ட ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர், 1990.
2. மேரிரோஸ்லின், தமிழில் அறிவியல் கருத்தாடல், முனைவர்பட்ட ஆய்வேடு, சென்னை பல்கலைக்கழகம், சென்னை, 1992.

ஆங்கில நூல்கள்

1. Baker, C. **Foundation of Bilingual Education**, UK : Multilingual Matter, 1996.
2. Bruce Westley, **News Editing**, Oxford & IBH Publishing Co., 1968.
3. Crystal, D. **The Cambridge Encyclopedia of Language.** UK: Multilingual Meter, 1977.
4. Enkvist, N.E. (et.al) **Linguistics and Style**, Oxford : Basil Blackwell. 1984.
5. Fasold Ralph, **The Socio linguistics of Society**. Oxford : Basil Blackwell, 1984.
6. Ferguson, **Language Structure and Language use : Selected and Introduction** by Anwars, Dil.California, 1971.
7. Hockett, C.F. **A Course in modern linguistics**, The macmillan company, Newyork, 1958.
8. Hymes, D. **Studies in the History of Liguistics**, Tradition and Paradigm Blomington, 1974.
9. Ramaswami, N. **Diglossia Formal and Informal Tamil**, CIIL Publication, Mysore, 1977.
10. Romaine, S. **Language in Society: An introduction to Sociolinguistics**, Oxford: University Press, Oxford, 2000.
11. Schiffman, H.F. **A Reference Grammar of Spoken Tamil**, Cambridge University Press, London, 1999.
12. Weinreich, U. **Language in Contact : Findings and Problems**, The Hauge, Mouton, 1968.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை – 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி–1) | 135.00 |
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி–2) | 140.00 |
| திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும் | 135.00 |
| பாணர் இனவரைவியல் | 110.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை | 70.00 |
| உதயணகுமாரகாவியம் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள் | 50.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி–1) | 175.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி–2) | 200.00 |
| விடுதலைச் சிந்தனையாளர் வ.உ.சிதம்பரனார் தமிழியல் பண்புகள் | 80.00 |
| சுவடிப்பதிப்பு முன்னோடிகள் | 60.00 |
| திருமுறைகளில் அகப்பொருள் மரபுகளும் தொண்டு நெறிகளும் | 75.00 |
| பெரியாரிய நோக்கில் மு.வ. | 55.00 |
| திணை வரலாறு | 70.00 |
| நரம்புக் கருவிகள் | 70.00 |
| மொழிஞாயிறு தேவநேயப்பாவாணரின் பன்முக ஆளுமை | 50.00 |
| சிந்தனைச்சிற்பி ம.சிங்காரவேலரும் தந்தைபெரியாரும் | 105.00 |
| பெ.நா.அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள்–தொகுதி–3 | 235.00 |
| கவிஞர் புதுவைச் சிவத்தின் சீர்திருத்த நாடகங்கள் | 120.00 |
| சித்தர்களின் நெறியில் வேதாத்திரிய யோகம் ஓர் ஒப்பாய்வு | 105.00 |
| சேக்கிழாரும் இசைத்தமிழும் | 50.00 |
| தமிழில் இதழியல் | 270.00 |
| பொதுவுடைமை இயக்க இதழ்கள் | 115.00 |
| உலகச் செம்மொழிகள் | 90.00 |
| தலித் அறம் | 45.00 |
| தமிழ் இசுலாம் உருவாக்கமும் திருக்குர்ஆன் தமிழ் வாசிப்பும் | 45.00 |
| ஆய்வியல் சிந்தனை | 45,00 |
| சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல் | 80.00 |
| பெயரியல் | 55.00 |
| மதங்களும் மனிதநேயமும் | 90.00 |
| உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும் | 85.00 |
| சிலப்பதிகார இலக்கியக் கூட்டமைப்பு | 160.00 |
| பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதார சிந்தனைகள் | 65.00 |
| தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம், அறிவியல், சமூகம் | 70.00 |
| கிறித்தவக் காப்பியங்கள் | 225.00 |
| சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் அன்றும் இன்றும் | 50.00 |
| குலோத்துங்கனின் கவிதை வளம் | 60.00 |

---

**757** தமிழ் நாளிதழ்களின் மொழிநடை 70.00